### iv. பிரகரணசமம்.—ARGUMENTS THAT TELL EQUALLY ON BOTH SIDES.

**139.** எதற்குப பிரதிபட்சமான வேருகும ஏது வுண்டு அதுவே பிரகரணசமம், சற்பிரதிபட்ச மென்றுஞ் சொல்லப்படும. எஙஙனம; "சத்தம அநித்தியம; நித்தியதருமந தோன்றுமையால" "சத்தம நித்தியம; அநித்தியதருமந தோனறுமையால" எனபது.

இஙகே சாததிய விபரீதாாத்ததைச சாதியா நினற சமானபலமாகிய வேறு அநுமானம பிரதிபட்ச மெனறு சொல்லப்படும. யாது துல்லிய (சம) பல மனறு; அது பிரதிபடசமன்று.

(கு-ரை) ஈண்டுள்ள இரண்டேதுவும தமமுள சமான பலமுடையனவாயிருததலின அவை பாஸபரம் (ஒன்றறகொன்று) பிரதிபட்சமாம், ஆஙஙனமிருபபதே சற்பிரதிபடசமாம. அஙஙனமிலலா ஏது சறபிரதிபடச ஏதுவாகாதெனக இதுபறறி இநநூலின 73, 74-வது பககஙகளிலும, 96, 97-வது பககஙகளிலும எழுதப்பட்டிருககினறமை காணக.

அங்ஙனமனறே, (சாததிய) விபரீததிறகுச சாதக (அநுகூல)மான அநுமானம உபஜீவியம (ஜனகம-உண்டுபண்ணுவது), உபஜீவகம (ஜனனியம-உண்டாவது), அநுபயம (ஜனக ஜனனியமாகாதது) என மூவகையாம. அவறறுள,

முதலது (உபஜீவியம) பாதகம (கெடுபபது); வலிமையையுடையதால. எஙஙனம? பரமாணுககள அநித

தியம்; மூர்த்தமா (வரம்புபட்டபரிமாண முடையதா) கையால்; கடம்போல.

இதில (இவ்வநுமானததில்) *தருமியை (படசமாகிய பரமாணுககளை)க கிரகிககும பிரமாணம் முநதியதாயும் வலிமையுடையதாயு மிருககினறது. அதுவும (பரமாணுவைக கிரகிககும பிரமாணமும) படசததிற(தருமிக)குச் சாதகமாயிருபபதால உபஜீவியம.

(கு-ரை) ‡ பிரத்தியட்சப் பிரமாணததினல் அனுமானப் பிரமாண முணடாவதுபோனறு பரமாணுகக ளுணடெனனும அநுமானததால் அவை அநித்தியமெனனு மநுமானமுணடாவதாயிருததலின இவவிரணடனுள முனனது உபஜீவிய (காரண)மும பினனது உபஜீவக (காரிய)முமாம.

---

*"பிரமாணம் வருமாறு—திரியணுகம் அவயவததோடுகூடிய திரவியததாலே ஆககபபடடது, புறவிநதிரியத்தாலே யறியப்படுந திரவியததனமையால், புறவிநதிரியததா லறியப்படுந திரவியத தனமை யாது அது அவயவததோடுகூடிய திரவியததாலே ஆக்கபபடடது, கடமபோல. ஈண்டுத திரியணுகம பககம, அவயவததோடுகூடிய திரவியததாலே ஆககபபடுநதனமை சாததியம, புறவிநதிரியததாலறியபபடுநதிரவியததனமை ஏது, கடம உதாரணம. இதனுல துவியணுகமும பரமாணுவும பெறபபடடன" எனறு தருககாமிா்தங கூறுகினறது.

‡ பிரததியட்சப்பிரமாணம அநுமானபபிரமாணததிற் கேதுவாமெனபதுபற்றி இநநூலின் 53, 54-வது பக்கததிற காணக.

பிரமாணத்தாற் கிரகிக்கப்படாத தருமியான பர மாணுக்களின் அநித்தியத்துவ அநுமானங் கூடாது; ஆசிரயாசித்தியால். (பரமாணுக்கள் அநித்தியம் என்னும்) இவ்வநுமானத்தால் பரமாணு கிரகிப்பிற் குப் பிராமாண்யமு மறியப்பட்டது; *அன்றி (பர மாணுவைக் கிரகிக்கும் பிரமாணமன்றி) இதற் (பர மாணுக்கள் அநித்தியமென்னு மிவ்வநுமானத்திற்) குத் தோற்றமே (உற்பத்தியே) இல்லாமையால். ஆதலால் உபஜீவ்யம் பாதகமே (நாசஞ்செய்வதே).

உபஜீவகம் துற்பலமாதலால் பாத்தியம் (நாசமடை யத்தக்கது).

எங்ஙனம்? இந்த அநித்தியத்துவ அநுமானமே.

மூன்றாவது சற்பிரதிபக்ஷம், துல்லிய (சம) பலத் தால்.

(கு-ரை) தருமியான பரமாணு பிரமாணத்தாற் கிரகிக்கப் படாவிட்டது 'மூாத்தமாகையால்' என்னுமேது ஆசிரயாசித்தமா யிருத்தலின் 'பரமாணுக்கள் அநித்தியம்' என்னுமநுமானம் சமபவி யாது. ஆதலால் பரமாணுவின் கிரகிப்பிற்குப் பிரமாணமும் பரமா ணுக்கள் அநித்தியமென்னும் பிரமாணத்தால் பெறப்பட்டதெனக் உற்பத்தியினறிய பாவபதார்த்தம் நாசமாவதின்மையின் அது நித் தியமாம் பரமாணு நித்தியபதார்த்தமா யிருத்தலின் அதனைச்

* பரமாணுவைக் கிரகிக்கும் பிரமாணம் (பரமாணுக்கள் அநித் தியமென்னும் அநுமானத்திற்குப்) பாதகமா யிருத்தலின் என நீண்டதிகபாடமு முண்டு

சாதித்தற்குரிய பிரமாணம் பரமாணு அநித்தியமென்னும் அநுமானத்தைக் கெடுக்கின்றதெனக்

கண்டுள்ள பிரமாணங்களிரண்டனுள் ஒன்று கெடுப்பதும் மற்றொன்று கெடுக்கப்படுவதுமா யிருத்தலின் இவ்விரண்டும் தம்முள் பிரதிபட்ச முடையனவன்றாம். ஆதலின் இவை சற்பிரதிபட்சமாகா கண்டு உபஜீவிய அநுமானம் கெடுப்பதும், உபஜீவக அநுமானம் கெடுக்கப்படுவதுமாம்.

V காலாத்தியயாபதிட்டம்—ARGUMENTS THAT ARE MISTIMED

140. எதற் (எவ்வேதுவிற்)குப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தால் பக்கத்திற் சாத்தியாபாவம் பரிச்சின்னம் (அறியப்பட்டது) அது காலாத்தியயாபதிட்டம்; பாதிதவிடயமென்றுஞ் சொல்லப்படும்.

எங்ஙனம்? தீ வெம்மையில்லது; காரியத்துவத்தால்; சலம் (நீர்)போல. இங்கே காரியத்துவம் ஏது; அதற்குச் சாத்தியம் வெம்மையில்லது; அதனுடைய அபாவம் (சூடு) கட்சியானே பரிச்சின்னம், துவக்கிந்திரியத்தால் தீயினது வெம்மை (சூடு) கிரகிக்கப்படுகின்றமையின்.

(கு-ரை) இதுபற்றி இந்நூலின் 97, 98-வது பக்கங்களி லெழுதப்பட்டிருக்கின்றமை காண்க 'பிரத்தியட்சாதி' என்றமையின் அநுமான முதலியனவுங் கொள்க

இன்னும் காலாத்தியயாபதிட்டம் எங்ஙனம்?

கடத்திற்குக் கணிகத்துவம் (க்ஷணப்போதிருக்குந்தன்மை) சாதிக்கின்றபோது முன்சொன்ன (வியாபி

யத்துவாசித்ததிற கூறிய) சத்துவம ஏது. எஙகே கணிகததுவம சாததியம அதனுடைய அபாவமாகிய அககணிகத்துவம் (ஸ்திரத்தனமை) தருககாதி சொரூபமான பிரததியபிஞஞாப பிரததியடசததிஞலே பரிசசினனம். யாது எனனுல முனனம அறியபபடடது அதுவே இககடமென்று பூரவ அநுபவநதாற சநிதத (உணடான) வாசனையோடு கூடிய இநதிரியததாறபிறநது பூரவாபர(முனபின)காலததைதயடைநத பிரததியபிஞஞாஞானததால கடததிறகு நிலைமை (ஸ்திரததனமை) துணியபபடும.

(கு-ரை) கடம் கணிகததுவம; சததுவததால் எனபுழிச சததுவததாலெனனு மேதுவிறகுச சாததியம கணிகததுவம, அதனபாவம அககணிகததுவம. அது பிரததியபிஞஞாரூபப பிரததியடசததிஞலே அறியபபடடதாதலின் சததுவததாலென்னுமேது காலாததியயாபதிட்டமாம கடம க்ஷணபபோ திருபபதாயின * அநதக கடம இது எனனும பிரததியபிஞஞாரூபப பிரததியட்சம சமபவிததலாகாது, சமபவிததலின, கடம க்ஷணபபோதிருபபதனறெனபது எணடுத தருககமாம பிரததியபிஞஞாரூபபபிரததியட்சததிநிலககணம இநநூலின 36-வது பககததிலு மெழுதபபட்டிருககினறமை காணக

* அநதககட மிது எனனும ஞானததில அநதககடமெனனு மமசம ஸமிருதிவடிவமா யிருததலின பரோடசமாம, இதுவெனனு மமசம பிரததியடசமாம ஆதலால அநதககட மிதுவெனும ஞானததில கேவலம பிரததியடசததனமையில்லை, ஆனுல அமசபேதததால பரோடசததனமை அபரோடசததனமையெனனு மிரணடுதருமஙகளு மிருக்கினறனவெனப ரொருசாரார.

இந்த அசித்த முதலான ஐந்தும ஏதுபபோலிகள்; (அததறகேறறவாறு) பக்கதருமததுவ முதலான ரூப ஹீனததுவததால (ரூபததாற குறைநதமையால்) ஏது வலலன (ஏதுவாகாதன); (ஆதலின), தனுசாததியத்தைச சாதியா (சாதிககமாடடா).

(கு-ரை) பக்கதருமததுவ முதலிய பஞ்சரூபத்தைபபறறி இநநூலின 71-வது முதல 76-வது பக்கமவரையி லெழுதபபட டிருககினறமை காண்க.

இலககணமாகும் கேவலவியதிரேகியினுடைய அதி வியாபதி அவவியாபதி அசமபவஙகளும் இவறறுளடங குமம (இவவேறுபபோலிகளி லநதாககதமாம). இவ வைநதினு மதிகமலல.

(கு-ரை) கேவலவியதிரேகியேது இலககணமா மெனபது இநநூலின 66, 67, 68, 69-வது பககஙகளிலும, அதிவியாபதி முதலியவறறின்றனமை இநநூலின 4, 5-வது பககஙகளிலு மெழுதபபடடிருககினறமை காணக,

அங்ஙனமனறோ, அதிவியாபதியுடையது வியாபபி யததுவாசிததம, விபககததின நீககமிலலாமையால; (அது)சோபாதிகததுவததாலும (அதிவியாபதியுடையது; விபககததினீககமினமையால). எஙஙனம? கோவிலககணமெனனும பசுததுவததிறகு (அதி வியாபதியுணடு); கோ (ஆ)விறகு அலேதாடி முதலிய உண்மை (இருததல) பிரயோசக (லக்ஷண)மே யன றிப பசுததுவம பிரயோசகமனறு.

அவவியாப்திககுப பாகாசித்தம் எங்ஙனம? கோவி லககணமெனனும சிததிரவனனம கோவிற்குப பிர யோஜகமன்று.

(இங்ஙனமே) அசமபவமும சொருபாசிததம். எங் ஙனம? கோவிலககணமான ஒறறைககுளம் புடைமை.

(கு-ரை) அதிவியாபதி, அவவியாபதி, அசமபவமெனனு முககுறறஙகளுள அதிவியாபதி வியாபபியததுவாசிததததிலும, அவவியாப்தி பாகாசிததததிலும, அசமபவம சொருபாசிதததி லும அநதாககதமா மெனறு கூறபபடடது. வியாபபியத்துவா சித்தம இருவகைததா யிருததலின அவவிரண்டும அதிவியாபதி யுடையன எனறறிவிததறகுச சோபாதிகததுவத்தாலும (உபாதி யோடுகூடிய தனமையாலும) எனறு கூறபபடடது.

(1) சததம கணிகம, சததுவததால, எனபுழிச சததுவததா லெனனும ஏது விபககமாகிய அககணிகததிலும, (2) மலை புகை யுடையது, தீயுடைமையால எனபுழித தீயுடைமையாலெனனும ஏது விபககமாகிய ஒழுககககாயசசிய இருமபிலும நீககமினறி யிருத தலின அவவிரணடேதுவும விபககததின நீககமுடையனவனறும. இவறறின விரிவை இநநூலின 84-வது முதல் 87-வது பககம வரையிற காணக.

கோவிற்கிலககணம பசுததுவம(பசுததனமை) எனனுமிடத்து அது அதிவியாபதிக குறறமுடையதாம; பசுததுவம கோமுறறு மிருபபதனறி யெருமை முதலியவறறினு மிருததலின. பாதம (கால்) நானகால நடபபது பசுவெனபபடும கோ (ஆ) வேயனறி யெருமைமுதலியனவும பசுவாதலறிக.

பாகாசித்தி அவவியாபதிககுறறமுடையதெனபது அது கூறியவிடததே விளஙகிககிடததலறிக. கோவிறகிலககணம சித திரவனனம (சித்திர உருவம) எனனுமிடதது அது அவவியாபதிக குறறமுடையதாம, சித்திரவனனம கோமுறறுமிராது அவறறி னேகதேசததிருததலின.

சொரூபாசித்தம் அசமபவககுறறமுடையதெனபது அது கூறியவிடததே விளஙகிககிடததலறிக. கோவிறகிலககணம ஒற றைக குளமபுடைமை யெனனுமிடதது அஃது அசமபவககுறற முடையதாம, ஒறறைககுளமபுடைமை கோமுறறுமிராது குதிரை முதலியவறறினகணிருததலின

# 14. சலம்—Quibbles.

141. தாறபரியம வேறுபடச சொலலுஞ சொலலுக குப பொருள வேறுகறபிததுத தூடணஞ சொலலு தல சலம் எஙஙனம? நூதன தாறபரியததாற சொல லபபடட நவ (புதிய) கமபளமுடையான இம்மைந தன எனனும வாககியததிறகு வேறுபொருள ஆசங் கிதது (ஆடசேபிதது) ஒருவன இவனுககு நவ (ஒன பது) கமபள மிலலை; வறுமையால இவனுககு இரண டாயினுமிலலை, எஙஙனம ஒனபதெனறு தூடியாநின ருன. *இவவாதி சலவாதியென றறியபபடுகிறுன.

(கு-ரை) ஒருபொருளகருதிக கூறியதறகு வேறுபொருள கறபிததுககொணடு பழிததல சலமாம். அது வாககுச்சலம, சாமா

* இவவாதி சலவாதியாதலால தோறறவன எனறும பாட முணடு

நியசலம், உபசாரசலமென மூவகைப்படும். இந்நூலாசிரியர் கூறியசலம் வாக்குச்சலமாம்.

சர்வதரிசனசங்கிரகம் அக்கபாத தரிசனத்தில் "சப்தத்தின் (சொல்லின்) விரத்தி வித்தியாசத்தினால் நிராகரிப்பதற்கேது சலமாம். அஃதபிதான (பெயர்) விரத்தி வித்தியாசம், தாற்பரிய விரத்தி வித்தியாசம், உபசாரவிரத்தி வித்தியாசமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(1) யாண்டு இரண்டு சத்தியார்த்தம் (சத்திவிருத்தியா லறியப்படும் பதப்பொருள்) சம்பவிக்கின்றதோ ஆண்டு ஓரர்த்தத்தை நிச்சயஞ்செய்யக்கூடிய காரணமின்மையின் அபிப்பிராயத்திற்கு விஷயமன்றியுள்ள ஒருசத்தியார்த்தத்தைக் கற்பித்துப்பழித்தல் வாக்குச் சலமாம். அது இவன் நேபாளதேசத்திருந்து வந்திருக்கின்றான்; நவகம்பளமுடைத்தாயிருத்தலின் என்னுமிடத்து இவனுக்கொன்பதுகம்பள மேது என்று பழித்தல் போலவதாம்.

(2) சாமாநிய சத்தமாயும் சம்பவிப்பதாயுமுள்ள ஆத்தாபிப்பிராயத்தினாற்கூறிய வாக்கியத்திற்குச் சாமாநிய சம்பந்த மின்றியும் சம்பவிக்காததாயுமுள்ள அர்த்தகற்பனையினாற் பழித்தல் சாமாநிய சலமாம். அது இப்பிராமணன் வித்தியாசரணசம்பன்னன் (கலவியொழுக்க முடையவன்) என்று கூறுமிடத்துப் பிராமணத்தன்மையினால் * வித்தியாசரண சம்பத்தைச் சாதிக்கின்றனெனக் கற்பித்துப் பிராமணத்தன்மையினால் வித்தியாசரண சம்பத்து எங்ஙனம் சம்பவிக்கும்? † விராத்தியனிடத்து வியபிசாரம் வருதலின் என்று பழித்தல்போலவதாம்.

---

* வித்தியாசரணமென்பது வித்தியா ஆசரணமெனப் பிரிபடும். வித்தியா-கலவி, ஆசரணம்-ஒழுக்கம்.

† விராத்தியன் - சாதிதருமம் விட்டவன்; பிரதிலோமத்தந்தைக்கும் அனுலோபத்தாய்க்கும் பிறந்தவன்.

(3) சகதி, லட்சணையெனனு மிரண்டனுள் ஒன்றன் விருத்தியினற கூறிய சபதததில வேறு விருததியினல் எநத விஷேதம் (விலககு) சமபவிககினறதோ அது உபசாரசலமாம் அது கடடில் கதைகினறது எனனுமிடதது (லட்சணவிருததியிற லஙஙனங் கூறபபடடதென் றஙகீகரியாது சகதி விருததியிற லஙஙனம கூறபபடடதென் றஙகீகரிதது) கட்டில கதையிலலை கடடிலி லுளள புருஷன கதைகினருனெனறு பழிததலபோலவதாம

## 15. சாதி—False Analogy.

142. அசததான (போலி) உததரஞ சாதி. அது உத்கருஷசமை, அபகருஷசமை முதலான பேதததாற பலவகை. பெருகுமெனனும பயததா லெலலாஞ சொலலபபடடனவலல. அவறறுள,

அவவியாததமான திருஷ்டாநத தருமததால் சாததிய பகக அவவியாபகமான தருமததை வருவிததல உத்கருஷசமை யெனனுஞ சாதி. எஙஙனம? சததம அநிததியம, காரியததுவததால, கடமபோல எனறு சொலலுதறகண இஙஙனம ஒருவன சொலலாநின ருன, காரியததுவ எதுவால கடமபோலச சததமும அநிததியமாயின அநத எதுவாலே அது (அநதககடம) போலவே சததம சாவயவமா (அவயவமுடையதா)க வேணடுமென.

அவவியாததமான திருஷ்டாநத தருமததால அவ்வியாபகமான தருமததின அபாவததை வருவிததல

அபகருஷசமை யெனனும் சாதி. எங்ஙனம்? முன் சொனன அநுமானததில ஒருவன இங்ஙனஞ் சொல லாநினறுன; காரியதது வ ஏதுவால் கடமபோலச சத தம அநிததியமாயின அநத ஏதுவால கடமபோலச் சததமும செவியாற் கவரபபடாததாக வேணடும; கடனு செவியிறகவாவதனறே யென.

(கு-ரை) ஒருவன் காரியததுவ வேதுவால் * * * * * என இஙஙனஞ் சொலலாநினறுன எனறு அஙகயிததுககொளக.

சாதி - அசததுததரம; அஃதாவது சுவவியாகாத (தனககு விரோத)மான உததரமாம உததரம-விடை. அது சாதாமியசமை, வைதாமியசமை, உதகருஷசமை, அபகருஷசமை, வா ணியசமை, அவாணியசமை, விகறபசமை, சாததியசமை, பிராபதிசமை, அப் பிராபதிசமை, பிரசஙகசமை, பிரதிதிருஷடாநதசமை, அநுறபததி சமை, சமசயசமை, பிரகரணசமை, அவேதுசமை, அாததாபததி சமை,அவிசேஷசமை, உபபததிசமை, உபலபதிசமை, அநுபலபதி சமை, நிததியசமை, அநிததியசமை, காரியசமை யென இருபதது நான்கு வகைதது

## சாதர்மிய (போதுவியல்பு) சமை.

(1) சாதர்மியம—சமானதர்ம முடையது. சமான தர்மத திஞலே ஸதாபகமாயிருக்கிற ஏதுவைத தூஷிககும உததரம சாதாமிய சமை எஙஙனம? ஆதமாகிரியையுடன் கூடியது, கிரி யைக கேதுவான குணததையுடைததாயிருததலின, மடபிணடம போல எனபுழிக கிரியைககுக காரணமான குணம கிரியையை யுணடுபண ணும் வாயு சையோக முதலியனவே எனறு ஸதாபிக குமபோது கிரியையோடுகூடிய வஸதுவின சாதாமியததினுல

ஆதமா கிரியையுடன கூடினதேயாயின, அப்போது (வான் முத லிய) விபுததுவவடிவ நிஷகிரிய வஸதுவின சாதாமியததினுல அது என நிஷகிரியமுடையதாகக கூடாது? இவவிஷயததில யாதொரு நியமமுமினறென றுததாங கூறுவது.

## வைதர்மிய (வேற்றியல்பு) சமை.

(2.) வைதாமியம—விரோததர்ம முடையது. வைதாமியத் திஞலே ஏதுவை தூஷிககுமுததாம வைதாமிய சமை எஙஙனம? மேறகூறிய அநுமானத்திலேயே கிரியையுடன்கூடிய மட்பிணடத தின சாதாமியததினுல ஆதமா கிரியை யுடையதாயின அப்போது விபுததுவவடிவ வைதாமியததிஞல் அது நிஷகிரியமுடையதாக ஏஞகமாட்டாதென றுததாஙகூறுவது. ஆனமா கிரியையுடைய தன சாதாமிய மிருபபதால கிரியையுடையதாகவே யிருககவேண டும, கிரியையுடையதன வைதாமியமிருபபதால கிரியையறறதா கவே யிருககககூடாதெனபதில் யாதொரு நியமமுமினறு.

## உத்கருஷ (உயர்ச்சி) சமை

(3) பிறனகூறிய வேதுவிஞலேயே அதற்கவ்வியாபகமான தாமததைப படசததில ஆபாதனம செயவது (பக்ஷததில அத் தருமததை வருவிததல) உதகருஷசமை எஙஙனம? சததம அநித் தியம, காரியததுவததால, கடமபோல எனபுழிக காரியததுவத தால எனனுமேதுவிஞல சபதம கடமபோல அநிததியமாயின அபபோது அவவேதுவிஞலேயே சபதம கடம்போல சாவயவம் (உறுபபுடையது) ஆகடடுமேயென று கூறுவது.

## அபகருஷ (தாழ்ச்சி) சமை.

(4) பிறன்கூறிய திருஷடாநத சாதாமியததிஞலே பட் சததில் அவன அஙகீகரிததுளள தாமாநதாததின (வேறு தாமத

தின்) அபாவததைச சாதிபபது அபகருஷசமை. எங்ஙனம்? மேற் கூறிய அநுமானததிலேயே காரியததுவததால் என்னுமேதுவி ஞல் சபதம் கடமபோல அநிததியமாயின் அப்போது அஃது அவ் வேதுவிஞலேயே கடமபோலச சுரோததிரேநதிரியப் பிரத்தியட சததிற்கு விஷயமாகாமறபோதல வேண்டுமெ என்று கூறுவது

வர்ணிய (புகழ்ந்துரை) சமை

(5) ஸ்தாபிககத் தகுநத திருஷ்டாநத தருமததைப படசத திற்சாதிப்பது வாணியசமை. எஙஙனம? ஆதமா கிரியையுடனகூடி யது; கிரியைக கேதுவான குணததையுடைததா யிருததலின, மட் பிணடமபோல என்று முறகூறிய அநுமானததில கிரியைககுக காரணமான நோதனமெனனும அபிதானமுடைய சையோகவிசே டததிஞல் மடபிணட முதலியவறறிறகுக கிரியை யிருததலகூடுமெ ஆத்மாவிறகுக் கிரியையிருககுமாயின அதறகுக காரணமான * நோதனமெனனும அபிதானமுளள சையோகமுமிருததல வேணடுமெனறு கூறுவது.

---

* நோதனமெனனும அபிதானமுளள சையோகம—சப ததைதயுணடுபணணுத சையோகம். அது நோதநாககிய சையோக மாம.

முற (இநநூலின 236வது பககததிற) கூறியுளள காமஜ சையோகம்: அபிதாககியசையோகம, நோதநாககியசையோகம என்றும இருவகைததாம

அபிதாககிய சையோகம.

பரிசமும் வேகமும் எனனும் இரணடு குணஙகளுடைய திர வியததிறகு வேறு மூாததத திரவியததோடுணடாகும சையோகம அபிதாககிய சையோக மெனபபடும. அஃது அமமூாததத்திரவியத்

அவர்ணிய (பழித்துரை) சமை.

(6) சாத்திய ஏதுக்களைப் பக்ஷத்தில் துல்லியமா (ஒப்புமையா)க்ச் சாதிப்பது அவர்ணியசமை. எங்ஙனம? ஆத்மா கிரியையுடன் கூடியது, கிரியைக்கேதுவான குணமிருத்தலின், மட்பிண்டம்போல என்னும் அநுமானத்திலேயே மட்பிண்ட முதலியவற்றிலுள்ள கிரியைக் கேதுவான நோதன முதலிய குணம் ஆத்மாவில் அசித்தம். ஆகவே, அசித்தமாகிய கிரியைக் கேதுவாகிய குணத்தினால் ஆத்மாவில் கிரியை யெங்ஙனம் சாதிக்கப்படுகின்றதோ அங்ஙனமே அந்தக் கிரியையினாலே அதற்கு ஜனகமான (உண்டுபண்ணுவதான) குணமும் என சாதிக்கப்படவில்லை? ஒன்றைத்தான் சாதித்தல்வேண்டு மென்னும் நியமமுமில்லை என்பது.

---

தின் கிரியைக்கு அசமவாயிகாரணமும் அமமூர்த்தத்திரவியத்தோடு கூடிய ஆகாசத்தினின்றுண்டாகும் சப்தத்திற்கு நிமித்தகாரணமுமாம் எங்ஙனம்? பரிசமுடையதும் வேகமுடையது மாகிய கோடரிவடிவ திரவியத்திற்கு மரவடிவ மூர்த்தத்திரவியத்தோடுண்டாகும் சையோகம் அம்மரத்தின் அசைதல்வடிவ கிரியைக்கு அசமவாயிகாரணமாயும், அம்மரத்தோடுகூடிய ஆகாசத்தினின்றுண்டாகும் சப்தத்திற்கு நிமித்தகாரணமாயு மிருத்தலறிக.

நோதனாக்கிய சையோகம்.

பரிசமுடைய திரவியத்திற்கு மூர்த்தத்திரவியத்தோ டுண்டாகும் சையோகம் நோதனாக்கியசையோகம் என்னப்படும். அது சத்தத்தின் உற்பத்திக்குக்காரணமாவதன்று, ஆனால் அமமூர்த்தத்திரவியத்தினது கிரியையின் உற்பத்திக்கு மாத்திரம் காரணமாகின்றது எங்ஙனம? வெகுகாலம் நீரின் சம்பந்தத்தால் மிகுசேறுயுள்ள பூமியில் பரிசமுடைய பாதத்தால் மிதிப்பதாலுண்டாகும் சையோகம் ஆண்டுச் சத்தத்திற் கேதுவாகாது அச்சேறுபடிந்த பூமியினது கிரியையின் உற்பத்திக்கு மாத்திரம் ஏதுவாயிருத்தலறிக.

## விகற்பசமை.

(7) திருஷ்டாந்த (உவமான) விகற்பத்தைக்காட்டித் தாஷ்டாந்த (உவமேய) விகற்பத்தைக் கூறுவது விகற்பசமை. எங்ஙனம்? ஆத்மா கிரியையோடுகூடியது, கிரியைக் கேதுவான குணமிருத்தலின், மட்பிண்டம்போல என்னும் அநுமானத்தில் கிரியைக்கேதுவான குணமுள்ளசில-குரு. எங்ஙனம? மட்பிண்டம் முதலியன; சில-லகு. எங்ஙனம? வாயு. இங்ஙனமே, கிரியைக் கேதுவான குணமுடைய சில கிரியையோடு கூடினவாக வாதல் வேண்டும். எங்ஙனம்? மட்பிண்ட முதலியன; சில கிரியையற்றன எங்ஙனம்? ஆத்மா. ஈண்டு முந்தினவிகற்பந்தான் சம்பவிக்கும்; பிந்தின விகற்பம் சம்பவியாது என்பதில் காரணம் யாது? எனபது

## சாத்திய சமை.

(8) திருஷ்டாந்தத்தைப் பக்கத்திற் கொத்ததாகக் கூறுவது சாத்தியசமை. சாத்திய சமை யென்னுமிடத்துள்ள சாத்திய சப்தம் பட்சத்தை யுணர்த்துகின்றது ஆத்மாகிரியையோடு கூடியது, கிரியைக் கேதுவான குணமிருத்தலின், மட்பிண்டம் போல என்னும் அநுமானத்திலேயே எங்ஙனம் மட்பிண்டமோ அங்ஙனமே ஆத்மாவும் என்று கூறுவையாயின், அப்போது எங்ஙனம் ஆத்மாவோ அங்ஙனமே மட்பிண்டமும் என்று சம்பவிக்கும் ஆகவே, ஆத்மாவின்கண் கிரியை சாதிக்கப்பட்டதே யாயின் அப்போது மட்பிண்டத்திலும் அது சாதிக்கத்தக்கதாம். அன்றென்று ஆசங்கிப்பையாயின், அப்போது எங்ஙனம் மட்பிண்டமோ அங்ஙனமே ஆத்மாவுமென்று கூறுதல் கூடாது; மட்பிண்டத்திற்கொத்தது ஆத்மா, ஆத்மாவிற்கொத்தது மட்பிண்டமன்று எனபதில நியமமின்மையின என்பது.

## பிராப்தி (அடைவு) சமை.

(9) பிராபதியிஞல எதிாதது நிறபது பிராபதி சமை. பிராபதியாவது சாததியமும எதுவும ஓரிடததிருத்தல். எஙஙனம? ஆதமா கிரியையோடு கூடியது, கிரியைககேதுவான குண மிருததலின, மடபிணடமபோல எனனும அநுமானததிலேயே கிரியைக கேதுவான குணததிஞல கிரியை எநதக காரணததி ஞலே சாதிககபபடுகினறது? கிரியையிஞலே கிரியைக கேது வானகுணம எநதக காரணததிஞலே சாதிககபபடவிலலே? இரண டும ஒததிருததலின எனபது.

## அப்பிராப்தி (அடைவின்மை) சமை

(10) அபபிராபதியிஞ லெதிாதது வருவது அப்பிராப்தி சமை. எஙஙனம? ஆதமா கிரியையோடு கூடியது, கிரியைக கேதுவான குணததுடன கூடியிருததலின், மடபிணடமபோல எனனுமிடததிலேயே மேறகூறிய தோஷததிஞல அபபிராபத மான எது சாததிய சாதகமெனக கூறலவேண்டும். ஆகையிஞல அபபிராபதி சமானமாக விருததலின இவவேது எலலாவறறையும சாதிததல வேணடும, சாததியாபாவததை எநதககாரணததிஞல் சாதிககமாட்டா தெனபதில் நியமமினமையின எனபது

## பிரசங்க சமை.

(11) சாதனததின பரமபரையை விஞவுவது பிரசஙக சமை. எஙஙனம? ஆதமாவினிடததுக கிரியையைச சாதிககு மிடததுக கிரியைக கேதுவான குணம சாதனமாம சாதனமின றி ஒரு பதாாததமும பிரசிததமாக விருபபதிலலே ஆதலால, கிரியா கேதுகுணமான அசசாதனததில சாதனமயாது? அசசாதனததில் சாதனம யாது? எனறற றொடககததனவாய விஞவுதலாம.

## பிரதி (வேறு) திருஷ்டாந்த சமை.

(12.) வேறு திருஷ்டாந்தத்தால் சாத்தியாபாவத்தைச் சாதிப்பது பிரதிதிருஷ்டாந்த சமை எங்ஙனம்? மேற்கூறிய அநுமானத்திலேயே மட்பிண்ட திருஷ்டாந்தத்தால் கிரியை சாதிக்கப்பட்டதேயாயின், கிரியையற்ற ஆகாச திருஷ்டாந்தத்தினால் ஆத்மாவிற்குக் கிரியையற்றதன்மை ஏன் சம்பவிக்காது? மட்பிண்ட திருஷ்டாந்தத்தினால் கிரியையே சம்பவிக்கும், ஆகாச திருஷ்டாந்தத்தினால் கிரியையற்ற தன்மை சம்பவியாது என்பதில் நியமமின்மையின் என்பது

## அநுற்பத்தி சமை.

(13) அநுற்பத்தியி (உற்பத்தியபாவத்தி)னால் பிரதியவஸ்தானம் (எதிர்த்துவருவது) அநுற்பத்திசமை எங்ஙனம்? கடம் நித்தியமன்று; ஜன்னியமான ஏகத்துவத்தினால்(உற்பத்தியான ஒரு வடிவத்தன்மையால்) என்னுமிடத்து ஜன்னியமான ஏகத்துவம் அநித்தியத்துவத்தைச் சாதிப்பதில் பிரமாணமாயின், அப்போது கடத்தில் ஏகத்துவமுண்டாவதற்கு முன்னர் ஜன்னியமான ஏகத்துவமின்மையின் அதற்கு நித்தியத்துவம் சம்பவிக்கின்றது, அது நித்தியமாயின் அப்போது அநுற்பந்நமே (உண்டாகாததே)யாம் என்பது

## சம்சய (ஐய) சமை

(14) சாதாரணதாமத்தைக்காட்டிச் சம்சயத்தையுண்டுபண்ணுவது சம்சயசமை. எங்ஙனம்? சப்தம் அநித்தியம், காரியத்தன்மையால் என்னுமிடத்துச் சப்தத்திற்கு அநித்தியமான கடத்தோடுகூடக் காரியத்துவவடிவ சாதாமியம் (ஒத்தவடிவம்) எங்ஙன மிருக்கின்றதோ அங்ஙனமே நித்தியமான சப்தத்தன்மையோடுகூடச் சிராவண (சுரோத்திரேந்திரிய)ப் பிரத்தியட்ச விஷயத்தன்மை வடிவ சாதாமிய மிருக்கின்றது ஆகையால் உபய

(இரண்டு) சாதர்மியம் காணப்பட்டிருத்தலின் சமசய முண்டா கின்றது, ஒன்று எஞ்சுவதென்பதில் நியமமின்மையின் என்பது.

## பிரகரண சமை.

(15) வாதிகூறிய ஏதுவினும் சாத்தியத்திற்கு விபரீதசாதகமான வேறு ஏதுவைக்காட்டல் பிரகரணசமை. சற்பிரதிபக்ஷ உதாரணமே ஈண்டு உதாரணமென்றறிக. சற்பிரதிபக்ஷமென்பது ஏதுப்போலி ஐந்தனுள் ஒன்று

## அவேது (ஏதுவின்மைச்) சமை.

(16.) முக்காலத்தினும் ஏதுத்தன்மை சம்பவியாமையால் ஏது அன்றென்று கூறுவது அவேது சமை. எங்ஙனம்? காரியத்துவ முதலியவடிவசாதனம் அநித்தியத்துவவடிவசாத்தியத்தினும் பூர்வகால விருத்தியே (முற்காலத்திருந்ததே) யாயின், அப்போது அநித்தியத்துவவடிவ சாத்திய மிராமையின் அது எதற்குச் சாதனம்? அந்தச்சாதனம் பச்சாத் (பிற) கால விருத்தியேயாயின் அப்போது பூர்வகாலத்திற்சாதனமிராமையின் எவ்வேதுவிற்கு அநித்தியத்துவ சாத்திய மிருக்கின்றது? இரண்டும் ஒருகாலத்திருந்தனவேயாயின் எது எதற்குச் சாதனம்? எது எதற்குச் சாத்தியம்? என்று நிர்ணயம் சம்பவிப்பதில்லை, நியமமிராமையின் என்பது.

## அருத்தாபத்தி சமை.

(17) அருத்தாபத்தியை முன்னிட்டுச் சாத்தியாபாவத்தைக் காட்டல் அருத்தாபத்தி சமை. எங்ஙனம்? சத்தம் அநித்தியம், காரியத்தன்மையால் என்னும் அநுமானத்தில் சபக்ஷத்திற்கு அநித்தியத்துவ சாதர்மியத்தால் அநித்தியத்தன்மை யிருந்ததேயாயின், அப்போது அருத்தாபத்தியினாலே நித்தியத் தன்மையும் நித்திய சாதர்மியத்தினால் பெறப்படும், இரண்டனுளொன்றை நிச்சயஞ் செய்வதில் நியமமின்மையின் என்பது

## அவிசேஷ (விசேஷமின்மைச்) சமை.

(18) எலலாம சமானமாயிருககலாமே எனறு காடடுவது அவிசேஷ சமை எஙஙனம? சபதம அநிததியம, காரியததனமை யால எனனும அநுமானததிலேயே காரியததுவ வடிவமுமான அநிததிய கடாதிகளின சாதாமியததினால சபதம அநிததியமா யின அபபோது பிரமேயததுவ வடிவமுமான அவறறின சாதாமி யததினால எலலாம அநிததியமாம, யானகூறிய சாதாமியததினால அது பெறபபடுகினறது, நீ கூறிய சாதாமியததினால அது பெறப படவிலலை எனபதில நியமமினமையின எனபது.

## உபபத்தி சமை.

(19) உபய பக்ஷ சாதாமியததினால சாதனம பொருநது மாறு கூறுதல உபபததிசமை (மேறகூறிய அநுமானததில) அநித தியததுவ சாதனமான காரியததுவம பொருநதுகினறது ஆகை யால சபதம அநிததியமாம் அபபோது நிததியததுவ சாதனமும பொருநதுகினறது ஆகையால நிததியததுவம என சமபவிகக மாட்டாது? எனபது.

## உபலப்தி சமை

(20) சாதனாபாவம வாதியினாற் காட்டப்பட்டிருப்பினும சாததியோபலப்தி கதனம (சாததியம காணபபடுவதாககூறல) உபலபதிசமை எஙஙனம? சபதம அநிததியம; பிரயததனததை யநுசரித துணடாகினறமையின; கடமபோல எனனுமிடததுப பிரயததனமினறியும வாயுவின நோதனவசததாலுணடான எநத விருடசசாகாபஙகமு (மாககிளையின கேடு)ணடோ அநத விருடச சாகாபஙகததினால சபதமுணடாகிக காணபபடுவதால பிரயத தனததை யநுசரிததுணடாகுநதனமை சபதததிலினறெனபது

## அநுபலப்தி சமை.

(21) வாதி அநுபலத்தி வசத்திலுலே சிலபதார்த்தங்களை யங்கீகரியாதிருக்கும்போது (பிரதிவாதி) அநுபலப்தி வசத்திலுலேயே வாதியங்கீகரித்துள்ள சில பதார்த்தங்களின் அபாவத்தைச் சாதிப்பது அநுபலப்தி சமை எங்ஙனம்? சலாதிகளிருப்பினும் ஆவரண (மறைப்பு) வசத்திலுலே சலாதிகளின் அநுபலப்தி (தோன்றாமை) யுண்டு. அதுபோல, உச்சாரணத்திற்கு முன் சப்த மிருப்பினும் ஆவரண வசத்திலுல சப்தத்தின் அநுபலப்தி யுண்டு என்னும் மதம் ஆவரணவசத்திலுல சப்தம் பிரத்தியட்சமாகாவிட்டின் அப்போது சலத்தின் ஆவரணம் போன்று சப்தத்தின் ஆவரணமும் காணப்படல் வேண்டும் என்று வாதியிலுல தூஷிக்கப்பட்டதேயாயின், அதற்குத்தரம் நீவிர் ஆவரணத்தின் அநுபலப்தியிலுலே ஆவரணத்தை யங்கீகரியாவிட்டின் ஆவரண அநுபலத்திக்கு அநுபலப்தியிருப்பதால் ஆவரண அநுபலப்தியின் அபாவம் பெறப்படுகின்றது அது பெறப்படும்போது ஆவரண அநுபலப்தி இல்லாமையின் ஆவரணுபாவம் பெறப்படவில்லை ஆகவே, அப்போது ஆவரணம் பெறப்படுகின்றதென்பது.

## நித்தியசமை

(22.) தர்மம நித்தியம் அநித்தியம் என்னும் விகற்பத்திலுல் தாமி நித்தியமென்று சாதிப்பது நித்தியசமை எங்ஙனம்? சப்தத்திற்கு எவ்வநித்தியத்துவம் உம்மால கூறப்பட்டதோ அவ்வநித்தியத்துவம நித்தியமா? அல்லது அநித்தியமா? நித்தியமாயின், அப்போது சப்தத்திலுள்ள நித்தியத்துவத்திற்கே என்ஞான்று மிருக்குந் தன்மையிருத்தலின் சப்தத்திற்கும அத்தன்மை சம்பவிக்கின்றது. அநித்தியமாயின், அப்போது சப்தத்தில ஒருகாலத்தில அநித்தியத்துவத்தின் அபாவமிருக்குமாதலின் இரண்டு விதத்தாலும சப்தம நித்தியமென்ப பெறப்படுகின்றது என்பது.

அநிந்தியசமை.

(23) அநித்தியமான திருஷ்டாந்தத்தின் சாதாமியத்தினால் சர்வபதார்த்தமும் அநித்தியமாமென்று நிரூபித்தல் அநித்தியசமை. எங்ஙனம்? அநித்தியமான கடத்தின் சாதிருசியமிருப்பதனால் சப்தமும் அநித்தியமாமெனக்கூறின், அப்பொழுது அத்தாமத்தினால் சாவபதாாத்தங்கட்கும் கடசாதிருசியமிருத்தலின் அச்சாவ ட்தார்த்தங்கட்கும் அநித்தியத்துவம் வரல்வேண்டுமே என்பது.

காரியசமை

(24) வாதியாற் கூறப்பட்ட ஏதுவிற்கு அந்நியகாரியத்தினுற சம்பவித்தலைக்கூறல் காரியசமை எங்ஙனம்? (சப்தம் அநித்தியம், பிரயத்தனத்தையனுசரித்துண்டாகின்றமையின், கடம்போல என்று) முற்கூறிய அநுமானத்திலேயே பிரயத்தனத்தை யநுசரித்துச் சொல்லப்படுவதான ஏது இரண்டுவிதத்தாலும் சம்பவிக்கும். கடாதிகள் போன்று சப்தசொரூபத்தின் உற்பத்தி, ஜலாதிகளைய போன்று ஆவாரக (மறைப்பு) நிவிர்த்தி என்னும் இவ்விரண்டிடத்திலும் பிரயத்தனத்தை யநுசரித்துச் செய்யப்படுந்தன்மை காணப்படுகின்றமையின் அதற்கு ஆவாரக நிவிர்த்தி வருவதாகிய வேறு காரியம் சம்பவிக்கின்றது, சம்பவித்தலின், அநித்தியத்துவம் நியமமன்று என்பது.

## 16. நிக்கிரகத்தாநம்–Unfitness for arguing.

143 தோல்வி யேது நிக்கிரகத்தாநம். அது நூநம், அதிகம், அபசித்தாந்தம், அர்த்தாந்தரம், அப்பிரதிஞை, மாதாநுஞை, விரோதம் முதலான பேதத்தாற் பலவிதமாயினும் (அவையெல்லாம்) பெருகுமென்று சொல்லப்பட்டனவல்ல.

சொல்லவேண்டிய பொருளிற் சிறிது குறைதல் நூநம் (நியூநம்).

சொல்லவேண்டிய பொருளின் அதிகம் அதிகம்.

சித்தாந்தத்தின் கேடு அபசித்தாந்தம்.

பிரகிருதத்தில் அனேக சம்பந்தமான பொருளுடைய சொல் அர்த்தாந்தரம்.

உத்தரத்தின்து தோன்ருமை அப்பிரதிபை.

தனக்குப் பிரதிகூலமாய்ப் பரனுக்குச் சம்மதமான ஆத்தத்தைத் தானே அங்கீகரித்தல் மதாநுஞ்ஞை

இஷ்டார்த்தபங்கம (பிரதிஞ்ஞா) விரோதம்

ஈண்டு மிகவும் வேண்டப்படுவதாகிய பதார்த்தங்களை ரூபபேதத்தினலே அடிக்கடி கூறுவதும் வேண்டாமையாகிய ரூபபேதங்களுக்கு இலக்கணம் கூருமையும் குற்றமன்று. இவ்வளவினலே பாலர்களுக்கு வியுற்பத்தி சித்தித்துவிடுகின்றது.

(கு-ரை) வாதியினது அபஜயத்திற் கேதுவாயுள்ளது நிக்கிரகத்தானமாம் (தோல்விக் கேதுவாம்). அஃதாவது எது சித்திக்கச் சபையில் வாதிக்கு அபஜயமுண்டாகின்றதோ அது நிக்கிரகத்தானமாம்.

அது: பிரதிஞ்ஞாஹாநி, பிரதிஞ்ஞாந்தரம், பிரதிஞ்ஞா விரோதம், பிரதிஞ்ஞாசந்நியாசம், ஏதவந்தரம், அர்த்தாந்தரம், நிரர்த்தகம், அவிஞ்ஞாதார்த்தம், அபார்த்தகம், அப்பிராப்தகாலம், நியூநம், அதிகம், புநருக்தம், அநநுபாஷணம், அஞ்ஞாநம்,

அபபிரதிபை, விக்ஷேபம, மதாநுஞ்ஞை, பரியநுயோஜயோபேக்ஷணம, நிரநுயோஜயாநுயோகம, அபசித்தாநதம, எததுவாபாசம் எனனும வேறுபாட்டால இருபததிரண்டாம்

இவை அப்பிரதிபததி, விபபிரதிபததி என இருவகைப படும, அபபிரதிபததி-செயபுவழு, விபபிரதிபததி-விஞவழு. பிரதிஞ்ஞாஹாநி முதல புனருகதமீறாயுள்ள பதினமூனறும அபபிரதிபததியாம, அநநுபாஷணம முதல எததுவாபாசம ஈறாயுள்ள ஒனபதும விபபிரதிபததியாம

### பிரதிஞ்ஞாஹாநி - மேற்கோளழிவு

(1.) பிரதிஞ்ஞைசெயத ஆததததை விடுதல அலலது பிரதிஞ்ஞைசெயத ஆதததிறகு விரோதமானதை யங்கீகரிததல பிரதிஞ்ஞாஹாநியாம. எங்ஙனம? (வாதி) "சபதம அநிததியம, பிரததியட்சகுணததனமையால" எனபுழி, (பிரதிவாதி) "இஃதநதககாம" எனறறெருட்ககததுப பிரததியபிஞ்ஞையின வலியால சபததில நிததியததனமையினைச சிததிககச்செயது அவ்வநுமானததை மறுககும்போது அவவநுமானங கூறினவன (வாதி) சபததின நிததியததனமையினை யங்கீகரிபபவனுகிச 'சததம அநிததியம' எனறுசெயத பிரதிஞ்ஞையினை விட்டுவிடுதலாம்.

### பிரதிஞ்ஞார்தரம்-வேறு மேற்கோள்.

(2.) பிறன (பிரதிவாதி) கூறிய தோஷத்தை நிவிாததிகக வேணடுமெனனு மிசசையிஞல முறகூறாத விசேஷணததைச் சோத்துப பிரதிஞ்ஞைசெயத ஆதததைதக கூறுவது பிரதிஞ்ஞாந்தரமாம். எங்ஙனம? "பிருதிவி முதலியன * குணஜனனியம;

---

* குணஜனனியம-ஈசுரனது ஞானம இசசை முதலிய குணங்களா லுணடானவை,

காரியத்தன்மையால்' என்புழி மற்றொருவன் "அதிருஷ்ட (குண) ஜனனியத் தன்மையால்' என்று * சித்தசாதனத்தைக் காட்டும் போது அதனை நிவாரித்தற் பொருட்டு ஸவிஷயகமெ (விஷயத்தோடுகூடியதெ)னக் குணத்திற்கு விசேஷணங் கொடுத்தலாம்; அஃதாவது பிருதிவி முதலியன சவிஷயககுண ஜனனியமெனக் கூறலாம்.

## பிரதிக்ஞாவிரோதம்-மேற்கோள் மாறுபாடு.

(3) தான் கூறிய சாத்தியத்திற்கு விரோதமாயுள்ள ஹேதுவைக் கூறுதல் பிரதிக்ஞா விரோதமாம் எங்ஙனம்? "திரவியம் குணத்தினும் வேறு, உருவமுதலியவற்றினும் வேறாகக் காணப் படாமையின்" எனபுழிக் குணத்தினும் வேறாம்வடிவ சாத்தியத்தால் உருவ முதலியவற்றினும் வேறாம் வடிவமாகத் தோன்றாத ஏது விருத்தமாம் ஆண்டு ஏது சாத்தியவிருத்தமா யிருத்தலறிக.

## பிரதிக்ஞாசந்நியாசம்-மேற்கோள்விடுதல்.

(4.) தான் கூறியஆத்தம் பிறனால் தூஷிக்கப்படும்போது அதை விட்டுவிடுதல் பிரதிக்ஞாசந்நியாசமாம் எங்ஙனம்? "சத்தம் அநித்தியம், இந்திரிய ஜனனியஞானத்திற்கு விஷயமாவதால்"

---

* அதிருஷ்ட ஜனனியமென முன்னாப் பெறப்பட்ட பிருதிவி முதலியவற்றைக் குணஜனனியமெனக் கூறல் சித்தசாதனமாம் பிருதிவி முதலியன அதிருஷ்டஜனனியமாம், அங்ஙனமாக அவற்றைக் குணஜனனியமெனல் சித்தசாதனமாமெனப் பிரதிவாதிகூற அதனைப் பரிகரித்தற்பொருட்டு வாதி பிருதிவி முதலியன சவிஷயககுணஜனனியமெனக் கூறினன். தருமாதருமவடிவ அதிருஷ்டகுணம் சவிஷயக (பிரத்தியட்சவிஷய)மன்று

என்புழி மற்றொருவன் அது * ஜாதியில் வியபிசரித்தலைக் காட்டித் தூஷிக்கும்போது சப்தம் அநித்தியமெனக் கூறியதார்? என்று தான்கூறிய பிரதிஞ்ஞையை விட்டுவிடுதலாம்.

## ஏத்வந்தரம்-வேற்றேது.

(5.) பிறன்கூறிய தூஷணத்தை நிவாரிக்கவேண்டு மென்னும் விருப்பத்தால் மேற்கூறிய (இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாவதால் என்னும்) ஏதுவினவகுப்பில் வேறு விசேஷணத்தைச் சேர்ப்பது ஏத்வந்தரமாம் எங்ஙனம்? "சத்தம் அநித்தியம், பிரத்தியட்சமாவதால்" என்புழிச் சாமாந்யத்தில் வியபிசாரம் தோன்றுமிடத்து அவ்வேதுவிற்கு † 'ஜாதிமத்துவம் (ஜாதியுடையதாகி)' என்று விசேஷணங் கொடுப்பது, அஃதாவது ஜாதியுடையதாகிய பிரத்தியட்சமாவதால் என்று கூறுவதாம்

## அர்த்தாந்தரம்-வேற்றுப்பொருள்.

(6) பிரகிருதத்திலுபயோகப்படாத அர்த்தத்தைக்கூறுவது அர்த்தாந்தரமாம். பிரசங்கத்திற் பெறப்பட்ட ஆத்தம் பிரகிருதம் எனப்படும் "சப்தம் அநித்தியம், இந்திரியத்தாற் கிரகிக்கப்படுதலின்" என்புழி இவ்வேது நித்தியமானகடத்துவ ஜாதியோடு வியபிசரிக்கின்றதென்று பிறன் கூறியவிடத்து இச்சத்தம் ஆகாயத்தின் குணமாயிருத்தலின் ஆகாசத்தினறு கிரகிக்கப்படும் சமவாய சம்பந்தத்தினால் அசசாதிசம்பந்தமும் அநித்திய மென்று முற்கூறியதற் குபயோகமாகாத வாக்கியத்தைக்கூறுவது.

---

* ஜாதியும் இந்திரியஜன்னியஞானத்திற்கு விஷயமாயிருத்தலின் அதுவும் அநித்தியமாமென் றுட்சேபிக்கப்பட்டது. ஜாதி நித்தியபதார்த்தங்களு ளொன்றென்பது நியமம்.

† இதுபற்றி இந்நூலின் 255-258 பக்கங்களிற் காண்க.

## நிரர்த்தகம் - பொருளின்மை

(7) அவாசக (எவவாததததினையுங கூருத) சப்தப்பிரயோசம நிரர்த்தகமாம. எஙஙனம? சபதம அநிததியம; க, ங, ச, ஞ, ட, ண, தனமையால எனறுறபோலவது.

## அவிஞ்ஞாதார்த்தம்-பொருட்போலி.

(8) பொருள இனிது விளஙகாத சொறகளை யெடுததுக்கொணடு பேசல அவிஞ்ஞாதார்த்தமாம, அஃதாவது சபையிலுள்ளவா, பிரதிவாதி யெனனு மிவருககுப போதமாகாத பதபபிரயோகமாம எஙஙனம? தூரானவயமும, அபபிரசிததாாததமுமுடைய பதஙகளை விரைவாகக கூறுவது

## அபார்த்தகம்-பொருளுணரப்படாமை.

(9) (அவாயசிலை, தகுதி, அணமையிலலனவாகப பேசுதல்). பரஸபரம அநவயமினறிய அாததததைக கூறுகினற பதஙகளின கூடடம அபார்த்தகமாம எஙஙனம? "சபதம, கடம, படம, நிததியம, அநிததியம; பிரமேயததனமையால' எனபது.

## அப்பிராப்தகாலம்-காலம்பெறுமை.

(10) (பராாததாநுமானததிறகுககாரணமாகிய)பிரதிஞ்ஞைமுதலிய அவயவஙகளை மாறறிககூறுவது அப்பிராப்தகாலமாம் எஙஙனம? சபததனமையால, சபதம நிததியம எனறறொடககததனவாம

## நியூநம்-குன்றக்கூறல்.

(11) பிரதிஞ்ஞைமுதலிய அவயவஙகளுள சில குறையககூறல நியூநமாம் இது வெளிபபடை.

## அதிகம்-மிகைபடக்கூறல்.

(12.) ஒரேதுவாலும் ஓர் திருஷ்டாந்தத்தாலும் சாத்தியம் பெறப்படுவதாயிருக்க அது கருதாது அதிகஹேது அல்லது அதிக திருஷ்டாந்தத்தினைக்கூறுவது அதிகமாம் எங்ஙனம்? இம்மலை தீயுடைத்து, புகையுடைமையால், பிரகாச முடைமையால், அடுக்களைபோல, கொல்லனுலைபோல என்றற்றொடக்கத்தனவாம்.

## புநருக்தம்-கூறியதுகூறல்.

(13) அநுவாதமின்றி முற்கூறியதை மீண்டுங் கூறுதல் புநருக்தமாம் எங்ஙனம்? சப்தம் அநித்தியம், சப்தம் அநித்தியம், அங்கமிலாதவன் அநங்கன் என்றற்போல்வனவாம் அநுவாதமாவது முற்கூறியதைப் பயன்பற்றி மீண்டுங்கூறுவது அநுவாதமெனினும் வழிமொழிதலெனினு மொக்கும்

## அநநுபாஷணம்-பிற்கூற்றின்மை.

(14) சபையிலுள்ளபுருஷர் ஒன்றை மும்முறைகூறியும் அதனை அநுவாதஞ்செய்யாதிருப்பது அநநுபாஷணமாம்.

## அஞ்ஞானம்-அறியாமை.

(15) சபையிலுள்ளவர்களால் அறியப்பட்ட அர்த்தத்தை வாதி மும்முறைகூறியும் பிரதிவாதிக்கு வாக்கியார்த்தபோதம் உண்டாகா திருத்தல் அஞ்ஞானமாம்.

## அப்பிரதிபை.

(16.) விடைதெரிந்தும் விளங்காமையாற் சும்மா விருத்தல் அப்பிரதிபையாம், அஃதாவது பிரதிவாதியின் வினாவிற்கு விடை கூறுவதற்குத் தகுதியறிந்தும் அவ்விடையின் மறதி வசத்தால் விடைகூறாது மௌனமாயிருத்தலாம்

### விட்சேபம்.

(17) தனக்கிப்போது வேறு காரியமிருக்கின்றதென்று கூறி வாதத்தை நிறுத்துதல் விட்சேபமாம்.

### மதாநுஞ்ஞை.

(18) தனது பக்ஷத்தில் பெறப்பட்டதோஷத்தை நீக்காது வேறுபக்ஷத்தில் தோஷங்கூறுவது, அஃதாவது தனகுற்றத்தைப் பரிகரியாது பிறன்குற்றத்தைக் கூறுவது மதாநுஞ்ஞையாம்.

### பரியநுயோஜ்யோபேக்ஷணம்.

(19) எடுத்துக்காட்டற்குரியபிறனது தோல்விஸ்தானத்தை யெடுத்துக் காட்டாதிருத்தல் பரியநுயோஜ்யோபேக்ஷணமாம்.

### நிரநுயோஜ்யாநுயோகம்.

(20.) தோல்விஸ்தான மின்றியவனிடத்துத் தோல்வியைக் கூறல் நிரநுயோஜ்யாநுயோகமாம்

### அபசித்தாந்தம்-சித்தாந்தப்போலி.

(21) ஒரு மதசித்தாந்தத்தை மேற்கொண்டு வியவகரிக்கும் போது அதற்குமாறான மதசித்தாந்தத்தை மேற்கொண்டுத்தரங் கொடுத்தல் அபசித்தாந்தமாம்

### ஏத்துவாபாசம்-ஏதுப்போலி.

(22) இதுபற்றி இந்நூலின் 81-வது பக்கமுதல் 98-வது பக்கம் வரையிலும், 334 பக்கமுதல் 364-வது பக்கம் வரையிலுங் காண்க.

தர்க்கபரிபாஷை

குறிப்புரையுடன் முற்றிற்று



குருவே துணை.

# வேதாந்த புஸ்தகசாலை.

# புஸ்தக விளம்பரம்.

---

## ரிபுகீதைத் திரட்டு,

### குறிப்புரையுடன்

புதியபதிப்பு விலை ரூபாய் 1

மகா இதிகாசங்களு ளொன்றாகிய சிவரகசியத்தின் ஆறாவது அம்சத்திலுள்ள ரிபுகீதை வடமொழி ஸ்லோகங்களே யன்றித் தமிழருக்கு உபயோகமாகா திருந்ததை நோக்கித் திருவிடைமருதூர் பிடாரசாஸ்திரிகளென்று வழங்கும் உலகநாத சுவாமிகளவர்களால் 1924 பாடல்களாகத் தமிழ்மொழிபெயர்த்தருளப்பட்டது. அது தமிழ்மக்களெல்லாருக்கும் பெரிதும் உபயோகமாகும்படி விஷயம் மாறுபடாமல் விடாது 874 பாடல்களாகத் திரட்டப்பட்டு அவசியமான இடங்களிற் குறிப்புரையெழுதப்பட்டு உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் பெரிய எழுத்தாக அச்சிடப்பட்டிருக்கின்றது. இது முமுக்ஷுக்கள் யாவருக்கும் அத்தியாவசியகமாய் விரும்பத்தக்க தென்பது மிகுபிரசித்தம்.

---

## திருவாசகம்,

இது பிழையறப்பரிசோதித்து,

உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது.

டாக்கிகைசைஸ் 5½×7½ அங்குலம் அளவு

காலிகோ பைண்டு விலை அணா 10

## நவநீதசாரம் (வினா விடை).

இது வாசிட்ட முதலிய நூல்களின் கருத்துக்களைச் செவ்வனே விளக்கும் வசன வடிவ நூல் இப்புத்தகம் படிப்பதால் வாசிட்ட முதலிய அரிய பெரிய நூல்களின் இரகசியங்களை யெல்லாம் எளிதிலறிந்துகொள்ளலாம் 158 பக்கங் கொண்ட புதிய பதிப்பு காலிக்கோபைண்ட்-விலை அணா 8.

---

# சித்தாந்தபிந்து.

## (சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு).

இதுவரைக்கும் தமிழில் வாராதது.

இது சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த தசசுலோகியின் வியாக்கியானம். இவ்வியாக்கியானம் செய்தவர் ஆரியபாஷையில் மகாகவியாதிப் பெற்ற மதுசூதன சரஸ்வதி சுவாமிகள். இப்புஸ்தகம் ஆத்மா இன்னது அநாத்மா இன்னதென்பதுபற்றிச் சுருதியாதிப் பிரமாணங்களுடன் யுக்தி சகிதமாக நன்றாய் விளக்கிக் கூறுகின்றமையின், வேதாந்த சாஸ்திரப் பூட்டுத் திறவுகோல் போல்வதாம். இதில் அறியவேண்டிய விஷயங்களெல்லாம் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பண்டிதர்முதல் பாமரரீறாயுள்ள யாவரும் எளிதிலுணருமாறு விளக்கப்பட்டிருக்கின்றன. இப்புஸ்தகம் ஒவ்வொருவர் கையிலும் அத்தியாவசியமாயிருக்கத்தக்கதென்பது அதனது விஷய அட்டவணையைப் பார்க்க நன்கு விளங்கும்.

காலிக்கோ-விலை அணா 10 ராப்பர் விலை அணா 8

---

# வேதாந்தசாரம்.

(சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு)

இது யாவருக்கும் விளங்கக்கூடிய எளிய செந்தமிழ்நடையில் வினாவிடையாக வசனரூபமாயுள்ளது. இவ்வரியபெரியநூல் இதுகாறும் சுத்தபாடமாக வாராதது நோக்கி நன்கு ஆராய்ச்சி செய்து உயர்ந்த கடிதத்தில் தெளிவாய்ச்சிடப்பட்டுள்ளது. வேதாந்த சாஸ்திரத்தின் முக்கியமான இரகசியங்களை யெல்லாம் எளிதிலறிந்து கொள்வதற்கு இதுபோன்ற நூல் தமிழில் பிறிதொன்றின்றென்பது அதனது விஷய அட்டவணையைப் பார்க்க நன்கு விளங்கும். இந்நூல் மோட்சவிச்சையுள்ள ஒவ்வொருவர் கையிலும் இன்றியமையாதிருக்கத் தக்கதாம்; சகல வேதாந்த சாஸ்திரார்த்தங்களை யெல்லாம் எளிதிலறிந்து கொள்வதற்கு ஓர் தீபம் போலவுதாம்.

காலிக்கோ—விலை அணு 12, ராப்பர்—விலை அணு 10

---

## நாநாஜீவவாதக்கட்டளை,

### குறிப்புரையுடன். விலை அணு 4

ஆரம்பத்தில் வேதாந்தம் படிப்பவர்களுக்கு இப்புத்தகம் பெரிதும் உபயோகமாயுள்ளது. உபாத்தியாயர் சகாயமில்லாமலே இதனால் வேதாந்தத்தின் பிரக்கிரியைகளெல்லாம் நன்றாய்த் தெரிந்துகொள்ளலாம். இப்புத்தகம் படிப்பவர்கள் வேறு எந்த வேதாந்த புத்தகங்களையும் படிப்பதற்கு அதிகாரிகளாவர்; நூதனமாக எழுதப்பட்ட குறிப்புரையுடன் கூடிய புதிய பதிப்பு. இதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின்

சிஷ்யர் ராமகிருஷ்ணாநந்த சுவாமிகளவர்களும், கோயிலூர் பொன்னம்பல சுவாமிகளவர்களும், ஸ்ரீமத்-தருசை-குப்புசாமி ராஜு அவர்களும் நல்லபிப்பிராயங் கொடுத்திருக்கின்றனர்

---

வாக்கியசுதையென்னும்

## திருக்குத்திரிசியவிவேகம்.

**(மூலமும் உரையும்-மொழிபெயர்ப்பு).**

இஃது அநேக வேதாந்த சாஸ்திரங்களின் ஆசிரியரும் சங்கரபீடத் தாசிரியரா யெழுந்தருளியிருந்தவருமான வித்தியாரணிய சுவாமிகளா லருளிச்செய்யப்பட்டது வேதாந்த சாஸ்திரங்களின் முக்கிய அபிப்பிராயத்தை மிகவுஞ் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கியிருப்பதுபற்றி இது முமுட்சுக்களெவரொருவராலும் பொன்னேபோற் போற்றப்படுவதாம். சமாதிபுரிய விரும்புள்ள ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாயுள்ள இந்நூல் சுத்தப்படுத்திப்பாக அச்சிடப்பட்டிருக்கின்றது விலை அணா **2**

---

# திருக்குறள் பரிமேலழகருரை,

## தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரை

விலை ரூபாய் ஆறு

இப்புத்தகம் டிம்மி 8 பக்கங்கொண்ட அளவில் 1300 பக்கங்களுக்கு மேற்பட்டது, 2 வால்யமாகக் காலிகோ

பைண்ட் செய்யப்பட்டுள்ளது. உபாத்தியாயர் சகாயமில்லாமலே பரிமேலழகருரையின் அருமை பெருமைகளை யெல்லாம் இதனால் நன்றாகத்தெரிந்துகொள்ளலாம் தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரைகள் பரிமேலழகருரைக்கிணங்கப் புதிதாய் எழுதப்பட்ட முதற் பதிப்பு.

---

# ஸ்ரீ விருத்திப் பிரபாகரம்.

## விலை ரூபாய் 4.

இந்நூல் வேதவித்தும் பிரஹ்மவித்துமாகிய மகாத்மா

சாது நிச்சலதாஸரவர்களா லியற்றப்பட்டது

வேதாந்தத்தின் பிரக்கிரியைகளையெல்லாம் தருக்கவாயிலாக நன்கு விளக்கிக்கூறும் இது ஹிந்தி பாஷையிலிருத்தல் பற்றி அதனைத் தமிழ்நாட்டாருக் குபயோகமாகுவான் கருதி விசாரசந்திரோதயம், தர்க்ககௌமுதி ஹடயோகப்பிரதீபிகை, ஸ்ரீவிருத்திரத்னவலி, பாலபோதம், அபரோக்ஷாநுபூதி, தத்துவமஸிமகாவாக்கியம், சுவாத்மநிரூபணம், வேதாந்தபரிச்சேதம் முதலியநூல்களின்மொழிபெயர்ப்பாசிரியரும் பெரியாருமாகிய தஞ்சைமாநகரம் ஸ்ரீமத். வே துப்புசாமிராஜு அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

---

## ஸ்ரீ விருத்தி ரத்நாவலி.

(ஹிந்திபாஷை மொழிபெயர்ப்பு).

விலை அணா —12

இந்நூல் ஸ்ரீ விருத்திப்பிரபாகரத்தைச் சங்கிரகித்துக் கூறுவது. இதனாசிரியர் பண்டித சிரோமணியும் பிரஹ்மநிஷ்டா

பரருமான பீதாம்பரஜீயவர்கள். இது தமிழமககளியாவருககு முபயோகமாமாறு ஸ்ரீமத்-வெ. குபபுசாமிராஜு அவர்களால தமிழில மொழிபெயாக்கப்படடது.

---

# ஸ்ரீபாலபோதம்.

(ஹிந்திபாஷை மொழிபெயாப்பு.)

விலை ரூபாய் ஒன்று.

இந்நூல மேற்படி பீதாம்பரஜீ அவாகளால் இயறறப்பட்டது. ஜீவப்பிரஹம ஐககியத்தை யொனபது உபதேசவடிவமாகக் கூறுமிது தமிழமககளியாவருககும பயனபடுமாறு ஸ்ரீமத்-வெ குபபுசாமிராஜு அவாகளால தமிழில் மொழிபெயாககபபடடது.

---

# மோட்ச சாதன விளக்கம்.

விலை ரூபாய் இரண்டு

இதில ஏறககுறைய அரியபெரிய 300 விஷயங்கள் பிரமாண சகிதமாக எழுதபபடடிருககினறன. இதனால நல்லாசிரியரிடததுப பலவருடங காததிருந் தறியததக்க விஷயங்கள பலவும தெளிவாயறிந்துகொளளலாம. இது மோட்ச விசசையுளளவர்கட்குப பரமசாதனமாயுளளதெனபது இதன பெயராலேயே நனகுவிளஙகும. இது டிமமி 72 பாரங கொணடது.

---

7

# வேதாந்த பரிபாஷை.

(சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு).

இதுவரைக்கும் தமிழில் வாராதது

இது சர்வ தந்திர சுதந்திரரென்று மிகப்பிரசித்தி பெற்றுள்ள தர்மராஜதீட்சிதரா லியற்றப்பட்டது. இஃ தெட்டுப் பரிச்சேத முடையது இதனால் வேதாந்தத்திற் குரிய பிரமாணங்க ளிவ்வளவென்பதும் அவற்றின் பயனும் வேறு அனுபவ ரகசியங்களும் தெளிவா யறிந்துகொள்ளலாம்.

காலிகோ விலை அணா 12. ராப்பர் விலை அணா 10.



| | | | | |
|---|---|---|---|---|
| தாயுமான சுவாமிகள் பாடல் பாடபேதத்துடன் | | 0 | 8 | 0 |
| ஹடயோகப் பிரதீபிகை (யோகநூல்) | | 1 | 8 | 0 |
| தத்துவமசி மகாவாக்கியம் | ராப்பர் | 0 | 2 | 0 |
| அபரோக்ஷானுபூதி | ,, | 0 | 2 | 0 |
| சுவாத்மநிரூபணம் | ,, | 0 | 3 | 0 |
| தருக்ககௌமுதி | ,, | 0 | 4 | 0 |
| வேதாந்தபரிச்சேதம் | ,, | 0 | 6 | 0 |
| பஞ்சதசப்பிரகரணம் வசனம்வினாவிடை | காலிகோ | 1 | 0 | 0 |
| பிரபுலிங்கலீலை வசனம் | ,, | 0 | 12 | 0 |
| ஸ்ரீ குமாரதேவர் சாஸ்திரக்கோவை | ,, | 0 | 10 | 0 |
| சூதசங்கிதை (செய்யுள்) | ,, | 1 | 8 | 0 |
| ஸ்ரீபக்தலீலாமிருத வசனம் | ,, | 3 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| நாலடியார் மூலமும் உரையும் இங்கிலீஷ்மொழிபெயர்ப்புடன் | ,, | 1 | 2 |
| துளை நாசவகண்டனம் — முதற்பாகம் | ,, | 2 | 0 |
| துளை நாசவகண்டனம் — இரண்டாம்பாகம் | | 1 | 8 |
| ஔவை குறள் | | 0 | 2 |
| அத்துவிதவுண்மை (ராயல் 32 பேஜில்) | | 0 | 1 |
| திருவிளையாடற் புராணம் மூலம் காலிக்கோ | | 1 | 8 |

தர்க்கபரிபாஷை குறிப்புரையுடன் அச்சில்.

சர்வதரிசன சங்கிரகம் - சமஸ்கிருத மொழிபெயர்ப்பு. இந்த சார்வாகமுதலிய 15 மதசித்தாந்தங்க ளடங்கியிருக்கின்ற, ௵ அச்சில

தபாற்சார்ஜுப் பிரத்தியேகம்

---

கோ. வடிவேலு செட்டியார்.

சென்னை ... 15 வெங்கடாசல ஆசாரித்தெரு,

கொருக்குப்பேட்டை, செ [illegible]

---

Madras

ஓம்

தத்ஸத்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ விருத்தி ரத்நாவலி.

இஃது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீமத்,

வெ குப்புஸ்வாமிராஜு அவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

தூ ற று க ரு டி

ம-ள-ள-ஸ்ரீ சி-கு-மா-மாணிக்கவாசகம்

பிள்ளையவர்கள் சகாயத்தால்

தஞ்சைமாநகரம்

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்

அவர்களால்

சென்னை

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1902

சுபகிருது ஹ வைகாசி மீ.



ஸ்ரீ குப்பஸ்வாமி ராஜா

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

இநநூலாசிரியா மாணாககரும

குமபகோணம டவுனஹைஸகூல

தமிழபபணடிதருமாகிய

## தஞ்சை அ. பாலசுப்பிரமணியபபிள்ளை

அவாகள

இயறறிய

நேரிசையாசிரியப்பா.

தொலவழிததாயபலவகைககலையையு
மொலவகையுணாநதேயுனனுறுமநநெறி
பயினறவாபொறையுமபணபுடையருளு
மிசசகமுவபபமிககியைநதவாமனததான
நிசசலதாளெனநிகழ்வுறூஉமொருபெய
ரிடுகுறியாறபிறாபெயருறலபோலா
திடுகுறிகாரணபபெயரெனபபெறீஇயுயா
மேனமைசாலசிறப்பிற்பான்மையிறபெரியோன்
இநதியெனறியமபுமெழிலுடைமொழியாந
தனனுடையனமொழிதகைமைசானமொழியாக்
கனனுடையதெனக்கவினுறபபொலியச
செயதளிததருளியசெவவியபொருளாற
பிறஙகுறுவிருததிபபிரபாகரமெனப்
போறறுபபுலவாபுகழதரவிமைக்கு

மேககுயா நூலுளவிரிபபனவுணர
வனபருளொழுககுமடககமறறுணமையி
ஞாககியநகைசமுநதுறுததவுமறிவா
ஞறறண மறறினமையினலமருவோககும
விருததியினியலுமவிளமபிகொடசி
யாதியவளவையினனைததுவேறறுமையு
மதறகுளகருவியுமதறபபெயனு
மினனவெனறெளிதிறறெரிதரவினிதிற
பிரமநிடடையிறபிறஙகியசீாததிப
பீதாமபரஜீயெனபபடுபெரியோன
முநதுநூலகணடுமுறைறபபடவெணணி
வரைததலைததீநதேனகொள்பவனவாயநது
மாபபெருஙகணணுடைமாலபினிறசிவண
காணடலாதியவீரரூபொருணமணி
மாணடகுவிருததிககதிரொடுவெயஙகலின
விருததிரதநாவலியெனவியனபோ
பரிததிடஉழிநூலபகாநதனனதனை
நீடுலகதனுணணிமிாநதபலவளததுப
பாடுறவோஙகுமபணபுடைசசோணாட
டெஞசலிலசிறபபினவிஞசியசீாததிப
பலபெருமபதியுடடொலபெருமபதியா
யறவொழுககததாஞண றமைநதோககுந
துறவொழுககததுததூயமையிஞோககும
பிறஙகியவிடமாவிளஙகிமேம்படூஉம
பரவைபபெருமபுவிபரபபொறையாறறும
பாநதளினனநதலைபபடததுமணியிடமபெறீஇ
யிறஙகியவாழததிடஙகாக்கிடங்குறீஇ
மஞசுசூழ்கிடககுமிஞசியினரணுடைத

திருவசீணமறகிரறேவருஞ்சசுந
தருஞ்சயென்றுரைக்குமவிஞ்சுயர்நகரோன
றனனிடத்தடைபுநனையகுணனிகு
மாணமினைருசததருமபழிசுமசகு
மெனனலியவாககுமிலககியமிலககணந
தருககமொடுமேனைததததுவககலைநூற
பனனைபுணாததுமபானையிறபெரியோ
னநதணாநூாருமறததிறகுமாதியாய
நினறசெஙகோலினீரமையராய
வேததியனமரபினவாயததவனபுகழூந
சகைமையிரகுபபுசாமியெனறுரைககுந
திருபபெயருடையோனறிகழதருபொதியத
தொனமைபதீமபடுதூயநதமிழ்ககுயாபபு
மருஙகலையுணாவானலகாவவாவினாக
கமழுறுமகிழசசியுமடைதரபபனனூன
மொழிபெயாததருடலைமுதுகடனுககொளீஇ
யமைநதுறுபெரியோனுதலினிநனூன
மொழிபெயாததருளினனுககவமமுதுநூல
விழுமியதாசவிளஙகியவுளஙகொளீஇ
வடககுறுநாடெனவணடமிழவழஙகுமித
தடபெறுநாடுநதனிப்பயன்பெறுவா
னனனவனுருவபபடததுடனமையா
மனனியசிறபபினசசிடசசெயவித
தாபவேளாணமையியறறினனநதப
டெரிபவனகரியமததமபடுகரடத
தூஙகுகளிறுறழததுயலவருநாவாய
வீஙகொலிததிரைகடறபடுதருபெருவணத்

தோஙகியசெலவததுறையுளளனபபடுந
தூறறுககுடியெனுநதொலபெருமபதியோன
வாயமையையுயிரிறசீரிதாநிறுதத
தூயமைசாலகஙகைககுலததுவநதுயாநதோன
வேணிககணிதருவிரிநீரககஙகையற
பேணிபபரவலேபீடெனவுணரவோ
னீறறிறசிறநததாவேறறொருபொருளைக
கனவினுஙகருதாககாட்சியனறவததிற
பெறறவாகளிடபிறபெறுததியபெயரே
காரணபபெயராககணட
மாணிககவாசகனெனபெயரவனே.

சிறப்புபபாயிரம முறறிறறு.



# விருததிரததநாவலியின் விஷய அநுககிரமணிகை.

## முதல் ரத்நம்.

### காரணததோடும பேதததோடும விருததியின சொரூபத்தை நிரூபிததல க-உச.

## இரண்டாவது ரத்நம்.

க. பிரத்தியக்ஷப் பிரமாண நிரூபணம் உரு-அஅ.

# மூன்றாவது ரத்நம்.

## உ. அநுமானப்பிரமாண நிரூபணம் அகூ-க0ச.

## ஐந்தாவது ரத்நம்.

### ௪. சப்தப்பிரமாண நிரூபணம் ௧௧௫-௧௫௧

௨௧ சாப்தபோதத்தின் ஆகாங்க்ஷை முதலிய நான்கு சககாரிகளின் நிருபணம் ௧௪0-௧௪௯.

# ஏழாவது ரத்நம்.

## சு. அநுபலப்திப்பிரமாண நிரூபணம்.

கசுங-கஅக.

## எட்டாவது ரத்நம்.

### க. அப்பிரமாவிருத்தியின் பேதமும் அநிர்வசநீயக்கியாதியின் நிரூபணமும்.

எட்டாவது ரத்நம் முடிந்தது.

# ஒன்பதாவது ரத்நம்.

## ௨. அபபிரமாவிருததியின பேதமான சதகியாதியைக காடடுதலோடு அதன கணடநம

## ௨௨௩-௨௩0.



ஒன்பதாவது ரத்நம் முடிந்தது.

## பத்தாவது ரத்நம்.

௯ அப்பிரமாவிருத்தியின் பேதமான அசத்கியாதியைக் கண்டித்தல் பூர்வகமான கண்டநம் ௨௯௧-௨௯௪



பத்தாவது ரத்நம் முடிந்தது.

---

# பதிஞோராவது ரத்நம்.

## ௪. அபபிரமாவிருத்தியின் பேதமான ஆதமககியாதியைக காடடுதலபூாவககணடநம௨௫௫-௨௬௦



பதிஞோராவது ரத்நம் முடிந்தது.

—

## பனிரண்டாவது ரத்நம

### ௫ அபபிரமாவிருதநி பேதமான அநந்யதாககியாதியைக் காடடுதல பூாவகமான அதன கணடநம உ௪க-உ௪உ.



## பதின்மூன்ருவது ரத்நம்.

### ௬. அபபிரமாவிருததியின பேதமான அககியாதியைக காட்டுதலோடு கணடிததல உ௪௩-உ௪அ.

## பதினான்காவது ரத்நம்

விருத்தியின் பயனை நிரூபித்தல் உசகூ-உருஎ.

விருத்தி ரத்நாவலியின் அநுக்கிரமணிகை முடிந்தது.



# பிழை திருத்தம்.

| பககம | வரி. | பிழை. | திருததம |
|---|---|---|---|
| க 0 | க ச | தோஷ தோஷ | தோஷ |
| க ௬ | க | பாஷய | பாஷய |
| ஷை | க 0 | பிரமாணததின | பிரமையின |
| க ரு | க | காரியம | காரியமான |
| உ க | க ச | யோககியததனமை | அயோககியததனமை |
| உ ச | உ | வாககியததிலுைம | வாககியததிலல |
| உ கூ | க உ | பேதமினறி | பேதமினறிய |
| ஷை | உ ச | தனது | சுவ (தனது) |
| ௬ அ | உ ச | காரணம | கரணம |
| ௬ கூ | க கூ | காரணம | கரணம |
| ச ௬ | க ச | துவககுசையோக | சையோக |
| ரு கூ | க க | கவயததில கோவின | கோவின |
| ரு கூ | க ச | கோவிலுளது | கோவிலுளது |
| அ உ | ரு | * குறிபபை | அ௬-வது பககம அ-வது வரியில ஒன்பது எனனும சொலலின் முன சோகக |
| அ ரு | க ௬ | யறிவிககும பிரததியக்ஷம சபதமாமோ | யறிவிபபது பிரததியக்ஷ சபதமோ |
| அ அ | எ | தேவததனது | தேவதததனது |
| க 0 க | கூ | கபால | கட |
| க 0 ௬ | உ உ | உலபதி | உபலபதி |
| க 0 கூ | ரு | பிர ஹம | பிரம |

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ககஉ | உக | அந்தியாய | அத்தியாய |
| ககரு | கச | தனது | சுவ (தனது) |
| ஷை | உக | இராஜ்ஜு அல்லது இராஜ்ஜு | சுத்தி அல்லது சுத்தி |
| ஷை | உஉ | இராஜ்ஜு | சுத்தி |
| கஅஉ | எ | தாமத்தியாச | தாமாத்தியாச |
| ஷை | சு | கசல | சகல |
| உஅசு | கரு | இராஜதாய்வ | இராஜதாவயவ |
| கசரு | கச | பொருள | பொருள |

# விளம்பரம்.

இபபுஸதகமும மறறும பலவித புஸதகஙகளும பறபல நகைகளும, விசிததிர வேலைபபாடுளள ரபபா ஸடாமபுகளும வேணடியவாகள தஞசாவூா வடககு வீதி வி கோவிநதன அண்டு பிரதாஸ அவாகளுககு எழுதிபபெறறுககொளளலாம

ஓம

## தத்ஸத் பிரஹ்மணே நமஃ

### ஸ்ரீ சஙகராசாரிய ஸவாமிகள ஸதுதி

அஙகயறகணணிபஙகனஞசமாயவதரிதத
சஙகரபகவறபாததயாபரஙினதுசெயய
பஙகயததிருததாடமிறபததியிலெளியனேனு
…ிஙகயலகாணுமேனமையெயதிடறகருளசெயவாயே

### ஸ்ரீ பரமாசாரிய ஸதுதி

ஏ… ிராமசநதிரனுகெகனறுஞசயமுணடாகவெனறுன
…ரெயவருமபுகழநதுபினனாததிருமாலசீரையுரைததிடுமா
…வமுதாயவதரிததவனபினபெருககேயருளாளா
…டபீ…தெதனையாளவாயசோநதேனுனறனசேவடியே

### ஸ்ரீ ஆசாரிய ஸதுதி

…ணடுசினனடியாாகூடடமபழகிலாபபளகனேறகு
விணடுரைசெயயலாகாவிழுபபொருடனனைநீயுங
கணடுகொளளெனபபகாநதானகரையிலாவருளினமிககான
…ணடுவெனனியறபோவாயநதவியனகுருவிஷணுநாதன.



ஓம் கணேசாய நம:.

# ஸ்ரீவிருத்திரத்நாவலி என்னும் விருத்திப்பிரபாகரத்தின் சாரம்.

## ௧. முதல் ரத்நம்.

## காரணத்தோடும் பேதத்தோடும் விருத்தியின் சொரூபத்தை நிரூபித்தல்.

௧ - ௨௪.

### மங்கலம்.

சாக்கிர மாதி யாகச் சாற்றுமூன் றவத்தை கட்கும்
சாக்கிநான் பரனே யென்னச் சரதமா யறிவி னிந்த
வீக்கிய வுடலயா னென்றே வெவ்விடா தன்னை யீயும்
போக்குத்தற் கரிய மானம் போகுந்தன் மூலத் தோடே.

### ௧. விருத்தியினது சாமானிய லக்ஷணத்தை நிர்ணயித்தல். ௧ - ௬.

௧ "யான் பிரஹ்மம்" என்னும் விருத்தியினால் காரியத்தோடுகூடிய அஞ்ஞானத்தின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் உண்டாமென்பது வேதாந்தத்தின் சித்தாந்தம்.

௨. ஆண்டு விருத்தியாது? விருத்தியின் காரணமியாது? விருத்தியின் பயன் யாது? என்றறிதல் வேட்கை யுண்டாக,

அதனபொருடடு விருததிபபிரபாகரததின சாராமச வடிவின தாகிய விருததிரதநாவலி யெனனும நூல எழுதபபடுகின றது

ந. அநதக்கரணததின பரிணாமமும அஞஞானததின பரிணாமமும விருத்தியெனபபடும. குரோதம் சுகமுதலியன அநதககரணததின பரிணாமமும ஆகாய முதலியன அஞஞா னததின பரிணாமமுமாம. அவறறை விருத்தி யெனபதிலலை. அங்ஙனமாயினும், விஷயததை விளககும அநதககரண அஞ ஞானஙகளின பரிணாமம எவையோ அவை விருத்தி யெனப படும.

ச குரோதம சுகமுதலிய வடிவினவாகிய அநதககரண பரிணாமஙகள எவையோ, அவறறால எபபதாாததததின பிர காச (விளகக) மும உண்டாகிறதிலலை. அஙஙனமே ஆகாய முதலியவறறானும பிரகாசமுணடாகிறதிலலை. ஆதலாலஅவை விருததியனறு ஆனால ஞானவடிவ பரிணாமததால பிரகாச முணடாகினறது. அதனையே விருத்தி யெனபா.

ரு. சுகம, துககம, காமம, திருபதி (சநதோஷம), குரோதம, க்ஷமை (பொறுமை), தைரியம, அதைரியம், லஜ்ஜை (வெடகம), பய முதலிய எததுணை அநதககரண பரி ணாமஙகள உளவோ, அவவெலலாவறறிறகும விருததியென னுஞ சொல்லால வியவகாரம எழுதபபட டிருககினறது. அங்ஙனமாயினும், ததுவாநுசநதாநம அத்வைதகௌஸதுப முதலிய நூல்களில விளகக பரிணாமமே விருத்தி யெனபபட டிருக்கினறது.

௬. சில நூல்களில் அஞ்ஞானத்தைக் கெடுக்கும் பரிணாமத்தினை விருத்தி யென்பர். பரோக்ஷஞானத்தினாலும் அசத்துவாபாதக அஞ்ஞானமசத்தின நாசமுண்டாகின்றது.

அல்லது, விஷய சேதனத்துள்ள அஞ்ஞானத்தின் நாசமோ அபரோக்ஷ ஞானமின்றி உண்டாகிறதில்லை. பிரமாத்திரு சேதனத்துள்ள அஞ்ஞானத்தின நாசம பரோக்ஷஞானத்தினாலும உண்டாகின்றது. ஆதலால பரோக்ஷ ஞானத்தில முற்கூறிய லக்ஷணத்தின அவ்வியாபதியில்லை.

எ. அங்ஙனமாயினும், சுகதுக்கங்களின ஞானவடிவ விருத்தியிலும, மாயாவிருத்திவடிவ ஈசுவரனது ஞானத்திலும, அங்ஙனமே சுத்திரஜத முதலியவற்றைக் கோசரிக்கும பிரமரூப அவித்தியாவிருத்தியிலும், சொப்பனத்தைக் கோசரிப்பதும சுழுத்தியின்கணுள்ள சுகத்தினையும அஞ்ஞானத்தினையும கோசரிப்பதுமாகிய வித்தியாவிருத்தியிலும, பிரத்தியபிஞ்ஞை ஞானவடிவ விருத்தியிலும முற்கூறிய லக்ஷணத்தின அவ்வியாப்தியுண்டு. ஏனெனின,

க. முதலில அறியப்படாத சுக முதலியன உற்பத்தியாய்ப பின்னர் அவற்றின ஞானமுண்டாமாயின், சுக முதலியவற்றின ஞானத்தால சேதனத்தினது அஞ்ஞானத்தின நாசம சம்பவிக்கும அவ்வறியப்படாத சுக முதலியன இல்லை ஆனால சுக முதலியனவும அவற்றின ஞானமும ஒருகாலத்தில உற்பத்தி யாகின்றன. ஆதலால் அறியப்படாத சுக முதலியவற்றின அபாவத்தால சுக முதலியவற்றைக் கோசரிக்கும விருத்தியினால அஞ்ஞானத்தின நாசம சம்பவியாது.

௨. அங்ஙனமே ஈசுவரனுக்கு அசாதாரண வடிவத்தால் சகல பதார்த்தங்களும் எப்போதும் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றன. ஆதலால் அஞ்ஞானமின்மையால் மாயையின் விருத்திவடிவ ஞானத்தினாலும் அஞ்ஞானத்தின் நாசம் சம்பவியாது.

௩. சுத்தி ரஜத முதலியனவும் சொப்பனத்தின்கண்ணுள்ள மித்தியாபதார்த்தங்களும் அவற்றின் ஞானமும் ஏககாலத்தில் உற்பத்தியாகின்றன. ஆதலால் பிரம விருத்தியினாலும் அஞ்ஞானத்தின் நாசம் உண்டாகிறதில்லை.

௪. அங்ஙனமே சுழுத்தியில் விருத்தியிருக்கினும், அதன் விஷய வடிவ தனது உபாதானமும் ஸ்வரூப சுகத்தின் ஆவரணமுமாகிய அஞ்ஞானத்தின் நாசம் அதனால் உண்டாகிறதில்லை. ஞானகோசரப் பிரத்தியபிஞ்ஞை ஞானம் உண்டாகும்பட்சத்தும் ஆவரணமின்மையின், அதனாலும் அதன் நாசம் உண்டாகிறதில்லை. எங்ஙனம்: "யான் பிரஹ்மம்" என்று ஒருமுறை உதயமாகிய ஞானத்தினால் ஸ்வரூபத்தின் ஆவரணம் நாசமாகின்றது. பின்னர் அநேகமுறை விசாரத்தினால் வித்துவானுக்கு "யான் பிரஹ்ம" மெனனும் விருத்தி உதயமாகின்றது. அதனால் முன்னரே ஆவரணமின்றிய ஞானிக்கு ஸ்வரூபத்தின் ஆவரணம் பங்கமாகிறதில்லை. அங்ஙனமே தாரையாயச்செல்லும் விருத்தி யுண்டாகும்பட்சத்தும் முற்கூறிய பயனுக்கு இரண்டாவது முதலிய விருத்தியில் அவ்வியாப்தியிருக்கின்றது. ஏனெனின், ஞானதாரை உண்டாகும்பட்சத்து முதல் ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாக இரண்டாவது

முதலிய ஞானங்கட்கு அஞ்ஞானத்தைக் கெடுக்குந்தன்மை சம்பவியாது.

அ. ஆதலால் விளக்க பரிணாமத்தை விருத்தி யென்பர். இதன் தாற்பரியம் இதுவாம் —"இருக்கிறது" எனனும் விவ காரத்திற்கு ஹேதுவாகிய அவித்தை அந்தக்கரணங்களின் பரி ணாமம் எதுவோ அது விருத்தி யெனப்படும்.

கூ. விளக்கபரிணாமத்தை விருத்தியெனினும், அறியப் படாத பதார்த்தத்தைக் கோசரிக்கும் விருத்தியிற்றான் அஞ் ஞானத்தைக் கெடுக்குந்தன்மை வடிவப பிரகாசிக்குந்தன் மையிருக்கின்றது. மறைக்கப்படாத பதார்த்தத்தைக்கோச ரிக்கும் விருத்தியில் பிரகாசிக்குந்தன்மை யில்லை. ஏனெ னின், மறைக்கப்படாத சேதனத்தின் சம்பந்தத்தினாலேயே விஷயப்பிரகாசம் சம்பவித்தலால் விருத்தியில் பிரகாசிக்குந் தன்மையைக் கற்பித்தல் அயோக்கியமாம். ஆதலால் விருத் தியில் அஞ்ஞானத்தைக் கெடுக்குந்தன்மையின்றி வேறுவி தப் பிரகாசிக்குந்தன்மை சம்பவியாமையால், இரண்டாவது லக்ஷணத்திற்கும் முதல லக்ஷணத்திறபோல, சுகமுதலியவ ற்றைக் கோசரிக்கும் விருத்தியில் அவ்வியாப்தி உண்டா கும். ஆதலால் "இருக்கிறதெனனும் வியவகாரத்திற்கு ஹேது வாகிய அவித்தை அந்தக்கரணங்களின் பரிணாமம்" விருத்தி யெனப்படும்.

## உ. விருத்தியின்பேத நிரூபணம் ௧0-கஎ.

௧0. அந்த விருத்திஞானம் இருவகைத்தாம். க. ஒன்று பிரமைவடிவினது. உ. மற்றையது அப்பிரமைவடிவினது.

கக,

க. (க) பிரமாண ஜந்நிய யதாரதத ஞானத்தைப்பிரமை யென்பா.

(உ) அல்லது அபாதித (பாதிக்கப்படாத) அாத தத்தை விஷயஞ்செய்யும ஞானத்தினைபபிரமை யென்பா.

(ங) அலலது அபாதித அாதததததை விஷயஞ செய்யும ஸ்மிருதிககு வேருகிய ஞானததினைப் பிரமை யென்பா.

(ச) அலலது யதாாத்த அநுபவத்தைப் பிரமை யெனபா.

உ. அதனின் வேருகியஞானத்தை அப்பிரமையென்பா.

கஉ. முதல் இலக்ஷணததை அநுசரிதறோ பிரததியக்ஷ முதலிய பேதததால் பிரமாஞானம அறுவகைததாம. அதனின வேருய ஈசுவரஞானமும சுகமுதலியவறறைக கோசரிககும ஞானமும் ஸமிருதிஞானமும பிரமஞானமும அப்பிரமை வடிவினவாம. அவறறுள், ஈசுவரஞானமுதலியன யதார்த்த அப்பிரமையும, பிரமஞானம அயதார்த்த அப்பிரமையுமாம.

கங. சிலநூலாசிரியாகள் மததிலோ யதாாதஞானம் பிரமையும் அயதாாத்தஞானம அப்பிரமையுமாம். அதன்படி இரண்டாவது லக்ஷணமுளது. அதனை அநுசரித்தோ ஈசுவர ஞானமும சுகமுதலியவறறைக் கோசரிக்கும் ஞானமும

ஸமிருதி ஞானமும் பிரமைகளாம. பிரமஞானம் அப்பிரமை யாம.

கச. ஆனல் பிராசீன ஆசாரியர்கள் ஸமிருதிககுவேருய யதாாத்தஞானததில பிரமா வியவகாரததைச செயதிருககின் றனா. ஆதலால ஸமிருதியின வேறுபடடதாகப பிரமையின லக்ஷணததைக கூறுதலவேணடுமே. அதனபடி மூனருவது நானகாவது லக்ஷணஙகளுள. அதனை அநுசரிததுப் பிரததி யக்ஷ முதலிய அறுவகை ஞானமும ஈசுவரஞானமும சுகமு தலியவறறைக கோசரிககும ஞானமுமே பிரமைகளாம. அவ றறின வேருய ஸ்மிருதிஞானமும பிரமஞானமும அப்பிரமை களாம்.

கரு. சுததி ரஜதமுதலிய ஞானம ஸமிருதிககு வேருமம; அபாதித அாததததை விஷயஞசெயகிறதிலலை. ஆனல பாதித அாததததை விஷயஞசெயகினறன; ஆதலால பிரமையன்று. அபாதித அாததததை விஷயஞசெயவது ஸமிருதிஞானமு மாம. ஸமிருதிஞானததிற பிரமா வியவகாரமிலலை. ஆதலால அநேக நூல்களில "ஸமிருதிக்கு வேருய் அபாதித அாததத் தை விஷயஞசெயயும ஞானம" பிரமையெனபபடுகினறது.

கசா. இரண்டாவது லக்ஷணததின பரீக்ஷை இதுவாம.— யதாாததமோ ஸமிருதியுமாம; அது அநுபவவடிவ மன்று. அநுபவமோ பிரமஞானமுமாம; அது யதாாததமனறு. ஆத லால "யதாாததாநுபவம" பிரமையும் அதனின வேருயது அப்பிரமையுமாம. இபபிரமையின லக்ஷணமும ஸமிருதியின வேறுபடடதாம.

சாரத்தைக் கிரகிப்பவனது திருஷ்டியினால் முற்கூறிய விருத்தை அங்கீகரிக்கின சித்தாந்தத்தில் ஆணியில்லை; மாறான அநுகூலத்தன்மையுள்ளது. அதன சித்தாந்தத்திற் கநுகூலமானது இவ்வுதாரணமாம்.

௧௧௨. ஆத்மாவென்னும் சொல்லிற்குப் பொருள் யாது என்னும் வினாவிற்குத் "தேகமுதலிய வைதாம முடையது ஆத்மா" என்றுகூறும் குருவின் விடையால் அநித்தியமும் அசுசியும் துக்க சுவரூபமுமான தேகாதிகளினும் விதாமமான நித்திய சுத்த ஆநந்தரூபம் ஆத்மாவென்னும் சொல்லிற்கு வாச்சியமாம். இவ்வாறு ஏகாந்தமாகிய இடத்திலிருந்து விவேகிக்குங்காலத்தில் மனதிற்கு ஆத்மாவோடு சையோகமுண்டாய உபமிதிஞான முண்டாகின்றது. முற்றும் நையாயிக கிரமத்தில் வெறுப்புள்ளதாயின முற்கூறிய சித்தாந்தத்தின் கிரமமே அங்கீகரிக்கத்தக்கதாம்.

௧௧௩. ஆனால் "வியாபாரமுடைய அசாதாரணகாரணம் கரண மெனப்படும்" என்று முற்கூறிய லக்ஷணம் சித்தாந்தத்தின்படி எண்டுப் பொருந்தாது. ஏனெனின்,

க பிரத்தியக்ஷம் அநுமானம் சப்தமெனனும் மூன்றும் பிரத்தியக்ஷப்பிரமை அநுமிதிப்பிரமை சாப்திப்பிரமையெனப்படுகின்ற வியாபாரமுடையகாரணமாம்.

உ. உபமானம் அர்த்தாபத்தி அநுபலப்தி என்னும் மூன்றும் உபமிதி முதலிய பிரமைகளின் நிர்வியாபார காரணமாம்.

ஆதலால் "வியாபாரத்தின் வேறாய அசாதாரண காரணத்தினைக் கரண"மென்றல் வேண்டும். ஏனெனின், எங்ஙனம் வியாபாரத்தில் வியாபாரத்தன்மை யில்லையோ, அங்ஙனமே வியாபாரத்தின் வேறாதலும் வியாபாரத்திலில்லை. ஆதலால் சித்தாந்தத்தின்படி வியாபாரமுடைய தெனனும் சொல் லுளவிட்டது வியாபாரத்தின் வேறாயதென்று சொல்லுதல் வேண்டும்.

௧௧௪. இவ்வாறாறால் பிரபஞ்சத்தில் பிரஹ்மத்தின் விதாமத்தன்மையினது ஞானம் உபமானமாம். பிரபஞ்சத்தினும் விதாமம் பிரஹ்மமெனபது உபமானப் பிரமாணம். அதன் பயன் உபமிதிஞானமாம்.

உபமானப்பிரமாண நிரூபண மெனனும்

நான்காவது ரத்நம் முடிந்தது.

# ஐந்தாவது ரத்நம்.

## ௪. சப்தப்பிரமாண நிரூபணம் ௧௧௫-௧௫௧.

## ௧௮. சாப்திப் பிரமையின் பேதம் ௧௧௫-௧௧௮.

௧௧௫. சாப்திப்பிரமையின் கரணத்தினைச் சப்தப்பிரமாண மென்பர். சாப்திப்பிரமை இருவகைத்தாம்,—ஒன்று வியாவகாரிகம்; மற்றையது பாரமார்த்திகம்.

௧௧௬. வியாவகாரிக சாபதிபபிரமையும் இருவகைத் தாம க ஒனறு இலெளகிகவாக்கிய ஜநநியம; உ. மறறை பது வைதிகவாககிய ஜநநியம.

க "நீலம குடம" எனறல முதலியன இலௌகிகவா க்கியங்களாம.

உ. "வசசிரஹஸதன புரநதரன" எனறல் முதலியன வைதிகவாக்கியங்களாம.

க. எங்ஙனம் நீலத்தின அபேதமுடையது குடமென பது முதலவாககியததிறகுப பொருளோ,

உ அங்ஙனமே வசசிரஹஸதனினும அபேதமுடைய வன புரநதரன எனபது இரண்டாவது வாககியத் திறகுப பொருளாம.

க. முதலவாககியததில விசேஷணத்தை யறிவிப்பது "நீல" மெனனுஞ சொல, விசேஷியததை யறிவி பபது "குட" மெனனுஞ சொல.

உ. இரணடாவது வாககியததில் "வசசிரஹஸதன" என்னுஞ சொல விசேஷணததை யறிவிபபதும; "புரநதரன" எனனுஞ சொல விசேஷியததை யறிவிபபதுமாம.

இவவாறுல இலெளகிக வைதிக வாக்கியஙகளுக்குச் சமானகிரம முணடு.

௧௧௭. ஆனால் வைதிகவாக்கியங்கள் இருவகைத்தாம். க ஒனறு வியாவகாரிக அாததததை அறிவிபபதாம; உ.மற றையது பரமாாதத தததுவததை அறிவிபபதாம.

க. பிரஹ்மத்தின வேருகிய சகலமும வியாவகாரிகப் பொருளெனப்படும.

உ. பாமார்த்த தத்துவம் பிரஹம மெனப்படும

௧௧அ. பிரஹ்மததை யறிவிககும வாககியமும இருவகைததாம.

க. "தத" பதாாததத்தின் சுவரூபததையாவது "துவம" பதாாதததின சுவரூபததையாவது அறிவிபபது அவாந்தரவாக்கியமாம.

(க) எங்ஙனம் "சததியஞாநாநதம பிரஹமம" எனனும வாககியம "தத" பதாாததததை அறிவிபபதாம.

(உ) "யாதொரு இவன் இருதயததின உடசோதியாகிய புருஷனும" என்னும வாககியம "துவம" பதாாதததின சொரூபததை யறிவிபபதாம.

உ. "தத" பதாாதத "துவம" பதாாததஙகளின அபேதததை அறிவிபபன "தததுவமஸி" முதலிய மகாவாககியஙகளாம.

## ௧௯. சப்தத்தினது விருத்தியின் பேதமும் சக்தி விருத்தியினது நிரூபணமும் ௧௧௯-௧உ௪.

௧௧௯. எநத அாததததில எநதப பதததின விருததி உளதாகினறதோ, அவ்வாதததின உணாசசி அபபதததால உணடாகின்றது. பதததிறகு அர்தததோடுளள சமபநதம

விநத்தி யெனபபடுகினறது. சகதி லக்ஷணைகளின பேதத்தால் அநத விருததி இருவகைததாம.

**கஉ0.** பதாாத்ததகின் போததகிறகு எதுவாகிய சாம ாததியததினைச சக்தி (ஆறறல) எனபா

எவவாததததில பததின சகதி யுளதாகினறதோ, அவவாததம பததின சக்கிய மெனபபடுகினறது.

எங்ஙனம் கடம படம எனனும பதஙகளில கலசம் வஸ்திரமெனனும பொருளகளை யறிவிககும சாமர்ததியம உளது. அது சக்தியாம.

ஆதலால கடம படம் எனனும இரணடு பதஙகட்கும் கலசமும வஸதிரமும சக்கியார்த்தமாம. அதனையே வாச்சி யார்த்தமெனறும கூறுவா.

**கஉக.** அநதச சகதி க யோகம, உ. ரூடம, ங. யோக ரூடமெனனும பேதததால் மூவகைததாம.

க. அவயவ சகதியினை யோகமெனபா. எங்ஙனம்: பாசக (அடுவா) னென்னும பதததில பாச (அடு) எனனும அவயவததிறகுப பாகம (சமைததல்) பொருளாம. அகன (ஆன்) எனனும அவயவத திறகுக காததா (செயவோன) பொருளாம்.

இவவாறருன் பாசகபததின அவயவங்களிலுளள அா ததததை யறிவிததற கேதுவாகிய சாமாததியம எதுவோ, அது பாசகபததில அவயவசக்தியாம.

அவயவசக்தியால் எந்தச் சத்தம் தனது பொருளை அறிவிக்கின்றதோ, அது யௌகிகசப்த மெனப்படும். அது பாசகன் முதலிய சப்தங்களைப்போலவாம்.

௧௨௨. ௨. பரிபாஷா சக்தியினை ரூடி யென்பர். சாஸ்திரத்தின் அசாதாரணசங்கேதம் பரிபாஷை யெனப்படுகின்றது. எங்ஙனம்: யாப்புநூல்களில் பாணம், இரசம், முனி, என்னும் சொற்களுக்கு ஐந்து ஆறு ஏழு என்பனபொருள்களாம். இது சாஸ்திரத்தின் அசாதாரண சங்கேதமாயிருத்தலின் பரிபாஷையாம். ஆதலால் பரிபாஷையினால் சப்தத்தினுள்ள போதத்திற் கேதுவான சாமர்த்தியம் யாதோ, அது ரூடிசக்தி யெனப்படுகின்றது.

ரூடிசக்தியில் எச்சத்தம் தனது பொருளை அறிவிக்கின்றதோ, அது ரௌடிகசப்த மெனப்படுகின்றது. அவை கடம் நிலம், பொன் என்னும் சொற்களாம்.

௧௨௩. ௩. அவயவம் பரிபாஷையென்னும் இரண்டன் அர்த்தபோதத்திற்கும் ஏதுவாய சாமர்த்தியத்தினை யோகரூட உபயவடிவசக்தி யென்பர். எங்ஙனம்: பங்கஜமென்னும் சொல்லின் பங்கமென்னும் அவயவத்திற்குச் சேறு பொருளாம்; ஜம் என்னும் அவயவத்திற்குப் பிறந்தது என்பது பொருளாம்.

(௧) இவ்வாற்றால் சேற்றினின்றும் உண்டாகிய கமலம் பங்கஜ மென்னும் சொல்லிற்குப் பொருளாம். ஏனெனின், பங்கஜமென்னும் சொல்லில் அவயவ சக்தி யிருக்கின்றது.

(உ) ஜலஜந்துவும பங்கத்தினின்றும் உற்பத்தியாயிருக்கின்றது. அதனைப் பங்கஜ மென்ப தில்லை; ஆனால தாமரைப் பூவினையே பங்கஜ மென்பா. ஆதலால பங்கஜ மெனனும் சொல்லில பரிபாஷாசக்தியுமிருக்கின்றது.

ஆதலால பங்கஜ மெனனும் சொல்லில இரண்டு சாமாத்தியமு மிருத்தலின யோகரூட உபயவடிவ சக்தியிருக்கின்றது.

௧உ௪. எல்லோா மதத்தினும சக்தி லக்ஷணையென னும இரணடு விருத்திகளுள. பிரஹமப்பிரமையின கரணமாகிய மகா வாக்கியத்தின் ஆத்த நிரூபணத்திலும இரணடின் உபயோகமே யுளது.

## ௨௦ சத்தத்தினது விருத்தியின் பேதமும் லக்ஷணாவிருத்தியின் நிரூபணமும் ௧உ௫-௧௩௧.

௧உ௫.

௧. "யந்மநஸா ந மநுதெ-எந்தப் பிரஹ்மத்தை மனதினால உலகம அறிகிறதில்லையோ" என்றலமுதலிய சுருதிகளில எங்ஙனம மானஸஞானத்திற்கு விஷயமாதல நிஷேதிக்கப்பட்டிருக்கின்றதோ,

௨. அங்ஙனமே "யதொ வாசொ நிவத்தந்தெ அப்ராப்ய மநஸாஸஹ-வாக்குகள் மனதோடு அடையாதுள தனினறுமநிவாத்தியாகின்றனவோ" என்றல முதலிய சுருதிகளில சப்தத்திற்கு விஷயமாத

லும் நிஷேதிக்கப்பட்டு நிற்கின்றது. ஆதலால் மகாவாக்கியங்களைப் பிரஹ்மப்பிரமைக்குக் கரணமென்று கூறுதல் விருத்தமாம்.

௧௨௯. அங்ஙனமாயினும், சப்தம் பிரஹ்மஞானத்திற்குக் கரணமாகாதெனனும் பொருளில் சுருதிக்குத்தாற்பரியம் உள்தாயின், "தంத்வௌபநிஷదం புருஷం ப்ருச்சாமி- அந்த உபநிஷத்தத்தினால் அறியப்படும் புருஷனை யான் கேட்கின்றேன்" என்னும் சுருதியினால் பிரஹ்மத்திற்கு உபநிஷத்தினால் அறியப்படுந்தன்மை வடிவ ஔபநிஷத்தன்மை கூறுதல் அசங்கதமாகும். ஆதலால் சக்திவிருத்தியால் பிரஹ்மத்தின் ஞானம் சப்தத்தினால் உண்டாகிறதில்லை. லக்ஷணாவிருத்தியினால் பிரஹ்மகோசர ஞானமுண்டாகின்றது. ஆதலால் சக்திவிருத்தியினால் சப்தம் பிரஹ்ம ஞானத்திற்குக் கரணமாதலின் நிஷேதமும் லக்ஷணாவிருத்தியினால் சப்தம் பிரஹ்ம ஞானத்திற்குக் கரணமாதலும் உண்டு. ஆதலால் லக்ஷணாவிருத்தி ஜந்நிய ஞானத்தின் விஷயமாயிருத்தலின், பிரஹ்மத்திற்கு ஔபநிஷத்தன்மை சம்பவிக்கின்றது.

லக்ஷணாவிருத்தி ஜந்நியஞானத்திலும் சிதாபாசவடிவ பலத்தின் விஷயம் பிரஹ்மமன்று; ஆனால் ஆவரணபங்க வடிவ விருத்திமாத்திரத்தின் விஷயத்தன்மை பிரஹ்மத்திலுளது. எங்ஙனம் சப்தஜந்நிய ஞானத்திற்கு விஷயமாந்தன்மை முற்றும் நிஷேதிக்கப்படுகிறதில்லையோ, அங்ஙனமே மானஸஞானத்திற்கு விஷயமாந்தன்மையும் முற்றும் நிஷேதிக்கப்படுகிறதில்லை. ஆனால் சமதமாதி சமஸ்காரமின

றிய விக்ஷிப்தமனத்திற்குப் பிரஹ்மஞானத்தில் ஏதுவாதலி லலை. மானஸஞானத்தில் எந்தச் சிதாபாஸ அம்சமுளதோ அதற்கு விஷயமாந்தன்மையில்லை. ஆதலால் பாஷ்யகாரர் கிரமப்படி பிரஹ்மப்பிரமைக்கு முற்கூறிய மனம சககாரியும் சப்தம கரணமுமாம், இவ்வாற்றால் மகாவாக்கியங்கள் பிர ஹ்மப் பிரமைக்குக் கரணமா மென்று கூறுதலில் யாதும் விரோத மில்லை.

கஉஎ. இவ்வாறு இரண்டு விருத்திகளுள்: அவற்றுள் சக்தியைக் கூறிவந்தோம்.

சக்கிய சம்பந்தத்தினை லக்ஷணை யென்பர்.

கஉஅ. முற்கூறியபடி சக்திவிருத்திஜந்நியஞானத்தி ற்கு விஷயமாகாமை யிருத்தலின் சக்தி விருத்தியைக் கூறு தல் பயனின்றியதாம்.

கஉகூ. அங்ஙனமாயினும்,

க. சக்தி ஞானமின்றிச் சக்கியமாகிய வாச்சியார்த்த த்தின் ஞானம் உண்டாகிறதில்லை.

உ. சக்கிய ஞானமின்றிச் சக்கிய சம்பந்தவடிவ லக்ஷ ணையின் ஞானம் நிகழாது.

ங. லக்ஷணையின் ஞானமின்றி லக்ஷியமாகிய பதார்த் தத்தின் ஞானம் பொருந்தாது.

ச. பதார்த்தஞானமின்றி வாக்கியார்த்த ஞானம் நிகழாது.

ஆதலால்,

க, சக்தி ஞானததிறகுச் சககியஞானததிலும,

உ. சககியஞானத்திறகு லக்ஷணை ஞானததிலும்,

ரு. லக்ஷணைஞானத்திறகு லக்ஷியவடிவ பதாாதத ஞானததிலும,

ச. பதாாத்த ஞானத்திற்குப பதாாத்தசமுதாயத்தினது சமபநததகின ஞானவடிவ அல்லது சம்பந்ததகோடகூடிய பதாாதத சமுதாயததின ஞானவடிவ வாககியாாதத ஞானததிலும, உபயோக மிருததலால சகதிவிருததியைக கூறுதல் நிஷபலமனறு ஆனால பரமபரையாக வாககியாாதத ஞானததில உபயோகியாயிருததலின ஸபலமாம.

கரு௦. இவ்வாறறுற கூறிய லக்ஷணை யாதோ, அது க. கேவலலக்ஷணை உ. லக்ஷிதலக்ஷணை எனனும பேததால இருவகைததாம.

க. சககியததின (ஆறறலாலஅறியபபடுவதின) சாக்ஷாத (நோ) சமபநததகினை கேவலலக்ஷணை யெனபா.

உ. சக்கியததின பரமபரைச சமபநததகினை லக்ஷித லக்ஷணை யெனபா.

சககியசமபநதத்தனமை இரணடினுள்ளது அவறறுள், சிலவிடதது லக்ஷிதலக்ஷணை கௌணி யெனறும சொலலபபடுகினறது.

௧௫௧. லக்ஷித லக்ஷணையின் உதாகரணம் "துவிரேபம் ஒலிக்கின்றது" என்றல் முதலியனவாம். இரண்டு ரகரம் சப்திக்கின்றதென்னும் பொருள் பதங்களின் சக்தியினுற்றோன்றுகின்றது. ஈண்டுத் துவிரேபம் என்னும் பதத்திற்குச் சக்கியம் இரண்டு ரகரங்களாம். அவற்றிற்கு,

க. அவயவமின்றிய சம்பந்தம் பிரமரமென்னும் சொல்லிலிருக்கின்றது

உ. அச்சொல்லின் சக்திவடிவ சம்பந்தம் தனது வாச்சியமாகிய மதுபத்தில் (வண்டில்) இருக்கின்றது.

ஆதலால் சக்கியசம்பந்தியாகிய பிரமரமென்னுஞ் சொல் எதுவோ, அதன் சம்பந்தமிருத்தலின் சக்கியத்தின் பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது இதில் லக்ஷிதலக்ஷணை யுளது.

௧௫௨. அந்தக் கேவலலக்ஷணை லக்ஷிதலக்ஷணை யென்னுமிரண்டும் ஜகல்லக்ஷணை (விட்டலக்ஷணை) அஜகல்லக்ஷணை (விடாத லக்ஷணை) பாகத்தியாக லக்ஷணை (விட்டுவிடாத லக்ஷணை) என்னும் பேதத்தால் மூவகைத்தாம். அந்த ஒவ்வொரு லக்ஷணையும் க. பிரயோஜனவதிலக்ஷணை, உ. நிரூடலக்ஷணையென இருவகைப்படும்.

க. யாண்டுச் சக்தியுடைய பதத்தினைவிட்டு இலாக்ஷணிகசப்தப் பிரயோகத்தில் பிரயோஜனமுண்டாகின்றதோ, அது பிரயோஜனவதிலக்ஷணை யெனப்படும்.

எங்ஙனம் "கரையிற கிராமம" என று கூறின், கரையில குளிரசசி புனிததததனமை முதலியவறறின் உணாசசி யுண டாகிறதிலலை. கஙகையெனனும பதத்தால கரையை யறிவிக கின, கஙகையின தாமமாகிய குளிரசசி புனிதததனமை முத லியன கரையிற காணபபடும. ஆகையால் கங்கையெனனும பததிறகுக கரையில பிரயோஜனவதிலக்ஷணை (பயனுடையி லககணை) யுளது.

௨. பததிறகு எநத ஆததததில சக்திவிருத்தி யுண டாகவிலலையோ, சககியததினைப போல எவவாத ததின பிரதீதி எபபதததால எலலோருககும பிரசிததமாக உணடாகினறதோ, அவவாததத தில அபபதததின பிரயோஜனசூனயலக்ஷணை யெனனும நிரூடலக்ஷணை சொலலபபடுகின்றது.

எங்ஙனம் "நீலககுடம" எனறல முதலிய வாககியங களைக கேடடல மாததிரததான எலலாப புருஷாகளுககும குணியின உணாசசி மிகபபிரசிததமா யிருககினறது. ஆத லால நீல முதலிய பதஙகளுககுக குணியிற பிரயோஜன சூனியலக்ஷணை யிருததலால நிரூடலக்ஷணை யுணடு.

நிரூடலக்ஷணை சகதிக்குச சமானமாகினறது. யாதானு மோா விலக்ஷண அநாதிதாறபரியமுளதாயின, ஆணடு நிரூட லக்ஷணை உணடாகின்றது.

இவ்வாறு லக்ஷணையின் பேதததைக் கூறினும. அவற் றுள,

கநந. ஜகலலக்ஷணையும் அஜகல்லக்ஷணையும் மகா வாககியஙகளி லிலலை. ஆனால பாகததியாகலக்ஷணை யுண்டு. அதனறனமையை முற்கூறி வநதோம,

அநதப பாகததியாகலக்ஷணை மகா வாக்கியங்களில் லக்ஷிதலக்ஷணை யனறு; ஆனால் கேவலலக்ஷணையாம. ஏனெனின, லக்ஷியசேதனததோடு வாசசியததிறகுச சாக்ஷாத் சமபநத மிருககினறது; பரமபரை யிலலை.

யாண்டுப பாகததியாகலக்ஷணை யுளதோ, ஆணடு வாசசியததின ஏகதேசம லக்ஷிய மாகினறது. அநத வாசசியத்தின ஏகதேசததோடு வாசசியததிறகுச சாக்ஷாதசமபநத மிருககினறது, ஆதலால கேவலலக்ஷணை யாகினறது.

மகாவாககியஙகளினால ஜிஞஞாசுவுககு அகணட பிரஹ்மததின ஞான முணடாமெனறு ஈசுவரனது அநாதி தாறபரியமிருககினறது. ஆதலால நிரூடலக்ஷணையாம, பிரயோஜனவதியனறு.

கநச. ஈணடு இத்தன்மைச் சங்கை யுண்டாகின்றது —

க. வாசசியாாததததிறகு லக்ஷியசேதனததோடு சம்பநததை அஙகீகரிககின, லக்ஷியஆாததததில அசஙகததனமைககு ஹாநி யுணடாகும.

உ. சமபநததைக கொளளாவிடின லக்ஷணை பொருநதாது. ஏனெனின, சககியசமபநததினை அலலதுபோததிய(போதிககபபடுதற)சமபநததினை லக்ஷணையெனபா. அது அசஙகததிறசமபவியாது.

கடு௫. அதற்கு இது சமாதானமாம் — வாச்சியார்த்ததில் ௧ சேதனம் ௨. ஜடம் என்று இரண்டு பாகங்களுள. அவற்றில்,

௧. சேதனபாகத்திற்கு லக்ஷியார்த்தத்தில் தாதாத்மியசம்பந்த முளது

சகல பதார்த்தங்களுக்கும் சுவரூபத்தில் தாதாத்மியசம்பந்த முண்டாகின்றது.

வாச்சியபாகமாகிய சேதனத்தின் சுவரூபமே லக்ஷிய சேதனமாம் ஆதலால் வாச்சியத்திலுள்ள சேதனபாகத்திற்கு லக்ஷியசேதனத்தில் தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது.

௨ வாச்சியத்திலுள்ள ஜடபாகத்திற்கு லக்ஷியசேதனத்தோடு அதிஷ்டானத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது.

கற்பிதத்தின் சம்பந்தத்தால் அதிஷ்டானத்தின் சுபாவம் கெடுவதில்லை. எங்ஙனம் கற்பித கானல்ஜலத்தால் அதிஷ்டானமாகிய பூமி நனைகிறதில்லையோ, அங்ஙனமே ஈண்டும் அறிந்து கொள்க

கடுசா. வேறு சங்கை —

௧. "தத்" பதத்திற்கு அகண்ட சேதனத்தில் லக்ஷணையை அங்கீகரித்து, "துவம்" பதத்திற்கும் அகண்ட சேதனத்தில் லக்ஷணையை அங்கீகரிக்கின், புநருக்தி தோஷம் (கூறியது கூறுதலென்னும் குற்றம்) உண்டாகுதலான "கடம் கடம்" என

னும வாக்கியத்தினைப்போல அப்பிரமாண வாக்கியமாகும.

உ. இரண்டு பதங்களுக்கும லக்ஷியார்த்தம வேறெனக் கொள்ளின அபேதத்தை யறிவிக்குந்தனமை யுண்டாகாது.

கடு௭. அதற்கு இது சமாதானமாம் —

க. மாயாவிசிஷ்டனும அந்தக்கரண விசிஷ்டனுமோ "தத" பதத்திறகும "துவம" பதத்திற்கும சக்கியராவா; உபகிதா லக்ஷியராவா. பிரஹ்மசேதனம இரண்டு பதங்களுக்கும் லக்ஷியமாமாயின் புநருத்தி தோஷமுண்டாம. அநதப பிரஹ்மசேதனம் லக்ஷியமன்று ஆனால மாயா உபகிதனும அந்தக்கரண உபகிதனும லக்ஷியராவா. அவா உபாதிகளின பேதத்தால பின்னராவா; புநருத்தி தோஷமில்லை.

உ. உபகிதம இரண்டும பரமார்த்தமாக அபின்னமாம். ஆதலால் அபேதத்தை அறிவிக்குந்தன்மை வாக்கியத்திறகுசசமபவிக்கின்றது இவவாறனறி"தத" பதார்த்த "துவம" பதார்த்தங்களுக்கு உத்தேசவிதேயபாவத்தை அங்கீகரிக்கின், அபேதத்தை அறிவிக்குந்தன்மை தோஷமின்றியதாம.

க. "தத" பதார்த்தத்தில பரோக்ஷத்தன்மைப் பிரமத்தை நிவர்த்திததறபொருட்டு, "தத" பதார்த்

தததை உதபேசிதது "துவம" பதாரததததன
மை விதேயமாம.

உ. "துவம" பதாரததததில பரிசசினனததன்மைப
பிரமததை நிவாரததிததற பொருடடு, "துவம"
பதாரததததை யுதபேசிதது "தத" பதாரததத
தனமை விதேயமாம.

கஙஅ புநருததியைப பரிகரிததறபொருடடுச சில
நூலாசிரியாகளுககு இததாறபரிய முணடு — பதஙகளுககு
வேறு வேறு லக்ஷகததனமை அஙகீகரிககின, புநருதத
யின் சஙகையுணடாம. அநதப் பின்ன பின்னமான லக்ஷகத
தனமையிலலை ஆனால மீமாமசகா கிரமபபடி இரணடு பதங
களும சோநது அகணடப பிரஹ்மததின லக்ஷகஙகளாம.

இவ்வாற்றால இலக்ஷணையின பிரசஙகததில வெகு விசா
ரம் பழமையான ஆசிரியாகளால எழுதபபட்டிருககின்றது.
அதன தனமைமாததிரம சுருககமாக அறிவிககபபடடது

கஙக இவவாறு முதலிலோ பதததின சகதி அலலது
லக்ஷணையின ஞானததோடு கூடிய வாககியததின சிரவண
சாக்ஷாதகாரமுணடாய், முன அநுபவிககப்படட பதாரததங
களின ஸமிருதி யுணடாகின்றது. அதன பினனாப் பதாரத
தஙகளினது சமபநதத்தின ஞானவடிவ அலலது சமபநதத
தோடுகூடிய பதாரததஙகளின ஞானவடிவ வாக்கியார்த்த
போத முணடாகினறது. அதனையே சாப்தபோதமெனறுங
கூறுவா. ஆதலால சப்ததததினது சகதி அலலது லக்ஷணவிரு
ததிகளின் ஞானம் சாப்தபோதததிற கேதுவாம.

## உக. சாப்தபோதத்தின் ஆகாங்க்ஷை முதலிய நான்கு சககாரிகளின் நிரூபணம் கசo-கருக்.

கசo. க. ஆகாங்க்ஷைஞானம், உ. யோக்கியதைஞானம், ஙு. தாற்பரியஞானம், ச. ஆசத்தி என்னும் இவை நான்கும் சககாரிகளாம்.

க. ஆகாங்க்ஷை (அவாய்நிலை) என்பது இச்சைக்காம். அது சேதனத்தில் உண்டாகின்றதாயினும் பதத்தினது அர்த்தத்திற்கு எவ்வளவு காலம் வேறு பதார்த்தங்களோடு அந்வயஞானம் உண்டாகவில்லையோ, அவ்வளவு காலம் தன் அர்த்தத்தின் அந்வயத்தின் பொருட்டு வேறு பதத்தின் இச்சை சமானமாகத்தோற்றுகின்றது அந்வயபோதமுண்டாகியபின் தோற்றுவதில்லை. அது ஆகாங்க்ஷையெனப்படுகின்றது. எங்ஙனம் "இவன் வருகின்றான் புத்திரன், ராஜனுடைய புருஷன், விலக்கப்படுக" இவன் ராஜாவின் புத்திரன் வருகின்றான் என்று ராஜ பதார்த்தத்திற்குப் புத்திர பதார்த்தத்தோடு அந்வயபோதமுண்டாகியபின் புருஷ பதார்த்தத்தில் அந்வயபோதத்திற் கேதுவான ஆகாங்க்ஷை ராஜ பதார்த்தத்தி லில்லையாகலின், "ராஜனது புருஷன் விலக்கப்படுக" என்னும் ஞானம் உண்டாகிறதில்லை. ஆனால் "புருஷன் விலக்கப்படுக" என்னும் ஞானம் உண்டாகின்றது. ஆகாங்க்ஷைஞானம் சாப்தபோதத்திற்கு ஏது

வாகாவிடின, "ராஜாவின புத்திரன் வருகின்ருன்; ராஜாவின புருஷன, விலக்கப்படுக"? என்னும போதம உண்டாதல வேண்டும. ஆதலால ஆகாங்க்ஷை ஞானம் சாப்தபோதத்திற்கு ஏதுவாம.

கசக. உ. ஒருபதார்த்தத்திற்கு வேறுபதார்த்தத்தோடுள்ள சம்பந்தத்தினை **யோக்கியதை** யெனபா. யாண்டு யோக்கியதையிலலையோ, ஆண்டுச்சாப்தபோத முண்டாகிறதில்லை. **எங்ஙனம்** "தீயால நனைக்கின்ருன" என்னும வாக்கியத்தில தீயினகணுள்ள கரணத்தன்மைவடிவ மூன்ருமவேற்றுமைப் பொருட்கு நனைத்தற பதார்த்தத்தில நிரூபிக்குந்தன்மைச் சம்பந்தவடிவ யோக்கியதையிலலை யாகலின சாப்தபோத முண்டாகிறதிலலை. சாப்தபோதத்தில யோக்கியதை யேதுவாகாவிடின, "தீயால நனைக்கின்ருன"என்னும வாக்கியத்திலுல சாப்தபோத முண்டாதல் வேண்டும. ஆதலால யோக்கியதை ஞானம சாப்த போதத்திற்கு ஏதுவாம.

கசஉ. ௩. சொல்லுவோனது இச்சையினைத் தாற்பரியமெனபா. எவ்வாக்கியத்தில தாற்பரியஞான முண்டாகவிலலையோ அதன சாப்தபோத முண்டாகிறதிலலை.

(க) **எங்ஙனம்** " * சைந்தவத்தைக கொண்டுவா " வெனனும வாக்கியத்திலுல போஜனசமயத்தில குதிரையினகண சொல்லுவோனது இச்சையாகிய

* சிந்துவினினறும உண்டாயது சைந்தவம. சிந்துவெனபது சமுத்திரத்திற்கும ஓர்தேசத்திற்கும பெயராம. சமுத்திரத்தினினறு முண்டாகிய உப்பிற்கும, சிந்துதேசத்தி லுண்டாகிய குதிரைக்கும சைந்தவமெனபது காரண இடுகுறியாம.

தாறபரியம சமபவியாமையால குதிரையின் சாப் தபோத முண்டாகிறதில்லை.

(உ) அங்ஙனமே நடததற சமயததில உபபின சாப்த போத முணடாகிறதில்லை

தாறபரிய ஞானம சாபதபோததிறகு ஏதுவாகாவிடின "சைநதவததைக கொணடுவா" எனனும வாககியததினுலை போஜன சமயததில குதிரையின ஞானமும, நடததற சமயததில உபபின ஞானமும உணடாதலவேணடும. ஆதலால சாபதபோததில தாறபரியஞானம ஏதுவாம.

**கசா.** அஙஙனமே வேதததினது அநதபாகமாகிய வேதாநதமென்னும உபநிஷதஙகளுககுத தாறபரியமகொளளப்படாததும தளளபபடாததுமாகிய அததுவிதீயப பிரஹமததின போதததிலாம; உபாசனுவிதியில தாறபரியமிலலை. ஏனெனின,

(க) இலௌகிக வாக்கியங்களின் தார்ப்பரியமோ பிரகரண முதலியவறறுன அறியபபடுகினறது. அநதப பிரகரணமுதலியன காவியபபிரகாச காவியபபிரதீபஙகளில எழுதபபடடிருககிறன.

(உ) வைதிக வாக்கியங்களின் தாற்பரியஞானத்திற்கு ஏது உபககிரம உபசஙகாரமுதலிய ஆறும. [க] உபககிரம உபசஙகாரஙகளின் ஒருவடிவததனமை, [உ] அப்பியாசம, [ங] அபூாவதை, [ச] பலம, [ரு] ஆாததவாதம, [சா] உபபததி யெனனும ஆறும் வைதிக வாக்கியங்களினது தாற்பரியந்

தின் லிங்கஙகளாம. இவறறுல வைதிக வாக்கியங் களின தாறபரியம அறியபபடுகினறமையால இவை தாற்பரியத்தின் லிங்க மெனபபடுகினறன. அது தூமததினுல வஙநியறியபபடுகினறதாகலின வஙநியின லிஙகம தூம மெனபபடுவது போல வாம.

(ங) உபநிடதஙகளுககு வேறுயக் கர்மகாண்டத்தை யறி விக்கும் வேதத்தின் தாற்பரியம் காமவிதியிலுளது. உபககிரம உபசஙகாரமுதலியன பூாவவேதததின காமவிதியில இருககுமாறு ஜைமிநியாற செயயப பட்ட துவாதசாததியாயி யெனனும பூாவமீமா மசையில ஸபஷடமாம.

(ச) உபநிஷததது வடிவ வேதததின உபககிரம உபசங கார முதலியன அததுவிதீயப பிரஹமததின கண ணும ஆதலால அததுவிதீயப பிரஹமததில அவ ற்றிற்குத் தாற்பரிய முண்டு

கசச. [க] எங்ஙனம் சாநதோககியததின ஆரு வது அததியாயததினது உபககிரம (ஆரமப)ததில அததுவிதீ யப்பிரஹம மிருககினறது, உபசஙகாரததி (முடிவி)லும அத விதியபபிரஹ்ம மிருககினறது. எநத ஆததம ஆரமபததி

* இது "தததுவமஸி மகாவாககிய உபதேசம்" எனனும பெய ரால் தமிழில மொழிபெயாககபபட்டுளது. இதன விரிவை யறிய விருமபுவோா ஆணடுக கணடுகொளக.

முளதோ அதுவே முடிவிலும உளதாயின, ஆணடு உபக்கிரம உபசங்காரங்களின் ஏகரூபத்துவம் சொலலபபடுகினறது.

௧௪௫. [உ] அடிககடி சொலலுதலே அப்பியாசமெனபா. சாநதோககியததின ஆறுவது அததியாயததில ஒனபது முறை "தததுவமஸி" வாககியமிருககினறதாகலின அதவிதீயப பிரஹமததில அப்பியாச மிருககினறது.

௧௪௬ [௩] வேறு பிரமாணங்களிலை அறியப்படாத தனமையினை அபூர்வதையெனபா. உபநிஷதது வடிவ சபதப் பிரமாணததின வேறாய பிரமாணஙகடகு அததுவிதீயப பிரஹமம விஷயமனறாகலின, அதவிதீயப பிரஹமததில அறியபபடாததனமைவடிவ அபூாவதை யிருககினறது.

௧௪௭ [௪] அதவிதீயப பிரஹமத்தின ஞானத்திலை் மூலததோடுகூடிய சோக மோகஙகளின நிவிருததி பயனெனபபடடிருககினறது.

[௫] ஸதுதியினையாவது நிநதையினையாவது அறிவிக்கும வசனம அர்த்தவாத மெனபபடும. அதவிதீயப் பிரஹமததை யறிவிககும ஸதுதி உபநிடதஙகளில ஏபஷடமாம.

௧௪௮ [௬] சொல்லிய அாததத்திற்கு அநுகூலமான யுக்தியினை உபபத்தியெனபா. சாநதோககியததில சகல பதாாததஙகளுககும பிரஹமததோடு அபேதததைச சொலலுதறபொருடடுக் காரியததிறகுக காரணததோடு அபேதத்

தைப பிரதிபாதிததல அநேக திருஷடாநதஙகளாற சொல லபபடடிருககினறது

கசக இவவாறு ஆறு லிஙகஙகளால சகல உபநிஷ தஙகளுககும தாறபரியம அதவிதீயபபிரஹமததி லுளது அநத ஆறு லிஙகஙகளை உபநிஷதஙகளின வியாககியானததில பகவான பாஷியகாரா வெளிபபடையாய எழுதியிருககின றனா. அவறறால வேதாநத வாககியஙகளுககு அதவைதப பிரஹமததில தாறபரியநிசசய முணடாகினறது.

எநத அாததததில சொலலுவோனது தாறபரியததின ஞானம உளதாகினறதோ, அவவாததததின ஞானம கேட பவனுககுச சபதததினால உணடாகினறது. ஆதலால தாறப ரியஞானமும சாபதபோதததிறகு ஏதுவாம.

கரு௦ ச. யோககிய பதஙகளின சகதி அல்லது லக்ஷ ணாவிருததியாகிய சமபநதததினால மறைபபினறிய பதாத தஙகளின ஸமிருதி உணடாகினறது. அது ஆசக்தி (அண மை) எனபபடுகினறது. இததனமையஆசததி சுவருபமாகச சாபதபோகததிறகு ஏதுவாம. அதன ஞானம ஏதுவனறு. இவவாறறால ஆகாஙக்ஷை ஞானம, யோககியதை ஞானம, தாறபரியஞானம, ஆசததி எனபன சாபதபோதததிறகு ஏதுவாம. இநநானகினையும சாப்தசாமக்கிரி யெனபா.

கருக. இவவாறறால,

க. ஏணடுச சகதி அலலது லக்ஷணையோடு கூடிய சபத த்தின ஞானம பிரமைககுக கரணமா யிருததலின் பிரமாணமாம்.

௨. பதார்த்தங்களின் ஸ்மிருதி அதினின்றும் உண்டா கிச் சாப்திப்பிரமையைப் பெறுகின்றது. ஆதலால் அது வியாபாரமாம்.

௩. சாப்திப்பிரமை பயனும்.

சப்தப்பிரமாண நிரூபணமென்னும்
ஐந்தாவது ரத்நம் முடிந்தது.

---

# ஆறாவது ரத்நம்.

## ௫. அர்த்தாபத்திப்பிரமாண நிரூபணம் ௧௫௨-௧௬௨.

### ௨௨. அர்த்தாபத்திப்பிரமை பிரமாணங்களினது சுவரூபத்தின் நிச்சயம் ௧௫௨-௧௫௩.

௧௫௨. அர்த்தாபத்திப்பிரமையின் கரணத்தினை அர்த்தாபத்திப்பிரமாண மென்பர். எங்ஙனம் பிரமாணப்பிரமைகளை யறிவிக்கும் பிரத்தியக்ஷ சப்தங்களோ, அங்ஙனமே அர்த்தாபத்திச் சத்தமும் பிரமாணம் பிரமை யென்னும் இரண்டனையும் அறிவிப்பதாம்.

௧௫௩. உபபாதகக் கற்பனைக்கு ஏதுவான உபபாத்திய ஞானத்தை அர்த்தாபத்திப்பிரமாண மென்பர். உபபாதக ஞானத்தினை அர்த்தாபத்திப்பிரமை யென்பர்.

உபபாதகம் சமபாதகம் என்பன பரியாயச்சொற்கள்.

உபபாததியம சமபாததியம எனபன பரியாயசசொற கள.

க. எஃதின்றி எது சமபவியாதோ அதறகு அது உப பாத்திய மெனபபடுகினறது எங்ஙனம் இராததிரி போஜனமினறிப பகலுணணுப் புருடனிடததுப பருமை சம்பவியாதாகலின இராததிரி போஜனத தின உபபாததியம ஸ்தூலததனமையாம

உ. எதன அபாவததால் எதன அபாவம உளதாகின றதோ, அது அதன உபபாதக மெனபபடுகினறது. எங்ஙனம் இராததிரி போஜனததின அபாவததால பகலுணணுதவனுககு ஸதூலததனமையின அபா வமிருததலால இராததிரி போஜனம ஸதூலததன மையின உபபாதகமாம

க இவ்வாறு உபபாததியததினது அநுபபததியின (அசமபவததின) ஞானததினுல உபபாதகததைக கறபிததல அர்த்தாபத்திப்பிரமை யெனபபடுகின றது உபபாதககறபனைககு ஏதுவான உபபாததி யததினது அநுபபததியின ஞானம அர்த்தாபத்திப் பிரமாண மெனபபடுகினறது

அர்த்தமெனபது உபபாதக வஸது; அதன ஆபததி யெனபது கறபனை; இவவாததததால அர்த்தாபத்தியென னுஞசொல பிரமையை யறிவிபபதாம. ஆததததின கற பனை எதனுல உளதாகினறதோ, அநத உபபாததியததினது

அநுபபததியின ஞானமாகிய பிரமாணம அர்த்தாபத்தியேன்னுஞ் சொல்லிற்குப் பொருளாம்.

## உக. அர்த்தாபத்திப்பிரமையின் பேதம்

### கருச-கருஎ

கருச. அவ்வாததாபததி க திருஷடாாததாபததி (காணடலருததாபததி), உ சுருதாாததாபததி (கேளவியருததாபததி) எனனும பேதததால இருவகைததாம.

க யாணடுத திருஷட உபபாததியததினது அநுபபததியின ஞானததினுல உபபாதகததினது கறபனை உணடாகினறதோ, ஆணடுத திருஷடார்த்தாபத்தி சொலலபபடுகினறது எங்ஙனம். பகலுணணுதவனது பருமனில இராததிரி போஜனததின ஞானம திருஷடார்த்தாபத்தியாம ஏனெனின, உபபாததியமாகிய ஸதூலததனமை திருஷடமாம.

கருரு. உ யாணடுச சுருத உபபாததியததினது அநுபபததியின ஞானததால உபபாதகததினது கறபனை உணடாகினறதோ, ஆணடுச சுருதார்த்தாபத்தி சொலலப்படுகினறது எங்ஙனம "வீடடிலிலலாத தேவதததன ஜீவிக்கினரு" னெனனும வாககியததைக் கேடடு, வீடடிறகு வெளியிடததில தேவதததனது இருபபினறி வீடடிலிலலாத தேவதத்தனது ஜீவனம பொருநதாதாகலின, வீடடிலில்லாத தேவதததனது ஜீவனத்தின அநுபபததியினுல தேவதததனது வீடடிறகு வெளியிலிருததறறனமை கறபிககபபடுகினறது. ஆணடு வீட்டிலிலலாத தேவதததனது ஜீவனம திருஷடமனறு; ஆனுல சுருதமாம.

க. சுருத ஆாததததின (கேட்ட பொருளின) அநுபப ததியினல உபபாதகததைக கறபிததல சுருதார்த் தாபத்திப்பிரமை யெனபபடுகினறது.

உ. அதறகேதுவான சுருத ஆாததததினது அநுபபத தியின ஞானம சுருதார்த்தாபத்திப்பிரமாண மென ப்படுகினறது.

ாண்டு வீட்டிலில்லாத தேவத்தனது ஜீவனம உபபாத் தியமாம; வீட்டினும வெளியிலிருததல உபபாதகமாம.

கஞிசா. க. அபிதாநாநுபபததி உ அபிகிதாநுபபததி எனனும பேதததால சுருதாாததாபததி இருவகைத்தாம.

க. "துவாரம (வாயிலை)" அலலது "மூடு" எனறல் முதலிய இடஙகளில யாணடு வாககியததின ஏகதேசம உசச ரிககப்பட்டு, ஏகதேசம உசசரிககபபட்டவிலலையோ, ஆணடுச சுருதபதததினது அாததததின அநவயயோககிய ஆாததத தின அலலது அநவயயோககிய அாததததை யறிவிககும பதததின அததியாகாரம உணடாகினறது. அவவாததததின அல்லது பதததின் அததியாகாரததின ஞானம வேறு பிர மாணததாற சமபவியாது. அாததாபததிப பிரமாணததால உணடாகினறது. ஈணடு அபிதாநாநுபபத்திவடிவச் சுருதார்த்தா பத்தி யுளது ஏனெனின, ஒருபதாாததததிறகு இஷ்டமாகிய வேறு பதாாததததோடு அநவய போதததில உளள சொல லுவோனது தாறபரியததினை அபிதான மெனபா. "வாயிலை" அல்லது "மூடு" எனறிவவளவு மாததிரஙகூறின, ஆணடு

"வாயிலே மூடு" எனனும் உணாசசி கேடபவனுக் குண்டா தலவேணடு மெனபது சொலலுவோனது தாறபரியமாகிய அபிதாநமாம். ஆதலால அது அபிதாநாநுபபத்தி யெனப்படு கினறது. எணடு,

(க) அாததததின அல்லது சபததததின அததியாகாரம் உபபாதகமாம.

(உ) முறகூறிய தாறபரியம உபபாத்தியமாம.

கஙஎ. உ. யாண்டுச சகலவாககியஙகளின அாததமும் வேறு அாததததைக கறபிததலினறி உண்டாகாததாகின றதோ, ஆணடு அபிகிதாநுபபத்தி வடிவச் சுருதார்த்தாபத்தி யுளது. எங்ஙனம் ஸுவர்க்காமோ யஜேத "சொாககாமன யாகஞசெயயககடவன" எனனும வாககியததின பொருள அபூாவததைக கறபிததலினறி உணடாகாததாயிருததலின அபிகிதாநுபபத்திவடிவச் சுருதார்த்தாபத்தியாம. எணடு,

(க) யாகம சுவாககததிறகுச சாதனமாதல உபபாத்திய மாம அதன அநுபபததியினுல உபபாதகமான அபூாவததின கறபனையுளது.

(உ) கடைசி ஆகுதியை யாக மெனபா.

(ங) சுகவிசேஷததினைச சுவர்க்க மெனபா. காமஜநிய சமஸகாரவடிவ அதிருஷடததினை அபூர்வ மென பா. சுவாககசாதனததனமை திருஷட மனறு; ஆனுல சுருதமாம; ஆதலால சுருதாாததாபததி யாம.

## உஅ. அர்த்தாபத்திப்பிரமை ஜிஞ்ஞாசுவுக்கு உபயோகமாதல் க௫அ-ககூஉ.

க௫அ. சுருதார்த்தாபத்தியின் ஜிஞ்ஞாசுவுக்கநுகூலமான உதாரணம் —"தரதி ஶோகமாத்மவித்-ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்றான்" என்பதாம். ஈண்டு ஞானத்தினால் சோகத்தின் நிவிர்த்தி சுருதமாம். அது சோகத்தின் மித்தியாத்தன்மையின்றி நிகழாது. ஆதலால் ஞானத்தால் சோகத்தினது நிவிர்த்தியின் அநுபபத்தியினால் பந்தமித்தியாத்தன்மையின் கற்பனை உண்டாகின்றது. பந்தமித்தியாத்தன்மை உபபாதகமாம். ஞானத்தால் சோகம் நீங்குதல் உபபாத்தியமாம். அது திருஷ்டமன்று; ஆனால் சுருதமாம், ஆதலால் சுருதார்த்தாபத்தியாம்.

க௫கூ. அங்ஙனமே மகாவாக்கியங்களில் ஜீவப்பிரஹ்மங்களினது அபேதம் கேட்கப்படுகின்றது. அது ஔபாதிக பேதம் (உபாதியினாலாகிய வேற்றுமை) உள்ளதாயின் சம்பவிக்கும், சுவரூபமாகப் பேதமுள்ளதாயின் சம்பவியாது. ஆதலால் ஜீவப் பிரஹ்மங்களினது அபேதத்தின் அநுபபத்தியினால் பேதத்தின் ஔபாதிகத்தன்மைஞானம் அர்த்தாபத்திப் பிரமாணஜந்யமாம்.

க. ஈண்டு ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் உபபாத்தியமாம்.

உ. பேதத்தில் ஔபாதிகத்தன்மை உபபாதகமாம்.

௩. சகல உபபாத்திய ஞானமும் பிரமாணமாம்.

உ. உபபாதகத்தின் ஞானம் பிரமையாம்

என்று ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் வித்வானுக்குத் திருஷ்டமும் அந்நியருக்குச் சுருதமுமாமாகலின், இது திருஷ்டார்த்தாபத்தி சுருதார்த்தாபத்தி யெனனும் இரண்டுக்கும் உதாரணமாம்.

கசுO. அந்நனமே இரஜதத்தின் அதிகரணமாகிய சுத்தியில் இரஜதத்தின் நிஷேதம் திருஷ்டமாம் அது இரஜதத்தின் மித்தியாத்தனமையின்றிச் சமபவியாது. ஆதலால் நிஷேதத்தின் அநுபபத்தியினால் இரஜதமித்தியாத்தனமையின் கற்பனை உண்டாகின்றது இது திருஷ்டார்த்தாபத்திக்கு உதாரணமாம் என்று,

க. இரஜதநிஷேதம் உபபாத்தியமாம்.

உ மித்தியாத்தனமை உபபாதகமாம்

கசுக. மனத்தின் விலயத்திற்குப் பின்னர் நிருவிகற்ப சமாதிகாலத்தில் அத்விதீயப் பிரஹ்ம மாத்திரம் எஞ்சியிருக்கும். சகல அநாத்ம வஸ்துக்களுக்கும் அபாவமுண்டாகின்றது. அவ்வநாத்மவஸ்துக்கள் மானதமாயின், மனத்தின் விலயத்தால் அவற்றிற் கபாவம் சமபவிக்கும்; மானதமன்றாயின் மனத்தின் விலயத்தால் அபாவமுண்டாகிறதில்லை என்னின், ஒன்றின் விலயத்தால் ஒன்றற் கபாவம் உண்டாகாது ஆதலால் மனத்தின் விலயத்தால் சகல த்துவைதாபாவங்களின் அநுபபத்தியினால் சகல த்துவைதங்களும் மனோமாத்திரமாமெனனும் கற்பனை உண்டாகின்றது. என்று,

க. மனதின விலயததால சகல துவைதஙகளின் விலயம உபபாத்தியமாம்

உ. அதன ஞானம அர்த்தாபத்திப் பிரமாணமாம்

ங. சகல துவைதஙகளுககும மானததனமை உபபாதகமாம்

ச. அதன ஞானம அர்த்தாபத்திப் பிரமையாம்

ககூஉ. இநத ஸதானததில உபபாதகபபிரமையின அசாதாரணகாரணம அர்த்தாபத்திப் பிரமாணமாம். அது நிா வியாபாரமாயிருககினும, அதனகண உபபாதகபபிரமையின காரணததனமை சமபவிககினறது இது உபமானநிருபணத திற கூறபபடடிருககினறது.

அாததாபததிப பிரமாண நிருபணமென்னும
ஆறவது ரத்நம் முடிந்தது

---

# ஏழாவதுரத்நம்.

## ள. அநுபலபதிபபிரமாண நிருபணம்

ககூங—கஅக.

### உரு நியாயசாஸ்திரத்தின்படி அபாவத்தின் சுவரூபத்தை நிச்சயித்தல்

ககூங—ககூகூ.

ககூங. அபாவபபிரமையின அசாதாரணகாரணததை அநுபலப்திப்பிரமாண மெனபா.

க. பிராசீனநையாயிகா நிஷேதமுகபபிரதீதி (விலககு முக வுணாசசி)யின விஷயததினை அபாவ மெனபா.

உ. நவீனநையாயிகா சமபநத சாதிருசியஙகளுககுப பினனமாயப பிரதியோகி யபேகைஷயுடைய பிரதீதி ககு விஷயமாவதனை அபாவ மெனபா

பிரதியோகி யபேகைஷயுடைய பிரதீதிககு விஷயமோ சமபநதமும சாதிருசியமுமாம. அது அதனினும வேறனறு ஆதலால பினனமாகவோ பிறவும உள. அவை பிரதியோகி சாபேகூஷ பிரதீதிககு விஷய மனறு; ஆனால பிரதியோகி யின நிரபேகூஷப் பிரதீதிககு விஷயமாம. ஆதலால அபாவத தின லகூஷணததிறகு ஓரிடததும அதிவியாபதியிலலை.

ககூச. அநத அபாவம இருவகைததாம க. ஒனறு அநநியோநநியாபாவம; உ. மறறையது சமசாககாபாவம். அவறறுள அநநியோநநியாபாவம ஒருவிதமேயாம. சமசாக காபாவததிறகு நானகு பேதமுணடு. அவை (க) பிராகபா வம, (உ) பிரதததுவமஸாபாவம, (ந) சாமயிகாபாவம, (ச) அததியநதாபாவம எனபனவாம.

ககூரு. க. அபேததகை நிஷேதிககும அபாவததினை அந்நியோந்நியாபாவ மெனபா.

அலலது அததியநதாபாவததின வேறாய உறபததி நா சஙகளிலலாத அபாவததினை அந்நியோந்நியர்பாவ மென்பா அதனைப பேத மெனறும், பின்னத்தன்மை யெனறும, அதிரிக் தத்தன்மை யெனறும, வேற்றுமை யெனறும கூறுவா.

(௧) உற்பத்திசூந்யமோ பிராகபாவமுமாம்; அது நாச சூநிய மன்று.

(௨) நாசசூந்யமோ பிரத்துவம்சாபாவமுமாம்; அது உற்பத்திசூநிய மன்று.

(௩) உற்பத்தி நாசசூநியமோ ஆத்மாவுமாம்; அது அபாவவடிவ மன்று, பாவவடிவமாம்.

(௪) உற்பத்திநாசசூநிய அபாவவடிவமோ அத்தியந்தாபாவமுமாம். அது அந்நியோந்நியாபாவவடிவ மன்று, ஆனால் அதனின் வேறும்.

"கடம் படமன்று" என்று சொல்லுதலால் கடத்தில் படத்தினது அபேதத்தின் நிஷேதமுண்டாகிறது. ஆதலால் கடத்தில் படத்தினது அபேதத்தை நிஷேதிப்பது கடத்தில் படத்தின் அந்நியோந்நியாபாவமாம்.

௧௬௬ உ. அதனின் வேறாய அபாவத்தினைச் சம்சர்க்காபாவ மென்பர்.

(௧) அநாதிஸாந்த அபாவ மெதுவோ அது பிராகபாவ மெனப்படுகின்றது தனது பிரதியோகியின் உபாதானகாரணத்தில் பிராகபாவ மிருக்கின்றது. அது கடத்தின் பிராகபாவத்திற்குப் பிரதியோகி கடமாதலாம். அதன் உபாதான காரணமாகிய கபாலத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. அது அநாதியும் (உற்பத்தியின்றியதும்) ஸாந்தமும் (அந்தமுடையது) மாம்.

[௧] அநாதி அபாவமோ அத்தியந்தாபாவமுமாம்; அது ஸாந்தமன்று.

[௨] ஸாந்த அபாவமோ சாமயிகாபாவமுமாம், அது அநாதியன்று.

[௩] வேதாந்தசித்தாந்தத்தில் அநாதிஸாந்தம் மாயையாம்; அது அபாவமன்று. ஆனால் ஜகத்திற்கு உபாதானகாரணமா யிருத்தலின், சத்தசத்திற்குவில க்ஷணமான அநிர்வசநீயபாவரூபம் மாயையாம்.

௧௬௭ (௨) ஸாதி அநந்த அபாவம் பிரத்துவம்ஸாபாவ மெனப்படுகின்றது. அது தண்ட முதலியவற்றால் கட முதலியவற்றின் துவம்ஸ முண்டாவதாம்.

[௧] அநந்த அபாவமோ அத்தியந்தாபாவமுமாம், அது ஸாதியன்று.

[௨] ஸாதியபாவமோ ஸாமயிகாபாவமுமாம், அது அநந்தமன்று

[௩] ஸாதி அநந்தமோ மோக்ஷமுமாம். என்னெனின்,

(௧) ஞானத்தால் மோக்ஷமுண்டாகின்றது, ஆதலால் ஸாதியாம்.

(௨) முக்தனுக்கு மீண்டும் சம்சார முண்டாவதில்லை; ஆதலால் அநந்தமாம்.

ஆனால் மோக்ஷம் அபாவவடிவமன்று, பாவவடிவமாம்.

அஞ்ஞானந்தற் (அதன்) காரியங்களின் நிவிருத்தியினை மோக்ஷமென்பர். நிவிருத்தியென்பது துவம்ஸத்திற்காம். ஆத

லால மோக்ஷமும அபாவவடிவமாம. அங்ஙனமாயினும், கற பிததத்தின நிவிருததி அதிஷ்டானவடிவ மாகினறது. அஞ ஞானமும் அதன காரியமும கறபிதமாம. ஆதலால அவற றின நிவிருததி அதிஷ்டானப பிரஹமவடிவமாம ஆதலால அபாவவடிவம மோக்ஷமன்று, ஆனால பிரஹ்மவடிவமா யிரு ததலின பாவவடிவமாம.

௧௬அ (ங) உறபததி நாசமுடைய அபாவம் ஸாமயி காபாவ மெனபபடும. யாணடு ஓாகாலததிற் பதாாதத முள தாய், ஓாகாலததிற பதாாதத மிலதாகினறதோ, ஆணடுப பதாாதத சூநிய காலததில அபபதாாததத்தின ஸாமயிகாபா வம் உணடாகினறது. எங்ஙனம் பூதலமுதலியவறறில கடமு தலியன ஓாகாலததிருநது ஓாகாலத திலலவாகினறன. ஆண டுக கடசூநியகாலசமபநதியாகிய பூதகாலமுதலியவறறில கட முதலியவறறின ஸாமயிகாபாவ முளது.

சமயவிசேஷததில உறபததியாயச சமயவிசேஷததில நஷடமாவதெதுவோ, அது ஸாமயிகாபாவ மெனபபடும. எங்ஙனம் பூதலததினினறும கடததை வேறிடததிற கொ ணடுபோயின, அபபோது கடததின அபாவம பூதலததில உறபததி யாகினறது. அதே பூதலததிற கடததைக கொண டுவரின, அபபோது கடததின அபாவம பூதலததில நஷட மாகின்றது. இவவாறுால ஸாமயிகாபாவம உறபததி நாச முடையதாம.

[க] உற்பததியுடையதோ பிரததுவமஸாபாவமுமாம்; அது நாசமுடையதன்று.

[உ] நாசமுடையதோ பிராகபாவமுமாம, அது உற்பததியுடைய தனறு.

[ந] உறபததிநாச முடையனவோ கட முதலிய பூதபௌதிகமான அநேக பதாாததஙகளாம; அவை அபாவரூபமனறு. ஆனால விதிமுகவுணர்ச்சி (இருககிறதெனனும உணாசசி) ககு விஷயமாயிருததலின பாவரூபஙகளாம

கசுக. [ச] அநநியோநநியாபாவததிறகு வேறான உறபததிசூநியமும நாசசூநியமுமான அபாவம அத்தியந்தாபாவ மெனப்படும. யாணடு ஒருகாலததிலும எபபதாாததம இருபபதிலலையோ, ஆணடு அபபதாாதததின அத்தியந்தாபாவம் சொலலபபடுகினறது எங்ஙனம்: வாயுவில உருவமும கநதமும எககாலததிலும இருபபதில்லை. ஆணடு உருவத்திறகும கநததிறகும அத்தியந்நாபாவ மிருககினறது. ஆத்மாவினிடதது உருவம இரசம, கநதம, ஸபரிசம, சப்தம் என்பன எனறு மிருபபதிலலை. ஆதலால உருவமுதலியவற்றின அத்தியந்தாபாவம் ஆதமாவி லிருககினறது.

[க] உறபததிசூநியமோ பிராகபாவமுமாம; அது நாசசூநியமன்று.

[உ] நாசசூநியமோ பிரத்துவமஸாபாவமுமாம், அது உறபததிசூநிய மனறு.

[ந] உறபததிநாசசூநியம பிரஹ்மமுமாம, அது அபாவரூபமனறு, ஆனால பாவரூபமாம.

[ச] உறபததிநாசரூநிய அபாவரூபமோ அநநியோந நியாபாவமுமாம், அது அநநியோநநியாபாவத தின வேறனறு.

## உகூ. முற்கூறிய அபாவத்தின் சுவரூபத்தில் வேதாந்தத்திறகு விருத்தமான அம்சங்களைக் காட்டுதல் கஎ0-கஎஅ.

**கஎ0** இவவாறு அபாவஙகள நியாயசாஸதிரததின படி சொலலபபடடன. இதில வேதாநததிறகு விருதத மான அமசஙகளைச சுருககமாயக காடடுவாம.

க. கபாலததில கடத்தின் பிராகபாவத்தினை அநாதி யெனபா. அது பிரமாணவிருததமா மாகலின வேதாநததைை அநுசரிதத தனறு. ஏனெனின கடபபிராகபாவததின அதிகரணம ஸாதியாம, பிரதியோகியாகிய கடமும ஸாதியாம. பிராகபாவ ததிறகு அநாதிததனமை எவவாறுணடாம?

மாயையில சகல காரியஙகளின பிராகபாவததிறகும அநாதிததனமை கூறின சமபவிககினறது, மாயை அநாதி யாகலின. ஆனால மாயையிற காரியததின பிராகபாவததை அஙகீகரிததல வியாததமாம சிததாநததில இஷடமுமனறு, ஆதலால் பிராகபாவம ஸாதிஸாநதமாம.

**கஎக.** உ. அஙஙனமே நையாயிகமதததில பிரததுவம ஸாபாவமும தனது பிரதியோகியின உபாதானததிலேயே யிருககினறது; ஆதலால் கடததின துவமஸம கபாலமாததி

ரத்திருப்பதாம; அது அநநதமாம என்று கூறுதல் அசஙகத மாம. கடததுவமஸததின அதிகரணமாகிய கபாலததின நாச ததால கடததுவமஸததிறகு நாசம உணடாகுதலால பிரத துவமஸாபாவமும ஸாதி ஸாநதமாம.

**கஎ௨.** ௩. அஙஙனமே அநநியோநயாபாவமும ஸாதிஸாநத அதிகரணததில ஸாதிஸாநதமாம. எங்ஙனம் கடததில படததின அநநியோநயாபாவ மிருககினறது, அதன அதிகரணம கடமாம, அது ஸாதியும ஸாநதமுமாம. ஆத லால கடததி லிருபபதாகிய படாநநியோநயாபாவமும ஸாதிஸாநதமாம. அநாதி அதிகரணததில அநநியோநயா பாவம அநாதியாம. ஆனால அது அநாதியும ஸாநதமுமாம; அநநதமனறு.

**கஎ௩.** எங்ஙனம் பிரஹமததில ஜீவனது பேத மிருக கினறது. அது ஜீவனது அநநியோநயாபாவமாம. அதன அதிகரணம பிரஹமமாம; அது அநாதியாம. ஆதலால்,

(க) பிரஹ்மததில ஜீவனது பேதவடிவ அநநியோந நியாபாவம அநாதியாம

(௨) பிரஹமஞானததினால அஞஞானநிவிருத்திவாயி லாகப பேதததிறகு அநத முணடாகினறது. ஆத லால அது ஸாந்தமாம.

**கஎ௪.** அநாதி பதாாததததிறகும ஞானததினால நிவிரு ததி அதவைத வாதததில இஷடமாம. இதனறறுன க. சுதத சேதனம, ௨. ஜீவன, ௩. ஈசுவரன, ௪. அவிதஃதை, ரு. அவித

தியா சேதனங்களின் சம்பந்தம், ௬. அநாதிகளுக்கு ஒன்றற்கொன்றுள்ளபேதம் என்னும் ஆறு பதார்த்தங்களையும் அத்வைத மதத்தில் சுவரூபமாக அநாதி யென்பர். சுத்த சேதனமொழிந்த ஐந்தினுக்கும் ஞானத்தினால் நிவிருத்தியை அங்கீகரித்திருக்கின்றனர்.

௧௭௫. இதிலஓர்சங்கை யுண்டாகின்றது — ஜீவாசுவரர்களை அத்வைதவாதத்தில் மாயிக மென்பர். மாயையின் காரியம் மாயிக மென்பபடும். ஜீவனும் ஈசுவரனும் மாயையின் காரியமும் அநாதியுமாவர் என்று கூறுதல் விருத்தமாம்.

௧௭௬. அச்சங்கைக்கு இது சமாதானமாம் — ஜீவேசுவரர்கள் மாயையின் காரியமாவரென்பது மாயிகமென்னும் சொல்லிற்குப் பொருளன்று. ஆனால் மாயையினது ஸ்திதியினதீனம் ஜீவேசுவரர்களது ஸ்திதியென்பதுபொருளாம். மாயையின் ஸ்திதியின்றி ஜீவேசுவரர்களது ஸ்திதி யிராதாகலின் அவர் மாயிகமாவர். மாயையினைப்போல அநாதியுமாவர். இவ்வாற்றால் அநாதிஅந்நியோந்நியாபாவமும் ஸாந்தமாம். அந்நியோந்நியாபாவம் அநந்தமன்று.

௧௭௭. ௪. அங்ஙனமே அத்தியந்தாபாவமும் ஆகாய முதலியவற்றினைப்போல அவித்தையின் காரியமும் விநாசியுமாம்.

இவ்வாற்றால் அத்வைதவாதத்தில் சகல அபாவங்களும் விநாசியாம். எவ்வபாவமும் நித்தியமன்று; அத்வைதவாதத்தில் அநாத்ம பதார்த்தங்கள் முழுவதும் மாயையின் காரிய

மாமாகலின, ஆதமாவின வேறுயவறறிற்கு நிததியத்தனமை சமபவியாது, எங்ஙனம் கடமுதலிய பாவபதாாததஙகள மா யையின காரியமோ, அங்ஙனமே அபாவமும மாயையின் காரியமாகலின மிதையாம.

கஎஅ. ஓா நூலாசிரியராகிய அதவைதவாதி ஒருவா அததியநதாபாவததினை அஙகீகரிதது, மறறைய அபாவஙகளைப பொய் யெனபா.

க. எங்ஙனம் கடததின பிராகபாவததைக கபாலத திற கூறுவா. அது பொய்யாம. ஏனெனின, கபால ததின உறபததிககு முறகால சமபநதியாகிய கபா லமே "கடம உணடாகும" எனனும உணாசசிககு விஷயமாம. கடத்தின் பிராகபாவம் அபபிரசிதத மாம.

உ. அஙஙனமே தண்ட முதலியவறறால பொடிககப பட்ட கபாலததின அலலது பிரிவுபட்ட கபாலத தின வேறுன கடத்துவம்ஸமும் அபபிரசிததமாம.

ங. அஙஙனமே கடசமபநத மினறிய பூதலமே கடத தின ஸாமயிகாபாவமாம. கடமுளதாயின அப போது கடததின சமபநதியாகிய பூதலமிருககின றதாகலின கடசமபநதமினறிய பூதல மிலலை. இவ வாறறால ஸாமயிகாபாவம் அதிகரணததின வேற னறு.

ச. அஙஙனமே கடததில படததின பேதததைக் கட ததிலிருபபதாகிய படாநநியோநநியாபாவ மென

பா. அது இரணடின் அபேதததினது அததியநதா பாவவடிவமாம இரணடுபதாாததஙகளினது அபே த அததியநதாபாவததின வேறுன அந்நியோந்நியா பாவம் அபபிரசிதததமாம. இவ்வாறருன அததியந தாபாவம ஒனறே யிருககினறது, பிறிதோரபாவ முமில்லை. இவவாறு அபாவததின நிரூபணததில வெகு விசாரமுளது நூல் விரிதலஞசி அதனறன மை மாததிரம அறிவிககபபடடது.

## உஎ. சாமக்கிரியோடு கூடிய அபாவப்பிரமை யும, அது ஜிஞ்ஞாசுவுககு உபயோகமாதலைக் கூறுதலோடு பிரமாவிருத்தியின் உபசஙகாரமும ௧எ௬ - ௧அ௧.

**௧எ௬.** இவவாறறுல முறகூறிய அபாவ மெதுவோ அதறகுப பிரமாஞானம உளதாயின, அணடு அபாவபபிர மையின அசாதாரணகாரண வடிவப பிரதியோகியின அநுப லமபம எதுவோ அது கரணமாயிருததலின பிரமாணமாம்

உபலம்பம் எனபது ஞானததிறகாம. அதனையே பிரதீதி யெனறும உபலப்தி யெனறும கூறுவா. அதன அபாவததினை அநுபலம்பம் எனறும அநுபலப்தி யென்றும கூறுவா.

உபமானததிறகும ஆரததாபததிககும்போல இதறகும வியாபாரமில்லை. ஆதலால ஈணடுமெ கரண லக்ஷணததில வியா பாரமுடைய தெனனும பதததின் பிரவேசமில்லை. ஆனல வியாபாரத்தின் வேறுயவெனனும பதததின பிரவேசமுணடு.

இவ்வாறு அநுபலபதிபபிரமாணமுளது; அநுபலபதி பபிரமை பயனும். அதனையே அபாவப்பிரமை யென்றும கூறுவர.

கஅ०. ஜிஞஞாசுவுககு அநுபலபதிநிரூபணததின உப யோகம இதுவாம —

க. "நெஹநாநாஸதிகிஂசந-ஈணடு நாநாவெனபது சிறிதுமிலலை" என்றல முதலிய சுருதிகள பிரபஞ சததின முககாலததைய வினமையைக கூறுகின றன. அநுபவசிததப பிரபஞசததிறகு முககாலத தினமை பொருநதாது. ஆதலால பிரபஞசததைச சுவரூபமாக நிஷேதஞ செயவதிலலை. ஆனல பிர பஞசம பாரமாாததிக மனருதலால பாரமாாததி கததனமை விசிஷடப் பிரபஞசததிறகு முககால ததினமையைச சுருதி கூறுகினறது. இவவாறனுல பாரமாாததிகததனமை விசிஷடப பிரபஞசததின அபாவம சுருதிசிததமாம.

உ. அநுபலபதிப பிரமாணததினுலும சிததமாம. பார மார்ததிகததனமை விசிஷடபபிரபஞசம உளதா யின எங்ஙனம் பிரபஞசததின உபலபதி சுவரூப மாக உணடாகினறதோ, அங்ஙனமே பாரமாாததி கப பிரபஞசததின உபலபதியும உண்டாம். சுவரூ பமாகவோ பிரபஞசததின உபலபதி யுணடாகின றது. பாரமாாததிக வடிவததால பிரபஞசததின

உபலப்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்தின் அபாவமிருக்கின்றது. இவ்வாறாயுல பிரபஞ்சாபாவத்தின ஞானம அநுபலபதியினுல் உண்டாகின்றது, மற்றும அநேக அபாவங்களின் ஞானம் ஜிஞ்ஞாசுவுக்கு இஷ்டமாம. அதற்கு ஏது அநுபலபதிப பிரமாணமாம.

க௮௧ இவ்வாறாற சுருக்கமாய ஈசுவரஆசிரிதம, பிரமாணத்தோடு கூடிய பிரத்தியக்ஷாதி அறுவகை ஜீவாசிரிதம என்னும பேதத்தால பிரமை இருவகையாகச சொலலப்பட்டது. அது ஸமிருதியின வேறாகிய யதாரத்த விருத்திஞானவடிவாம.

அநுபலபதிப்பிரமாண நிரூபணமெனனும

ஏழாவது ரத்நம் முடிந்தது.



# எட்டாவது ரத்நம்.

## க. அப்பிரமாவிருத்தியின் பேதமும அநிர்வசநீயக்கியாதியினை நிரூபணமும.

## உஅ. யதாாத்த அபபிரமையின் பேதத்தைக் கூறுதல் கஅஉ-கஅசு.

கஅஉ. அபபிரமாவிருததியும யதாாததம அயதாாததமெனனும பேதததால இருவகைததாம. ஸமிருதி வடிவ அநதககரணததின விருததியினை யதார்த்த அப்பிரமை யெனபா. அநத ஸமிருதியும க யதாாததம உ. அயதாாததம எனனும பேதததால இருவகைததாம. அவறறுள,

கஅங. க. யதாாதத ஸமிருதி இருவகைததாம. (க) ஒனறு ஆதமஸமிருதி, (உ) மறறையது அநாதம ஸமிருதி.

(க) தததுவமஸி முதலிய வாககியஜநநிய அநுபவததினால உணடாகும ஆதமதததுவததின ஸமிருதி யதார்த்த ஆத்மஸமிருதியாம.

(உ) வியாவகாரிக மிததியாததனமை அநுபவ முணடாக அதன ஸமஸகாரததால மிததியாததனமை வடிவமாக வுணடாகும பிரபஞசததின ஸமிருதி யதார்த்த அநாத்மஸ்மிருதியாம.

௧௮௪. அங்ஙனமே அயதார்த்த ஸ்மிருதியும் இருவகைத்தாம். (௧) ஒன்று ஆத்மகோசரம், (௨) மற்றையது அநாத்ம கோசரம்.

(௧) அகங்காரமுதலியவற்றில் ஆத்மத்தன்மைப் பிரமவடிவ அநுபவத்தின் ஸம்ஸ்காரத்தால் அகங்கார முதலியவற்றில் உண்டாகும் ஆத்மத்தன்மையின் ஸ்மிருதியும், ஆத்மாவில் கர்த்திருத்தன்மை அநுபவத்தின் ஸம்ஸ்காரத்தினால் உண்டாகும் "ஆத்மா கர்த்தா" என்னும் ஸ்மிருதியும் ஆகிய இரண்டும் ஆத்மகோசர அயதார்த்த ஸ்மிருதிகளாம்

(௨) பிரபஞ்சத்தில் சத்தியத்தன்மைப் பிரமத்தின் ஸம்ஸ்காரத்தினால் உண்டாகும் "பிரபஞ்சம் சத்தியம்" என்னும் ஸ்மிருதி அநாத்மகோசர அயதார்த்த ஸ்மிருதியாம்.

௧௮௫. ஸம்ஸாரதசையில் எந்த ஞானத்தின் விஷயத்திற்குப் பாதமுண்டாகிறதில்லையோ, அல்லது பிரமாதாவிருக்க எந்தஞானத்தின் விஷயத்திற்குப் பாதமுண்டாகிறதில்லையோ அது யதார்த்தஞானமெனப்படும். ஆதலால் முற்கூறிய ஸ்மிருதி அப்பிரமைபாயினும் யதார்த்தமென்றே சொல்லப்பட்டது. பின் அதனையே அயதார்த்தமென்று கூறுதல் அசம்பவமாம்.

௧௮௬. அங்ஙனமாயினும், ஈண்டு முற்கூறிய ஸ்மிருதிக்குப் பரமார்த்த திருஷ்டியினாலோ அயதார்த்தத் தன்மை

யுண்டு. முற்கூறிய லக்ஷணத்தின் அநுசாரம் சமஸாரதிருஷ்டியினால் யதார்த்தத்தன்மை யிருத்தலின் ஆபேக்ஷிக யதார்த்தத்தன்மையு முளது. ஆதலால் முற்கூறிய ஸ்மிருதியினை யதார்த்த அப்பிரமை யென்று கூறுதலில் அசம்பவ தோஷமில்லை. இவ்வாற்றால் யதார்த்த அப்பிரமை சொல்லப்பட்டது.

## உகூ. அயதார்த்த அப்பிரமையின் பேதமும் ஸம்சயப்பிரமங்களின் நிச்சயமும் கஅஎ - ககூஎ.

கஅஎ அயதார்த்த அப்பிரமையும் இருவகைத்தாம். க. ஒன்று ஸ்மிருதிவடிவ அவித்தையின் விருத்தி, உ. மற்றையது அநுபவ வடிவம்.

கஅஅ க. உற்பூத ஸம்ஸ்காரமாத்திர ஜந்நிய ஞானத்தினை ஸ்மிருதி யென்பர்.

(க) ஞானமோ ஜந்நியமுமாம், அது ஸம்ஸ்கார ஜந்நியமன்று.

(உ) ஸம்ஸ்கார ஜந்நியமோ பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷமுமாம், அது ஸம்ஸ்காரமாத்திர ஜந்நியமன்று.

(ந) அநுபவம் பாதமாகி யுண்டாகிய ஸ்மிருதிக்கேதுவான பாவனையென்னும் ஸம்ஸ்காரம் எதுவோ, அது நிரந்தர மிருக்கின்றதாகலின் எப்போதும்

ஸமிருதி யுணடாதல வேண்டும. ஆனால அநத ஸம ஸகாரம உறபூதமனறு, அநுறபூதமாம.

ஆதலால ஓரிடததும அதிவியாபதி யிலலை. அநத ஸமிருதி (க) யதாாததம (உ) அயதாாததம எனனும பேதததால இருவகைததாம.

(க) யதார்த்த அநுபவஜநிய ஸமிருதி யதாாததமாம. அது முனனரே சொலலபபடடது.

(உ) அயதார்த்த அநுபவ ஜநிய ஸமிருதி அயதாாததமாம. அது அயதாாதத அபபிரமையில அடஙகியதாம.

அநுபவததில யதாாததநதனமை அபாதித அாததததினாலாகியதாம அபாதித அாதததைதை விஷயிககும அநுபவம் யதார்த்த மெனபபடுகினறது. அது பிரமை யெனறும சொலலபபடும. ஆதலால அபாதிந அாககததின் அதினமாம அநுபவததில யதாாததததனமை யுளது ஸமிருதியிலுளள யதாாதததனமை அயதாாதததனமைகள அநுபவததின அதீனமாம.

கஅகூ உ. ஸமிருதிககு வேறாகிய ஞானததினை அநுபவ மெனபா. அதுவும (க) யதாாததம (உ) அயதாாதத மென்னும பேதத்தால இருவகைததாம.

(க) யதார்த்த அநுபவமோ முன சொல்லபபடடது

(உ) அயதார்த்த அநுபவமும ஸம்சயம நிசசயம தாககமென்னும பேதத்தால மூவகைப்படும.

அயதார்ததததினையே பிரமம் என்றும பிராந்தியென்றும அத்தியாச மென்றுங கூறுவா.

௧௬0. ஏமஸயநிசசயவடிவபபிரமஙகள் அநாததததிறகு ஏதுவாம, ஆதலால அவை நிவாததிககததககனவாம ஜிஞ ஞாசுவுககு நிவாததிககததகக பிரஹ்மததின பேததததைக கூறுகின்றா —ஒரு தாமியிலுள்ள விருததமான நாநா தாமஙகளின ஞானம ஸம்ஸயமெனபபடும. அநதச சமசயம் (௧) பிரமாணஸமசயம; (௨) பிரமேயஸமசயமென இருவகைப் படும.

௧. பிரமாணகோசரஸநதேகம பிரமாணஸம்சய மெனபபடும. அதனையே பிரமாணகத (பிரமாணததின கணணுள்ள) அசம்பாவனை யெனபா. "வேதாநத வாககியம அதவிதீயப பிரஹ்மததில பிரமாணமா? அன்றா?" எனபது பிரமாண ஸம்சயம் அதன நிவிருததி சாரீரகததினது முதல அததியாயததைப் படிததலானுங கேட்டலாலும உணடாகினறது.

௨. பிரமேயஸம்சயமும ஆதமஸமசயம அநாதம ஸம்சயமெனனும பேதததால இருவகைததாம. அநாத்மஸமசயம அநநதவிதமாம, அதனைக் கூறுதலால் உபயோகமில்லை.

௧௬௧. ஆதமஸமசயமும் அநேகவிதமாம:-

௧. ஆதமா பிரஹ்மததின அபினனமா? அலலது பினனமா?

உ. அபின்னமாயினும் எப்போதும் அபின்னமா? மோக்ஷமாத்திரத்திலேயே அபின்னமா? அல்லது எப்போதும் அபின்னமன்று?

ங. எப்போதும் அபின்னமாயினும் ஆநந்தாதி ஐசுவரியமுடையதா? அல்லது ஆநந்தாதிக ளின்றியதா?

ச. ஆநந்தாதி ஐஸ்வரியமுடையதாயினும் ஆநந்தாதிகள் குணங்களா? அல்லது பிரஹ்மாத்மாவின் ஸ்வரூபமா?

இவைமுதலியனவாகத் "தத்" பதார்த்தா பின்ன "துவம்" பதார்த்தத்தில் அநேகவகை ஸம்சயங்களுள.

கக௨. க. அங்ஙனமே கேவல "துவம்" பதார்த்த கோசர ஸம்சயமும் ஆத்மகோசர ஸம்சயமாம்.

(க) ஆத்மா தேகாதிகளின் வேறு? அன்று?

(உ) பின்னமெனின் அணுவடிவமா? மத்திம பரிமாணமா? அல்லது விபு பரிமாணமா?

(ங) விபுவெனினும் கர்த்தாவா? அல்லது அகர்த்தாவா?

(ச) அகர்த்தாவெனினும் ஒன்றற்கொன்று பின்னமான அநேகமா? அல்லது ஏகமா? இவ்வாறான அநேக ஸம்சயங்கள் கேவலம் "துவம்" பதார்த்த கோசரமாம்.

கக௬௩. உ. அங்ஙனமே கேவலம் "தத்" பதார்த்த கோசரமாகவும் அநேகவித ஸம்சயங்களுள.

(க) வைகுண்ட முதலிய உலக விசேஷத்தில் வசிப்பவ ராகிய ஈசுவரன் பரிச்சின்னமான கைகால் முத லிய அவயவத்தோடு கூடிய சரீரியா? அல்லது சரீரமின்றிய விபுவா?

(உ) சரீரமின்றிய விபுவெனினும், பரமாணு முதலிய அபேக்ஷையினையுடைய ஜகத் கர்த்தாவா? அல்லது அபேக்ஷையின்றிய கர்த்தாவா?

(௩) பரமாணு முதலியவற்றின் அபேக்ஷையின்றிய கர்த்தாவெனினும், கேவல கர்த்தாவா? அல்லது அபின்ன நிமித்தோபாதானவடிவ கர்த்தாவா?

(௪) அபின்ன நிமித்தோபாதானமெனினும், பிராணிக ளது கர்மாபேக்ஷையின்றிய கர்த்தாவா யிருத்த லின் விஷமமாகச் செய்வித்தற்றன்மை முதலிய தோஷமுடையவரா? அல்லது பிராணிகளின் கர் மாபேக்ஷையுடைய கர்த்தாவாயிருத்தலின் விஷம மாகச் செய்வித்தற்றன்மை முதலிய தோஷமின் றியவரா?

இவை முதலியனவாக அநேகவகைத் "தத்" பதார்த்த கோசர ஸம்சயங்களுள. அவ்வெல்லா ஸம்சயங்களும் பிர மேயஸம்சய மெனப்படும்.

கக௪. அவற்றின் நிவிருத்தி மனனத்தினால் உண்டா கின்றது சாரீரகத்தினது இரண்டாவது அத்தியாயத்திற் அத்தி யயனத்தினாலேனும் சிரவணத்தினாலேனும் மனனம் சித்த மாகின்றது. அதனால் பிரமேய ஸம்சயத்தின் நிவிருத்தியுண் டாகின்றது

கக௫. ஞானசாதனத்தின் ஸம்சயமும் மோக்ஷ சாத னத்தின் ஸம்சயமும் பிரமேய ஸம்சயமாம். ஏனெனின் பிர மையின் விஷயத்தினைப் பிரமேய மெனபர். ஞானசாதனமும் மோக்ஷசாதனமும் பிரமையின் விஷயமாயிருத்தலின் பிர மேயமாம். ஆதலால் ஞானசாதனத்தின் ஸம்சயமும் மோக்ஷ சாதனத்தின் ஸம்சயமும் பிரமேய ஸம்சயமாம். அதன் நிவி ருத்தி சாரீரகத்தின் மூன்றாவது அத்தியாயத்தினால் உண்டாகின் றது.

கக௬. அங்ஙனமே மோக்ஷத்தினது சுவரூபத்தின் ஸம்சயமும் பிரமேய ஸம்சயமாம். அதன் நிவிருத்தி சாரீரகத் தினது நான்காவது அத்தியாயத்தினால் உண்டாகின்றது.

கக௭. சாரீரகத்தின் நான்காவது அத்தியாயத்தில் முதலில் சாதனவிசாரமே யிருக்கின்றது. பின்னர்ப் பல (பிர யோஜன) விசாரமிருக்கின்றது. மோக்ஷத்தினைப் பல மென் பர். அங்ஙனமாயினும்,

க. நான்காவது அத்தியாயத்தில் சாதனவிசாரம் எவ் வளவிலிருக்கின்றதோ, அவ்வளவு நான்காவது அத்தியாயத்தோடு கூடிய மூன்றாவது அத்தியாயத்

திஞல சாதனசமசயததின நிவிருததி உண்டாகி னறது.

உ. எஞசிய நானகாவது அததியாயததிஞல பல ஸம் சயததின நிவிருததி உணடாகினறது.

இவவாறருல ஸமசயவடிவய பிரமததின நிரூபணஞ் செயயபபடடது

## ரு௦. அயதார்த்த அப்பிரமையின் பேதமான நிச்சயவடிவப் பிரமஞானத்தின் நிச்சயம் ககஅ - உ௦எ.

**ககஅ.** நிசசயவடிவப பிரமததைக கூறுவாம — ஸம் சயததின வேறுகிய ஞானததினை நிச்சயமெனபா. சுததியின் சுததிததனமைவடிவ யதாததஞானமும சுததியின இரஜ ததனமைவடிவப பிரமஞானமுமாகிய இரணடும ஸமசயத தின வேறுகியஞானமாயிருததலின நிசசயவடிவமாம். தனது அபாவாதிகரண அவபாசததினைப பிரமமெனபா. எஙஙனம சுததியில இரஜதப பிரமம உணடாயின ஆணடு,

க. சுவ எனபது இரஜதமும அதன ஞானமும,

உ. அதன பாரமாாததிக அல்லது வியாவகாரிக அபா வம்,

ரு. அதன அதிகாணம அதாவது அதிஷடானமாகிய இ1ஜஜ¬ அலலது இ1ஜஜ¬ விசிஷடசேதனம அல் லது இ1ஜஜ¬ உபகிதசேதனம அலலது இதுவெ னுமவடிவ விருததி உபகிதசேதனம,

அ

ச. அதில் அவபாசமாகிய இரஜதமும் அதன் ஞான முமாகிய இவை பிரமமெனப்படுகின்றன.

கக௯. அல்லது அதிஷ்டானத்தின் விஷமசத்தையு டைய அவபாசத்தினைப் பிரமமென்றும் அத்தியாசமென்றுங் கூறுவர். வியாகரணத்தின்படி அத்தியாச பதத்திற்கும் அவ பாச பதத்திற்கும் விஷயமும் ஞானமுமாகிய இரண்டும் வாச்சியமாம்.

௨00. ஆதலால் அர்த்தாத்தியாசம் ஞானாத்தியாசமெ னனும் பேதத்தால் அத்தியாசம் இருவகைத்தாம்.

அர்த்தாத்தியாசம் அநேக வகையினதாம்

க சிலவிடத்துக் கேவல சம்பந்தமாத்திரத்தின் அத் தியாசமுளது.

உ. சிலவிடத்துச் சம்பந்தவிசிஷ்ட சம்பந்தியின் அத் தியாசமுளது

ங. சிலவிடத்துக் கேவலதாமத்தின் அத்தியாசமுளது.

ச சிலவிடத்துத் தாமவிசிஷ்ட தாமியின் அத்தியாச முளது.

ரு. சிலவிடத்து அந்நியோந்நியாத்தியாசமுளது.

சா. சிலவிடத்து அந்நியத்ராத்தியாசமுளது. அந்நியத் ராத்தியாசமும் இருவகைத்தாம் —

(க) ஒன்று ஆத்மாவில் அநாத்மாத்தியாசம்.

(உ) அநாத்மாவில் ஆத்மாத்தியாசம்.

இவவாற்ருல் ஆததாததியாசம அநேகவகையினதாம. முறகூறிய லக்ஷணததிறகு எஙகும சமனவய (பொருதத) முணடு.

௨0க. அங்ஙனமே முககிய சிததாநததிலோ சகல அததியாசஙகளுககும அதிஷடானம சேதனமாம. இரஜஜு வில சாபபம தோறறுமாயின ஆணடும இதுவெனும வடிவ விருததி யவசசினன சேதனததிறகு அபினனமான இரஜஜு அவசசினன சேதனமே சாபபததின அதிஷடானமாம; இர ஜஜு அதிஷடானமனறு. இபபொருள விசாரசாகரததில வெளிபபடையாம. ஆணடு,

க சேதனததிறகுப பரமாாதத சததையுண்டு.

௨. அலலது அதன உபாதியாகிய இரஜஜு வியாவ காரிகமா யிருததலின இரஜஜு அவசசினன சே தனததிறகு வியாவகாரிக சததையுணடு.

இருவகையானும சாபபததிறகும அதன ஞானததிற கும பிராதிபாசிகசததை யிருததலால அதிஷடானத்தின சத தையினும விஷமசததையுடைய அவபாசம சாபபமும அதன ஞானமுமாம. ஆதலால இரணடையும அத்தியாசமென்றும அவபாசமெனறுங கூறுவர.

௨0௨. சததைககு மூனறு பேதமுணடு. க. ஒனறு பிராதிபாஸிகம. ௨. இரணடாவது வியாவகாரிகம. ௩. மூன ருவது பாரமாாததிகம.

க. எதறகுப பிரஹ்மஞானமின்றி இரஜஜுவாதி யவச சினன சேதனததின ஞானததினல பாதமுணடா

கின்றதோ அதற்குப் பிராதிபாஸிகசத்தை யுண்டு. இத்தன்மையன இராஜ்ஜு சர்ப்பமுதலியனவாம்.

௨. பிரஹ்மஞானமின்றி எதற்குப் பாதமுண்டாகிற தில்லையோ, பிரஹ்மஞான முண்டாக எதற்கு அதிஷ்டானத்தினும் வேறாய சத்தாஸ்பூர்த்தி யிருப்பதில்லையோ, அதற்குவியாவகாரிகசத்தையுண்டு. இத்தன்மையன அவித்தையும் ஆகாயமுதலியனவுமாம்.

௩. மூன்று காலத்திலும் எதற்குப் பாதமுண்டாகிற தில்லையோ அதற்குப் பாரமார்த்திகசத்தையுண்டு. இத்தன்மையது சேதனமாம்.

இவ்வாற்றால் சகல அத்தியாசங்களிலும் ஆரோபிதத்தினும் அதிஷ்டானத்திற்கு விஷமசத்தையுண்டு.

௨0௩. எப்பதார்த்தத்தில் ஆதாரத்தன்மை தோற்றுகின்றதோ அது அதிஷ்டானமெனப்படும். அவ்வாதாரத்தன்மை பரமார்த்தமா யிருக்குக அல்லது ஆரோபிதமாகுக. அதன் பரமார்த்தத் தன்மையில் ஆக்கிரகம் இதன் பிரசங்கத்திலில்லை. என்னெனின் எங்ஙனம் ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமிருக்கின்றதோ அங்ஙனமே அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமிருக்கின்றது. அநாத்மாவில் பரமார்த்தமாக ஆத்மாவின் ஆதாரத்தன்மையில்லை. ஆனால் ஆரோபித ஆதாரத்தன்மையுள்ளது ஆதலால் ஆதாரமாத்திரத்தினை இப்பிரசங்கத்தில் அதிஷ்டானமென்பர்.

௨0௪. ஆதமாவிறகு அதிஷடானம அநாதமாவாமெ னறு கூறுதலாலும ஆதமாவும ஆரோபிதமாகுதலால கற பிதமாகும.

௨0௫. அங்ஙனமாயினும் பாஷியகாரா சாரீரகததின ஆரமபததில ஆதம அநாதமாககளின அநநியோநநியாததியா சததைதக கூறியிருககினறனா ஆதலால அநாதமாவில ஆத மாவினது அததியாசததின நிஷேதமோ பொருநதாது.

பரஸபர அததியாசததினை அந்நியோந்நியாத்தியாசமென் பா. ஆதலால அநாதமாவில ஆதமாததியாசததை அஙகீகரி தது முறகூறிய சஙகைககுச சமாதானம சொலலுதலவேண டும. அச்சமாதானம் இவ்வாறும் —

அததியாசம இருவகைததாம. க. ஒன்றோ சுவரூபாத தியாசமாம. ௨. மறறையது ஸமசாககாததியாசமாம.

க. எபபதாாததததின சுவரூபம அநிாவசநீயமா யுண் டாயிருககினறதோ அதனைசசுவரூபாத்தியாசமென பா. எங்ஙனம்

(க) சுததியில இரஜததததின சுவரூபாததியாசமுளது.

(௨) ஆதமாவில அகஙகாரமுதலிய அநாதமாககளின சுவரூபாததியாசமுளது.

௨. அஙஙனமே எப்பதாாததததிறகுசசுவரூபமோ வி யாவகாரிகமாகவாவது பாரமாாததிகமாகவாவது முதலிற சிததிததிருகக அநிாவசநீய சமபநதம உறபததி யாகினறதோ, அது ஸம்சர்க்காத்தியாச

மெனப்படும். எங்ஙனம் முகத்தில் கண்ணாடியின்
ஓர் சம்பந்தமுமில்லை. இரண்டு பதார்த்தங்களும்
வியாவகாரிகமாயிருக்கின்றன. ஆண்டுக் கண்ணாடி
யில் முகத்தின் சம்பந்தம் தோற்றுகின்றது. ஆத
லால் அநிர்வசநீய சம்பந்தம் உற்பத்தியாயிருக்கி
ன்றது. இவ்வாற்றால் அநேக இடங்களில் சம்பந்
திகளோ வியாவகாரிகமா யிருக்கின்றன. அவற்
றின் சம்பந்தமும் சம்பந்தங்களின் ஞானமும்
அநிர்வசநீயமா யுண்டாயிருக்கின்றன. அவற்றை
ஸம்சர்க்காத்தியாச மென்பர்.

உ0௬. அங்ஙனமே சேதனத்தின் அத்தியாசம் அகங்
காரத்திலில்லை, சேதனமோ பாரமார்த்திகமாம். அதன் சம்
பந்தத்தின் அத்தியாசம் அகங்காரத்திலுளது. ஆத்மத்தன்
மை சேதனத்திலுள்ளது; அகங்காரத்தில் தோற்றுகின்றது.
இதனால் ஆத்மாவின் தாதாத்மியம் சேதனத்திலுளதாய அக
ங்காரத்திற் றோற்றுகின்றது ஆதலால் ஆத்மசேதனத்தின்
தாதாத்மிய சம்பந்தம் அகங்காரத்தில் அநிர்வசநீயமா யிருக்
கின்றது.

அல்லது ஆத்மாவின்கணுள்ள தாதாத்மியத்தின் அநிர்
வசநீயசம்பந்தம்அகங்காரத்திலுளது. ஆதலால் சேதனம்கற்
பிதமன்று. ஆனால் சேதனத்தின் தாதாத்மிய சம்பந்தம் அல்
லது ஆத்மசேதனத்தினது தாதாத்மியத்தின் சம்பந்தம் கற்
பிதமாம்.

உ0௭. இவ்வாற்றால்,

க. யாண்டுபபாரமாாததிக பதாாததததின அபாவ முணடாய அதன பிரதீதி யாணடு உணடாகினறதோ, ஆணடுப பாரமாாததிக பதாாததத்தின அநிாவசநீய சமபநதம வியாவகாரிக பதாாததததில உறபததியாகினறது அதன ஞானமும அநிாவசநீயமாகவே உறபததியாகினறது

உ. வியாவகாரிக பதாாததத்தின் அபாவமுணடாக யாணடுத தோறறுகினறதோ ஆணடு அநிாவசநீயமாகவே சமபநதி உறபததியாகினறது சமபநதியின ஞானமும அநிாவசநீயமாகவே உறபததியாகினறது. சிலவிடததுச சமபநதமாததிரமும சமபநதததின அநிாவசநீயஞானமும உறபததியாகினறன.

சகல அதிஷடானஙகளினும அததியஸதததின விஷமசததையே அநிர்வசநீயசத்தையாம்.

ஆதமாவின அததியாசம அநாதமாவில உணடாயின ஆணடும அதிஷடான அநாதமா வியாவகாரிகமாம; அததியஸதம ஆதமாவனறு ஆனல ஆதமாவின சமபநதம அநாதமாவில அததியஸதமாம, ஆதலால அது அநிர்வசநீயமாம்.

சததசததின லக்ஷணததினை (சததிறகும அசததிறகும வெறுயததனை) அநிர்வசநீயமெனபா.

## ௩க. பிரசங்கத்தால் நேர்ந்த சங்கைசமாதான முதலிய அர்த்தத்தைக்கூறுதல்- உ0அ—உகக.

### நான்கு சங்கைகள்.

உ0அ. க. இப்பிரசங்கத்தில் முதற்சங்கை யிதுவாம் —

"சொப்பனப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானம் சாக்ஷியாம்" என்று சொல்லப்பட்டது.

அதுசம்பவியாது ஏனெனின், எவ்வதிஷ்டானத்தில் எவ்வாரோபித முண்டாகின்றதோ அவ்வதிஷ்டானத்தோடு அது சம்பந்தமுடையதாகத் தோற்றுகின்றது. எங்ஙனம் சுத்தியில் ஆரோபிதம் இரஜதமாம். அது "இது இரஜதம்" என்பதாகச் சுத்தியின் இதந்தை (இதுவெனுந்தன்மை) யோடு சம்பந்த முடையதாய்த் தோற்றுகின்றது. ஆத்மாவினிடத்துக் கர்த்திருத்துவ முதலியன ஆரோபிதமாம். அவை "அகம் கர்த்தா (யான்செய்பவன்)" என்பதாக ஆத்மாவோடு சம்பந்தமுடையனவாகத் தோற்றுகின்றன. அங்ஙனமே சொப்பனத்தின் யானைமுதலியன சாக்ஷியினிடத்து ஆரோபிதமாமாயின், "யான் யானை" "என்னிடத்து யானை" என்றிவ்வாறு சாக்ஷியினோடு சம்பந்தமுடையனவாகத் தோற்றுதல்வேண்டும்.

உ0க. உ இரண்டாவது சங்கை யிதுவாம் — "சுத்தியில் இரஜதாபாவம் (வெள்ளியின்மை) வியாவகாரிகமும் பாரமார்த்திகமுமாம்" என்று முன் கூறப்பட்டது.

அது பொருந்தாது ஏனெனின், அத்வைதவாதத்தில் ஒரு சேதனமே பாரமார்த்திகமாம். அதனின் வேறாகியதனைப

பாரமாாததிகமெனக கொள்ளின அதவைத வாததகிறகு ஹானியுணடாகும பாரமாாத்திக ரஜதமிலலை யாகலின பார மாாததிக ரஜதததின அபாவமிருககினறதெனறு கூறுதல பொருநதும பாரமாாததிக அபாவமிருககினறதெனறு கூறு தல பொருநதாது.

உகO. ௩. மூன்றவது சங்கை இதுவாம் — "சுததியில அநிாவசநீய ரஜதததின உறபததி நாசஙகள உணடாகின றன" எனறு முன கூறபபடடது.

அது சம்பவியாது எனெனின இரஜதததிறகு உறபததி நாசமுளதாயின, கடததின உறபததி நாசததினைபபோல இர ஜதததின உறபததி நாசம தோறறுதலவேணடும.

(க) எங்ஙனம் கடததின உறபததி உணடாகுஙகால ததுக "கடம உறபததியாகினறது" எனறு கடத தின உறபததி தோறறுகினறதோ,

(உ) கடததிறகு நாசம உணடாகுஙகாலததுக "கடம் அழிந்தது" எனறு கடததின நாசம தோறறுகி னறதோ,

(க) அங்ஙனமே சுததியில இரஜதததின உறபததி யுண டாகுஙகாலதது "இரஜதததின உறபததியுணடா யிறறு" எனபதாக உறபததி தோறறுதலவேண டும.

(உ) இரஜதததிறகு ஞானததினால நாசமுணடாயின அபபோது "இரஜதததிறகுசசுததிதேசததில நாச

7. (ச) பிரஹ்மசாக்ஷாத்காரம் (ஆத்மாநுபவம்) வந்த பிறகு கடாதிகளுக்குப்பாதம் (பொய்யென்னும் நிச்சயம்) உண்டாகின்றதே யன்றிச் சம்சார (வியாவகாரிக) தசையில் பாதம் உண்டாகின்றதின்று.

"எப்போது இந்த வித்வானுக்கு எல்லாம் ஆத்மாவாக ஆய்விடு (விளங்கு)கின்றனவோ அப்போது அந்த வித்வான் எந்தப் பிரமாணத்தைக்கொண்டு எந்தவிஷயத்தைப் பார்ப்பான்" என்னுஞ் சுருதியினால் ஆத்மஞானம் வந்தபின்னர்ப் பிரபஞ்சத்திற்குப் பாதமுண்டாகின்றதென்பது விளங்குகின்றது.

"எப்போது இரண்டாவது வஸ்து இருக்கின்றதுபோல தோன்றுகின்றதோ அப்போது இவன் மற்றொன்றைப் பார்க்கின்றான்" என்னுஞ் சுருதியினால் சம்சாரதசையில் பிரபஞ்சம் பாதிக்கப்படாமலிருக்கின்றதென்பது விளங்குகின்றது. ஆகவே, 'பாதிக்கப்படாமலுமிருக்கிற' என்னும் இரண்டாவது விசேஷணத்தால் சம்சாரதசையில் பாதிக்கப்படாமலிருக்கிறயாதொரு விஷயமுண்டோ அந்த விஷயத்துடன் கூடின ஞானத்தன்மை இலக்ஷணமாமென்பது தீர்மானிக்கப்படுவதால் கடாதி ஞானத்தில் அவ்வியாப்தியின்று.

"ஆத்மஞானம் வருகின்றவரை சரீரத்தில் ஆத்மஞானம் எங்ஙனம் பிரமாணமோ அங்ஙனமே கடாதிஞான முதலியனவும் பிரமாணமா"மென்று பெரியோர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது.

# பிரமாண நிரூபணம்.

பிரமாணவகை

௮-8 பிரமாணம் — பிரத்தியக்ஷம், அநுமானம், உவமானம், சப்தம், அருத்தாபத்தி, அநுபலப்தி என்றறுவகைத்து.

## பிரத்தியக்ஷபிரமாணம.

9. பிரத்தியக்ஷப்பிரமையின கரணமெதுவோ அது பிரத்தியக்ஷ பிரமாணமெனபபடும. ஈணடுப பிரத்தியக்ஷப பிரமையாவது சைதன்னியமே, இதறகுப் "பிரஹமம அபரோக்ஷம" எனனுஞ் சுருதியே ஆதாரமாம

(ஆ) சைதனனியம (க) அநாதியாயிருததலின அதனை அறிதற்குச சக்ஷுராதிகள எஙஙனம பிரமாணமாகும? 4.

10. (ச) சைதனனியம அநாதியாயிருபபினும அதனைப பிரகாசிககச்செயகினற அநதககரணவிர்ததி இந்திரிய சமபந்தததாலுணடாகினறமையின (உ) விருததியோடுகூடிய சைதனனியம (ங) சாதியெனறு சொல்லபபடுகினறது

---

(க) அநாதி-உறபததியிலலாதது.

(உ) "இருககினறது" என்னும்வியவகாரததிறகு ஹேதுவாகிய அவிததை அநதககரணஙகளின பரிணமம் விருததியெனபபடும.

(ங) சாதி = உறபத்தியுடையது

(ஆ) அங்ஙனமாயின், விருத்தியை ஞானமென்று எங்ஙனம் உரைக்கலாம்? 5.

11. (அ) விருத்தியானது ஞானத்திற்கு (க) அவச்சேதக (விசேஷண) மாயிருத்தலால் அது ஞானமென்று உபசாரமாகச் சொல்லப்படுகின்றது. அந்தக்கரண விருத்தியை ஞானமென்று சொல்வது (உ) உபசார (கௌண)ந்தான். இங்ஙனம் விவரணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

(ஆ) (ங) அந்தக்கரணம் (ச) நிர் அவயவமாயிருத்தலின் அதற்குப் (ரு) பரிணாமமாகிய விருத்தி எங்ஙனங் கூடும்? 6.

---

(க) ஒன்றனை மற்றவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பதனை அவச்சேதகமென்பர். அவச்சேதகமாவது குறைந்தவிடத்தும் அதிகவிடத்து மிருப்பதாகாமல் எவ்வளவிடத்தில் இலக்ஷியமிருக்கின்றதோ அவ்வளவிடத்திருப்பதாம் இலக்ஷணம் இலக்ஷியத்தின் குறைந்த விடத்திருப்பின் அவ்வியாப்தியாம், அதிக விடத்திருப்பின் அதிவ்யாப்தியாம் அவச்சேதகமெனினும் வரைந்துகொள்வதெனினும் ஒக்கும்.

(உ) ஒன்றன் தன்மையை மற்றொன்றன்மேலேற்றிச்சொல்வது உபசாரமாம் இங்கு ஞானத்தின் தன்மையை விருத்தியின் மேலேற்றி அதனை ஞானமென்று கூறியவாறறிக.

(ங) தேகத்தினுள் கரண (ஞானத்திற்குச் சாதன) மாயிருத்தலின் அந்தக்கரணமெனப்படுகின்றது.

(ச) நிர் அவயவம்-அவயவமின்றியது, அவயவம்=உறுப்பு.

(ரு) ஒரு வஸ்து தன் அவஸ்தையைவிட்டு வேறு அவஸ்தையை யடைவது பரிணாமமெனப்படும் பரிணாமமெனினும், திரிபெனினும் விகாரமெனினும் ஒக்கும்.

12. (அ) அந்தக்கரணத்திற்கு அவயவ மின்றென்ப தினறு.அநதக்கரணம அவயவததோடு கூடினது, சாதியான திரவியத்தனமையால; (கடம் போல)

"பிரஹமம மனததைச் சிருஷடி ததது" என்னும சுருதி டால மனது சாதிததிரவிய மெனறு அறியபபடுகின்றது

"காமம, சஙகறபம், சந்தேகம, சிரததை, அசிரததை, தைரியம், அதைரியம, லஜஜை, தீ, பயம இவையாவும மனமே" என்னுஞசுருதியால விருததிரூபஞானம மனோதர்மமென றறியபபடுகினறது. இநதசசுருதியிற கூறிய 'தீ' எனனும் பதத திறகு விருததிவடிவ ஞானமெனபது பொருள. ஆகையாற றுன காமாதிகளும மனோதர்மங்களென றறியபபடுகினறன. (எனவே, இவை ஆதமதர்மஙகளனறெனபது வெளிபபடை டாம).

(ஆ) காமாதிகள அந்தக்கரண தர்மமாயின நான் இச் சிககிறேன், நான அறிகிறேன், நான் பயபபடுகிறேன எனற றொடககதது அநுபவம் நிகழ்தல் கூடாது. மேறகூறிய அநு பவ மிருததலின் காம முதலியவை ஆதமதாமஙகளெனறு தெரியவருகினறன; வரவே, இவை எஙஙனம் அநதககரண தாமஙகளாம? 7.

13. (அ) எஙஙனம இருமபுததுணடிற்குத தஹிககுஞ சகதி இல்லாமற் போயினும, தஹிககும சகதிககு ஆசிரயமான

அக்கினியின் (க) தாதாத்மியாத்தியாச மிருப்பதால் இரும்பு எரிக்கின்றது என்னும் வியவகாரம் ஏற்படுகின்றதோ அங்ஙனமே சுகமுதலிய ஆகாரமாகப் பரிணமிக்கின்ற அந்தக்கரணத்துடன் ஐக்கியாத்தியாச மிருப்பதால் (ஆத்மாவும் அந்தக்கரணமும் ஒருவடிவாக அத்தியாசத்தால் தோன்றுவதால்) நான் சுகி, நான் துக்கி என்றற்றொடக்கத்து வியவகாரங்கள் ஏற்படுகின்றன.

(ஆ) அந்தக்கரணம் (உ) இந்திரியமா யிருந்தலின் அம்சத்திந்திரியமாம். அம்செங்ஙனம் நானென்னும்பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாம்? 8.

14 (ச) அந்தக கரணத்தை இந்திரிய மென்று கூறுவதில் பிரமாணமின்று.

(ஆ) "இந்திரியங்கள் மனதை ஆறாவதாக வுடையன" என்னும் பகவத்கீதாவசனத்தை (அந்தக்கரணமும் இந்திரிய மென்பதற்கு)ப் பிரமாணமாகச் சொல்லுகிறோம். 9.

15 (ச) இந்திரிய மன்றியிருக்கிறமனத்தினால் ஆறென்னும் சங்கியை(எண்ணிக்கை)யைப் பூர்த்தி செய்வதில் விரோத

---

(க) தாதாத்மியம் - ஒருவடிவாந்தன்மை, அத்தியாசம் - ஒன்றில் பிறிதொன்று கற்பனையாயத் தோன்றுதல்.

(உ) "சரீரத்தோடு கூடிய ஞானகரணமான அதீந்திரியம்-இந்திரிய" மென்று தர்க்க கௌமுதி கூறுகின்றது.

...ன்று இந்திரியத்திலிருக்கும் சங்கியையின் பூர்த்தியானது இந்திரியத்தால் தான் செய்ய வேண்டுமென்னும் நியமமின்று.

"எஜமானனை ஐந்தாவதாகவுடைய ருத்துவிக்குக்கள் (தக்ஷிணையை வாங்கிக்கொண்டு எஜமானின் காரியத்தைச்செய்கின்ற பிராமணர்கள்) இடையென்னும் பாத்திரத்தில் புரோடாசத்தை வைத்துக்கொண்டு பக்ஷிக்கின்றார்கள்" என்னுமிடத்தில் ருத்துவிக்குக்களிடத்துள்ள ஐந்தென்னும் சங்கியையின் பூர்த்தியானது இவர்களிலும் வேறான எஜமானனால் பூர்த்தியாவதாக அறியப்பட்டிருக்கின்றது.

மேலும், "மகாபாரதத்தை ஐந்தாவதாகவுடைய வேதங்களை அத்தியயனஞ்செய்து வைத்தார்" என்னும் ஸ்மிருதியில் வேதத்திலுள்ள ஐந்தாவது சங்கியையின் பூர்த்தி வேதமன்றி இருக்கிற மகாபாரதத்தா லுண்டாவதாகக் காணப்பட்டிருக்கின்றது.

மேலும், "சக்ஷு முதலிய இந்திரியங்களைக் காட்டிலும் ரூப முதலிய விஷயங்கள் சிரேஷ்டமானவை, அவற்றினும் மனதுசிரேஷ்டம்" என்னும் கடசுருதியால் மனம் இந்திரியமென்று விளங்குகின்றது.

(ஆ) மனம் இந்திரியமன்றென்று சொல்லும் பக்ஷத்தில், ஞானசுகி ஞானதுக்கி என்றறிருட்கத்து ஞானம் பிரத்தியக்ஷமாதல் கூடாது, என்னை? (இந்த ஞானங்கள்) இந்திரியத்தா லுண்டாகாமையின். 10.

16. (ச) இந்திரிய ஜனனிய ஞானம் பிரத்தியக்ஷமென்பதின்று.

அநுமிதிமுதலிய ஞானங்களும் மனோஜன்னியமாயிருத்த லின பிரததியக்ஷமாதலவேண்டும் மேலும், ஈசுவரஞானம இந்திரிய ஜனனியமனறியிருபபதால் அதறகுப பிரதியக்ஷத தனமை இலலாமறபோம.

(ஆ) உனது சித்தாந்தத்தில பிரததியக்ஷ காரணம யாது? 11.

17. (ச) ஞானமும பிரததியக்ஷமாகின்றது, விஷய மும பிரததியக்ஷமாகினறது. இவ்விரண்டனுள நீ ஞானப பிரத்தியக்ஷததிறகுக காரணம வினவுகினறனையா? விஷயப பிரத்தியக்ஷததிறகுககாரணம வினவுகினறனையா?

ஞானபபிரததியக்ஷததிற்குப பிரமாண சைதனனியத் திறகும் விஷயாவச்சினன (வரைவுபடட) சைதன்னியத்திறகு முணடான அபேதததை ஹேதுவாகச் சொல்லுகினறோம். அஃது எஙஙனமெனின கூறுதும.—

18. பிரமாத்ரு பிரமாண விஷயசைதன்னியங்கள்

சைதனனியம் I. பிரமாத்ரு சைதனனியம, II. பிர மாணசைதன்னியம, III. விஷயசைதனனியமெனமூவகைதது.

I. அந்தக்கரண அவசசினனசைதன்னியம (க) பிரமாத்ரு சைதனனியமாம்,

(க) தேகததின் மததியிலுள்ள அநதககரணததால அவசசினன மான சைதன்னியம பிரமாதாவெனபபடும்; பிரமாதா வெனினும் பிரமாதரு வெனினும் ஒக்கும.

ii. அந்தக்கரண விருத்தி அவச்சின்ன சைதன்னியம் (க) பிரமாண சைதன்னியமாம்.

iii. கடாதி அவச்சின்ன சைதன்னியம் (உ) விஷய சைதன்னியமாம்.

19. எங்ஙனம் தடாகத்திலுள்ள ஜலம் மதகுவழியாய்ப் புறப்பட்டு வாய்க்கால் வழியாக வயலிற்சென்று அவ்வயலாகாரமாகி நிற்கின்றதோ, அங்ஙனமே (ங) தேஜசிலிருந்துண்டான அந்தக்கரணமும் சக்ஷுமுதலிய இந்திரியத்துவாரா (வழியாய்) வெளிப்பட்டுக் கடாதிவிஷயதேச (இட)த்தை அடைந்து கடாதி விஷயாகாரமாய்ப் பரிணமிக்கின்றது. இப்பரிணாமமே விருத்தியென்று சொல்லப்படுகின்றது.

20. அநுமிதி முதலிய ஸ்தலங்களிலோ அந்தக்கரணம் அக்கினி முதலிய விடங்களிற் செல்லுகின்றதின்று; ஏனெனில்? அக்னி முதலியவைகட்குச் சக்ஷுராதி இந்திரியங்களுடன் சம்பந்தமிராமையின். ஆகவே 'இதுகடம்' என்றற்றொடக்கத்துப

(க) விருத்திஞானவடிவ அந்தக்கரண பரிணாமம் பிரமாணமெனப்படும்.

(உ) ஞானத்திற்கு விஷயமானகடாதிகளால் அவச்சின்னமான சைதன்னியம் விஷய சைதன்னியமெனப்படும், விஷயசைதன்னியமெனினும் பிரமேயசைதன்னியமெனினும் ஒக்கும்.

(ங) தேஜசிலிருந்துண்டான-சத்துவகுணத்திலிருந்துண்டான. "சத்துவ குணத்திற் றோன்றுந் தயங்குமுட் கரண நான்கும்" என்று கூறுவதிங்கறிதற்பாற்று.

பிரத்தியக்ஷங்களில கடாதிகளும அவற்றின் ஆகாரமான விருத்திகளும வெளியில் ஓரிடத்திற சேர்ந்திருக்கின்றமையினா இவ்விரணடோடு கூடியுள்ள சைதனனியமும் ஒன்றே,

21 (விருத்திசைதனனியம் இது, விஷயசைதனனியம இது என்னும) பாகுபாட்டை அறிவிக்கக்கூடிய அந்தககரணவிருத்தி, கடாதிவிஷயம எனனுமிவவிரணடும் ஓரிடத்திருப்பதால் அவை (சைதன்னியத்திற்கு) பேதத்தை யுணடாக்குகின்றதில்லை. ஆகையினாற்றான மடத்தினுள்ளிருக்குங் கடாகாசம மடாகாசத்தினும வேறாகின்றதின்று அங்ஙனமே, இதுகடமெனனும் ஞானம உணடாகினறவிடத்திலுங்கடாகாரவிருத்தி கடத்துடன் சேர்ந்திருப்பதால கடாவசசின்ன சைதனனியமும கடாகாரவிருத்தியவசசின்ன சைதனனியமும ஒன்றாய் விடுகின்றன; ஒன்றாகுதலால, கடஞானம கடவிஷயத்தில பிரத்தியக்ஷமாம.

22. சுகாதி அவச்சின்னசைதனனியமும சுகாதியாகார அவசசின்ன சைதனனியமும அந்தககரணமாகிய ஓரிடத்திலிருப்பதால 'நான சுகி' என்றற்றொடக்கத்து ஞானம சுகாதிவிஷயத்திற பிரத்தியக்ஷமாம

(ஆ) (உபாதிகள ஓரிடத்திருப்பதால உபஹிதங்கட்கு அபேதம் உண்டாகின்றது. அதுவே பிரத்தியக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லுமிடத்து) அந்தக்கரணவிருத்தியாகின்ற சுகாதி ஸ்மரணமும, சுகாதிவிஷயத்தில பிரத்தியக்ஷமாதல்வேண்டும. 12.

23. (௪) ஸ்மரி (நினை)க்கப்படுகின்ற சுகம் சென்றொழிந்து போய்விட்டது. ஸ்மரணமாகிய அந்தக்கரணவிருத்தி வர்த்தமான (நிகழ்) காலத்திருக்கின்றது.

இங்ஙனமிருத்தலால், சுகம் சுகாகாரஸ்மரணமென்னும் இரண்டிற்கும் காலபேதமேற்படுகின்றது, அவற்றால் அவச்சின்னமான சைதன்னியங்கட்கும் பேதமேற்படுகின்றது. (அதனால் நான் பூர்வம் சுகியென்கின்ற ஸ்மரணத்திற்குப் பிரத்தியக்ஷத்தன்மை யுண்டாகமாட்டாது)

(பிரத்தியக்ஷத்திற்குக் காரணம் உபாதேய (விசேஷிய)மான சைதன்னியங்களின் அபேதமாம் அதற்குக்காரணம் (க) உபாதிகள் (கடமும் கடாகாரவிருத்தியும்) ஒருதேசத்திலும், ஒருகாலத்திலுமிருத்தலேயாம்.

(ஆ) உபாதேயங்கள் (உ) அபேதமாகின்றதற்குக் காரணம் உபாதிகள் ஓரிடத்திருப்பதென்று கூறின், அப்பொழுது

(க) எது வஸ்துவின் சொரூபத்திற் பிரவேசியாமல் வ்யாவர்த்தகமா (பிரித்துக்காட்டுவதா) யிருக்கின்றதோ அஃது உபாதியெனப்படும். கடாகாசம் என்றவிடத்துக் கடமாகிய உபாதி ஆகாயத்தின் சொரூபத்திற் பிரவேசியாமல் மற்ற மடாகாசமுதலியவற்றினின்றும் கடாகாசத்தை வேறு பிரித்து அறிவிக்கின்றமை காண்க.

அல்லது ஒரு வஸ்துவைப் பல வஸ்துவைப்போல் காட்டுவதற்கு நிமித்தமாயுள்ளது எதுவோ அஃது உபாதியாம்

(உ) பிரத்தியக்ஷத்திற்குக் காரணம் அவச்சேதியமான (வரைவு படடிருப்பதான) சைதன்னியங்களின் அபேதமாம். அவ்வபேதத்திற்குக் காரணம் உபாதிகளாகிய விஷயம், விஷயாகார விருத்தி

'நான் முன்னர்ச் சுகியாயிருந்தேன்' என்னும் ஸ்மிருதியில் அதி வியாப்தி வருகின்றது 13.

24. (ச) அவ்வதிவியாப்தியைப் பரிகரித்தற் பொருட்டு விஷயத்திற்கு 'வர்த்தமான' மென்னும் விசேஷணம் கொடுத்தல் வேண்டும்.

[வர்த்தமான விஷயாவச்சின்ன சைதன்னியத்திற்கும் விருத்தியவச்சின்ன சைதன்னியத்திற்கும் அபேதமென்பது இதனது திரண்ட பொருளாம்.]

---

யாகிய இவ்விரண்டும் ஒரு தேசத்திலும் ஒரு காலத்திலும் இரு - லேயாமென்று நிராமானிக்கப்பட்டது இங்ஙனம் கூறுமிடத்து வே று காலத்திலும் ஒரு தேசத்திலுமிருக்கின்ற கடம், மடம் என்னும் இவற்றால் அவச்சேதத்தியமான ஆகாசத்திற்குப் பேதம் ஏற்படும். உபாதேயங்கட்கு அபேதம் உண்டாகுங்காலத்து உபாதிகள் ஏக காலத்தி லிருக்கவேண்டுமென் றுரைக்கும் பக்ஷத்தில் அன்னியோன் னியாசிரய (ஒன்றையொன்று பற்றுதல்) தோஷம் ஏற்படுகின்றது. எங்ஙனம்? உபாதேயங்கட்கு அபேதம்சித்தித்தால் ஏககாலத்திலுள்ள உபாதிகளிரண்டும் அவச்சேதகமாய் விடுகின்றன. ஒரு காலத்தில் உபாதிகளிரண்டும் அவச்சேதகமாயின் உபாதேயங்கட்கு அபேதம் சித்திக்கின்றது. இங்கு உபாதேயங்களின் அபேதத்தால் உபாதிகளின் அவச்சேதகமும், உபாதிகளின் அவச்சேதகத்தால் உபாதேயங்களின் அபேதமும் சித்திக்கின்றமையின், ஒன்றையொன்று பற்றுதலென்னும் அந்நியோந்நியாசிரிய தோஷமாயிற்று. இங்ஙனம் அந்நியோந் நியாசிரய தோஷம் வருகின்றதென்னும் அபிப்பிராயத்தினால் பிரத் தியக்ஷப் பிரமாணத்தை வேறு வகையாய் நிரூபிக்கின்றார்.

(ஆ) இங்ஙனமாயினும், 'உன்னுடைய (க) தர்மா தர்மங்கள் இப்போ (வர்த்தமானகாலத்) திருக்கின்றன' என்று ப்ரரத்து வாக்யத்தினலுண்டான சாப்த ஞானத்தில் அதி வ்யாப்தி தோஷமுண்டாகின்றது; இவ்விடத்தில் தர்மாதர்ம பாவச்சின்ன (தர்மாதர்மங்களால வளைவுபட்ட) சைதன்னியம் அவற்றின் ஸந்நிதிஅவச்சின்ன சைதன்னியம இவ்விரண்டும ப்ரகடமாயிட்டமையின். 14.

25. (ச) விஷயத்திற்கு 'வர்த்தமான' மென்பதே யன்றி யோக்கிய' மென்னும விசேஷணமும கொடுத்தல வேண் டும. (அங்ஙனம) 'வர்த்தமான யோக்கிய விஷய'மென்று விசேஷணத் தந்து கூறுவதால மேற கூறிய அதிவியாப்தி தோஷமுண்டாகவின்று.

(உ) தர்மா தர்மங்களும சுகாதிகளும் அந்தக்கரணதர் மங்களாயிருப்பினும அவற்றுள சில யோக்கியம, சிலஅயோக்கி யம என்று கூறுவதில பிரயோஜன பலத்தால கற்பிக்கபபட்டு

---

(க). சுபாசுப கர்மங்களாலுண்டாகிக் காலாந்தரத்திற கிடைக்குஞ் சுவர்க்க நரகங்களுக்குக் காரணமாய அந்தக்கரணத்தில தங்கி இருப்பவை தர்மாதர்மங்களெனப்படும். இவற்றிற்கு அபூர்வம, அதிர்ஷ்டம, புண்ணியபாவமென்னும பெயர்களுமுண்டு.

(உ). வேறொன்றை யாசிரயித்ததாயச் சுதந்தரமின்றியிருப்பது தர்ம மெனப்படும். தர்மாதர்மங்களும சுகாதிகளும அந்தக்கர ணத்தை யாசிரயித்தனவாய சுதந்தரமின்றி (தாமாகவே யிருந்த லின்றி) யிருப்பதால தர்மங்களாம்.

சுபாவமே (க) சரண (அடைக்கலஸ்தான)மாம். அங்ஙனம சுபாவத்தைச சரணமாக அடையாத பக்ஷத்தில் நியாய மததிலும தர்மாதர்மம, சுகதுக்கம ஆதம தர்மமாயிருதத லால சுகாதிகளைப்போனறு தர்மாதர்மங்களும பிரததியக்ஷ மாதல வேணடும.

(சுகாதிகள பிரததியக்ஷ யோககிய விஷயமாயிருககினறன, தர்மா தர்மங்கள பிரததியக்ஷ யோககிய விஷயமாகாவென்று பதார்ததததின இயலபுகளைக காரணமாக ஒபபாத பக்ஷததி தர்மா தர்மங்களும பிரததியக்ஷமாமெனனும) இதில யாதோர் ஆக்ஷேபமுமினறும்

(ஆ) இங்ஙனம இலக்ஷணததைப பரிஷ்கார (சுத்த)ஞ் செயதாலும் ஒருவன சுகியாயிருககுங்காலதது 'நீ சுகி' எனனும வாககியததால் உணடாகினற சாபத ஞானமும பிரததியக்ஷமாதல வேணடும 15.

26. (ச) அங்ஙனம பிரததியக்ஷமாதல சமமதமே. 'நீ பத தாமவன' எனனுமிடததில விஷயம சமீபததிருபபதால சப ததிலுங்கூடப்பிரததியக்ஷஞானமுணடாகினறதெனற றங்கீ

---

(க). எதனகண பிரததியக்ஷததனமையின அநுபவம உணடாகின்றதோ அதன்கண யோககியததன்மையுண்டென்றும, எதனகண் பிரததியக்ஷததன்மையின அநுபவமஉணடாகவிலலையோ அதன்கண் யோககியத தனமை இன்றெனறும் அறிதல வேண்டும். யோககியததன்மையும் அயோககியத தனமையும் அநுபவத்தை யொட்டி ஆராயநதறியத்தக்கனவாம.

கற்பிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையினாற்றான் (பிரமாணஅவச்சின்ன சைதன்னியத்திற்கும் யோக்கியவர்த்தமான விஷய அவச்சின்ன சைதன்னியத்திற்கும் அபேதம் பிரத்தியக்ஷத்திற்கேதுவென்று அங்கீகரித்திருப்பதினாற்றான்) 'பர்வதம் வன்னியுடைத்து' என்னும் ஞானத்தில் வன்னி அம்சத்திலுண்டாகும் ஞானம் அப்பிரத்தியக்ஷமும், பர்வத அம்சத்திலுண்டாகும் ஞானம் பிரத்தியக்ஷமுமாயிருக்கின்றன;

1. (ஏனெனின்) பர்வதாவச்சின்ன சைதன்னியத்திற்கும் வெளிக்கிளம்பிய பர்வதாகாரவிருத்தி அவச்சின்ன சைதன்னியத்திற்கும் அபேதமிருக்கின்றமையாலும்,

ii வன்னி அம்சத்திலோ அந்தக்கரணவிருத்தி வெளிக்கிளம்பாமையின் வன்னி அவச்சின்ன சைதன்னியமும் அதன் (வன்னியின்) ஆகாரமான விருத்தியவச்சின்ன சைதன்னியமும் பரஸ்பரம்(ஒன்றற்கொன்று)வேறாயிருக்கின்றமையாலுமெனக

அங்ஙனமே உலகத்தில 'பர்வதத்தைப் பார்க்கின்றேன்' 'அக்கினியை அநுமிக்கின்றேன்' என்னும் அநுபவம் நிகழ்கின்றது.

நியாயமதத்திலோ பர்வதத்தை அநுமானம் செய்கின்றேன் என்னும் ஞானம் (க) அநுவியவசாயமாய் ஏற்படுகின்றது.

---

(க) நேத்திர முதலிய பிரமாணத்தால் கடமுதலியவற்றின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றது இது வியவசாய ஞானமெனப்படும். இதற்கு வடிவம் 'இதுகடம்' 'இதுபடம்' என்றாற்போலவதாம். மனவடிவப்பிரமாணத்தால் கடாதிகளின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றது. இஃது அநுவியவசாய ஞானமெனப்படும். இதற்குவடிவம் 'கடத்தைநான் அறிகின்றேன்' என்றாற்போல்வதாம்.

(பர்வதம வனனியுடைத்து என்னும் ஞான முநறும அநுமிதிஞானமெனறு அங்கீகரிககபபட்டிருககினறமையின மேற கூறிய தோஷம ஏறபடுகினறது).

(க) பக்ஷம இந்திரியததிற்குச சமீபததிலிராத அநுமானததில் [(1) பிருதிவியின பரமாணுககள கந்ததேதாடு கூடியவை; (2) பிருதிவிததன்மை யுடைமையின (3) கடாதிகளைப போல எனனும அநுமானததில] எலலா அமசததிலும (பக்ஷத்திலுஞ சாததியததிலும) ஞானம அபபிரததியக்ஷமாம

(உ) சந்தனககடடை சுகந்த முடைதது எனனும ஞானமும, சந்தனககடடை அமசததில பிரததியக்ஷமும, சுகந்த அம

---

வியவசாய ஞானததிறகு விஷயம கடமும, அநுவியவசாய ஞானத்திறகு விஷயம கடமும அதன ஞானமுமாம திரிபுடிகோசர ஞானம் அநுவியவசாய ஞானமெனபபடும

(க). எவவதிகரணததில (மலையில), சாததியததை (நெருபபை) அறியும விருபபமுணடாயச சாததியததின அநுமிதிவடிவ (இமமலை நெருபபுடைதது எனனும) நிசசயமுணடாகினறதோ அது பக்ஷமெனபபடும.

(உ). நையாயிகா அலௌகிகப் பிரத்தியக்ஷம் மூவகைததாமெனபர், அவை 1. சாமானியலக்ஷணம், ii ஞானலக்ஷணம், iii. யோக ஜன்னிய தர்மலக்ஷணம் எனபனவாம

1 அறியபபடும கடததனமைச சமபநதததால கடஙகளெனனும் வடிவினதாய சாவகடஙகளின பிரததியடசமுமுணடாதல சாமானிய லட்சணமாமெனபா.

ii. சந்தனககடடை சுகநதமுடைதது எனறு நேத்திரேநதிரியத்தாலுணடாகும ஞானம ஞானலக்ஷணமா மெனபா.

iii. யோகிகடகுணடாகுஞ் சாவ பதாாத்தங்களின ஞானம யோக ஜன்னிய தா்ம லட்சணமாயெனபா.

-த்திலோ அப்பிரத்தியக்ஷரூபமாம், (எங்ஙனமெனின்) சுகாதி யானது நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாகாதிருக்கின்றமை யின் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாயும் வாத்தியமானமாயு முள்ளவிஷயாவச்சின்னசைதன்னியத்திற்கு விர்த்தியவச்சின்ன சைதன்னியத்துடன் அபேதமிராமையின்

(ஆ) ஒரு ஞானத்தில் அப்பிரத்தியக்ஷத்தன்மையுட பிரத்தியக்ஷத்தன்மையும் அங்கிகரிக்கின் இவற்றிற்கு (க) (சாங்கரியமிருத்தலால்) ஜாதித்துவமில்லாமற்போம் 16

27 (ச) i. அஃது இஷ்டந்தான் (உ) ஜாதி உபாதி என்னும் பரிபாஷையானது எந்தப்பிரமாணங்கட்கும் விஷய மாகவிராமையின் அப்பிரமாணிகமாம்.

ii. 'இதுகடம்' என்றறிகிற்கடத்துப பிரத்தியக்ஷமோ கடத்துவாதிகளாயதர்மங்க ணிருபத்தில் பிரமாணமேயன்றி அக் கடத்துவாதிகள் ஜாதி என்பதிற் பிரமாணமன்று

---

(க) பிருதிவியின் பரமாணுக்கள் கந்தத்தோடு கூடியவை என்னும் ஞானத்தில் பிரத்தியக்ஷத்துவத்தைவிட்டு அப்பிரத்தியக்ஷத்துவம் இருக்கின்றது. 'இது கடம்' என்னும் ஞானத்தில் அப்பிரத்தியக்ஷத்துவத்தை விட்டுப் பிரத்தியக்ஷத்துவம் இருக்கின்றது. இவ்விரண்டும் சந்தனக்கட்டை சுகந்தமுடைத்து என்னும் ஞானத்தி லிருக்கின்றன, சந்தனக்கட்டை நேத்திரேந்திரியத்திற்குப் பிரத்திய க்ஷமாயும், சுகந்தம் அப்பிரத்தியக்ஷமாயு மிருத்தலின். இவ்வாறு வருதலே சாங்கரியமாம்

(உ) ஜாதி நித்தியமாய் ஒன்றாயப் பலவற்றில் ஒருமிச்சேர்த்லை யுடையது

(ஆ) (கடத்துவாதிகளை யறிதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணமில்லாமற் போயினும், அநுமானத்தைப்பிரமாணமாகச் சொல்லுகின்றோம்) 17.

28 (ச) ஜாதித்துவமாகிய சாத்தியம் அப்பிரசித்தமாயிருக்குங்காலத்து அதற்குச் சாதகமான அநுமானத்திற்கும் இடமின்று மேலும் சமவாயமோ சித்திக்கவில்லை.

29 பிரஹ்மபின்ன (பிரஹ்மத்திற்கு வேறான) பிரபஞ்சங்கௌல்லாம் அனித்தியமாயிருக்கின்றன. ஆகவே, நித்தியமாயும் அனேக பதார்த்தங்களிற் சமவாய சம்பந்தத்தாலிருப்பதுமான ஜாதித்துவமானது கடாதிகளிற் சித்திக்கவில்லை. இங்ஙனமே உபாதித்துவமும் நிராகரிக்கத்தக்கதாம்.

30. 'பர்வதம் வன்னியுடைத்து' எனனுமிடத்திலும், பர்வதாம்சத்திலுள்ள அந்தக்கரண விர்த்தியும்வேறு, வன்னியம்சத்திலுள்ள அந்தக்கரணவிர்த்தியும் வேறு என்று அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றமையின், அவ்வவ்விருத்தியாகிய அவச்சேதகமும்வெவ்வேறாயிருக்கின்றன இருந்ததலால், பிரத்தியக்ஷத்துவம், அப்பிரத்தியக்ஷத்துவமெனனும் இவைகள் ஒருசைதன்னியவிருத்தியில் இருப்பதில் விரோதமின்றும். ஆகவே, அவ்வவ்விந்திரியத்திற்கு யோக்கியமாகவும், வர்த்தமானமாகவுமுள்ளவிஷயாவச்சின்ன சைதன்னியத்திற்கும் விருத்தியவச்சின்ன சைதன்னியத்திற்குமுள்ள அபேதமே அவ்வவ்விஷயாகாரமான விருத்தியவச்சின்ன சைதன்னியமாகின்ற ஞானத

திறகு அவயவ்வம்சத்தில் பிரத்தியக்ஷகாரணமாம கடாதிக் ளாயவிஷயம் பிரத்தியக்ஷமாவதில விஷயாவசசின்ன சைதன னியததிற்கும் பிரமாதருசைதன்னியத்திறகு முளள அபேதந் தான காரணம.



விஷயப்பிரத்தியக்ஷத்தின் காரணம் கூறப்படுகின்றது

(ஆ) நான் இதனைப்பார்ககினறேன எனனும் ஞானம விஷயததிறகும பிரமாதாவிற் (காணபவனுக்)குமுளள பேதத் தைககாட்டுகின்றது. இங்ஙனமிருக்க, இதறகு விரோதமாகக கடாதிகளாய விஷயஙகடகும அநதககரணாவசசின்னசைதன னியமாய பிரமாதாவிற்கும அபேதம எவ்வனம பொருந் தும? 18.

31. (ச). விஷயததிறகுப பிரமாதாவோடு அபேதமாவது பிரமாதாவோடு (விஷயம்) ஒன்றுவதனறு; ஆனால பிரமாதரு சததையினும வேறு சத்தை (இருப்பு) விஷயத்திற்கினறென பது தான. ஆகவே, கடாதிகள கடாதி அவச்சின்ன சை தன்னியததில அத்தியாசமாயிருத்தலால (க) விஷயாவச

---

(க). அதிஷ்டான சததையை (கயிற்றின்ருபபை) விட ஆரோபததிற்கு (அககயிற்றிறறோனறியபாமபிறகு) வேறு சததையி னமையின அதிஷ்டானத்தின சததையே ஆரோபததின சத்தையா யிருததல பறறி, 'விஷயாவசசின்ன சைதனனியசததையே கடாதிக ளான விஷய சததையாம' எனறு கூறப்பட்டது

சின்னசைதன்னியசத்தையே கடாதிகளான விஷயசத்தையாம், அதிஷ்டான சத்தையினும் ஆரோபத்திற்கு வேறு சத்தை அங்கீகரித்தலின்மையின். விஷய சைதன்னியமோ மேற்கூறிய பிரகாரத்தினால் பிரமாதரு சைதன்னியமேயாம். ஆகையால் பிரமாதருசைதன்னியமே கடாதிகளுக்கு அதிஷ்டானமாயிருத்தலால் பிரமாதரு சத்தையே கடாதிகளின் சத்தையாம். (கடாதிகளுக்கோ) வேறு சத்தையின்று. ஆதலால் கடாதிகளுக்குப் பிரத்தியக்ஷத்தன்மை சித்திக்கின்றது. அநுமிதி முதலிய ஸ்தலங்களிலோ அந்தக்கரணம் வன்னி முதலிய தேசங்களிற் செல்லாமையின் வன்னியவச்சின்ன சைதன்னியம் பிரமாதரு சைதன்னியத்தோடு அபேதமாகின்றதின்று. அபேதமாகாமையின், வன்னியாதிகளின் சத்தை பிரமாதாவின் சத்தையினும் வேறும் வேறாயிருத்தலால் அதிவியாபதியின்று.

(ஆ) இங்ஙனங் கூறினும்

i இவன் தாமமுடையவன்; சிஷ்டாசாரமுடையவனாயிருத்தலின்

ii இவன் அதர்மமுடையவன், சிஷ்டாசாரமின்றியவனாயிருத்தலின் என்றற்றொடக்கத்து அநுமானஸ்தலங்களில் (க) தாமாதர்ம விஷயங்கள் பிரத்தியக்ஷமாதல் வேண்டும். (ஏனெனின்) தர்மாதி அவச்சின்ன சைதன்னியமும் பிரமாதரு

(க) தாமாதாமங்கள் ஸம்ஸ்கார வடிவமாய் அதி சூக்குமமாயிருத்தலின் பிரத்தியக்ஷமாதலின்று அங்ஙனமாயினும் அவை சுபவாசனையினாலும் அசுபவாசனையினாலும் அனுமானிக்கப்படுகின்றன.

சைதன்னியத்தோட பேதமாயிருத்தலாலதர்மாதிகளின்சத்தை பிரமாதரு சத்தையினும் வேறாக விராமையினெனக. 19

32. (ச) விஷயத்திற்கு 'யோக்கிய' மென்று விசேஷணங் கொடுத்தல் வேண்டும் (அங்ஙனம் கொடுப்பதால மேற்கூறிய தோஷம் உண்டாகாது)

(ஆ) இங்ஙனம் இலக்ஷணத்தைப் பரிஷ்கார (சுத்த)ஞ்செய்தாலும் 'கடம் உருவமுடைத்து' எனனும் பிரத்தியக்ஷஸ்தலத்தில கடத்தின் பரிமாண (அளவு)முதலியவைகட்கும் பிரத்தியக்ஷம் ஏறபடும், (ஏனெனின)

i ரூபாவச்சின்ன சைதன்னியமும் பரிமாணாதியவச்சின்ன சைதன்னியமும் அபேதமாய் விட்டமையாலும்,

ii ரூபாவச்சின்ன சைதன்னியமும் பிரமாதரு சைதன்னியத்தோட பேதமாயிருப்பதாலும்,

iii பரிமாணாதியவச்சின்ன சைதன்னியமும் பிரமாதாவோட பேதமாய் விட்டபடியாலும்,

iv. பரிமாணாதிசத்தை பிரமாத்ரு சத்தையினும் வேறாகாதிருப்பதாலுமெனக. 20.

33. (ச) பிரமாதாவிற்கு 'அவ்வவ்வாகாரமான விருத்தி உபகித' மென்று விசேஷணங் கொடுத்தல வேண்டும். (அங்ஙனம் விசேஷணம் கொடுத்தலால மேற்கூறியதோஷம் நேரிடாது.)

i. ரூபாகாரமானவிருத்தி உண்டாகுங்காலத்துப் (க) பரிமாணாதியாகார விருத்தியுண்டாகாமையாலும்,

ii. பரிமாணாகாரவிருத்தி உபகித பிரமாத்திரு சைதன்னிய அபின்னமான சத்தையை உடைத்தாகாமலிருப்பதாலும் அதிவியாப்தியின்று.

(ஆ) இங்ஙனம் அங்கீகரிப்பினும் விருத்தியில் அவ்வியாப்தி குற்றந்தங்கும், (எனின் ?)

i. (உ) அனவஸ்தாதோஷம் வருமெனனும் பீதியிலுல விருத்தியை விஷயமாக்குகின்ற வேறுவிருத்தியை ஒப்புக்கொள்ளாமையின்,

ii அவ்விடத்தில் தன்தா (விருத்தியா) காரமான விருத்தி உபகிதபிரமாதருசத்தையினும் வேறுசத்தையிராமையின் 21

---

(க) விசேஷணாபாவப்பிரயுக்த விசிஷ்டா பாவம் (விசேஷண மின்மையால் விசிஷ்ட மில்லையென்று) ஏற்படுகின்றது தண்டியில்லை யென்புழித் தண்டமின்மைபற்றித் தண்டியபாவஞ் சொல்லப்படுகின்றது.

பிரகிருதத்தில் ரூபாகாரவிருத்தி யுண்டாகுங்காலத்துப்பரிமாணாகாரவிருத்தி உபகிதத்துவவிசேஷணத்துவமிராமையின் பரிமாணாதி ஆகாரவிருத்தி உபகிதபிரமாதரு சைதன்னிய அபின்னமான சத்தையோடு கூடிக்கொண்டிருக்குந்தன்மை இல்லாமையின் பிரமாதாவேயின்றென்றேற்படுகிறதெனக.

(உ). அனவஸ்தை - வரம்பின்றியபோதல.

34 (ச) **அனவஸ்**தாதோஷம் வருமெனனும் பீதியினலே வேறுவிருத்தியை விஷயமாக்கும் விருத்தியை அங்கீகரிக்காவிடினும் தனக்கே தான் விஷயமாயிருக்குமென் றங்கீகரிக்கப் பட்டிருக்கின்றமையின் தன்னைவிஷயமாகச் செய்துகொள்ளும்விருத்தியுபகித பிரமாதரு சைதன்னியத்தின் சத்தையினும் வேறுசத்தை விருத்திக்கிரா மையின் (முற்கூறியதோஷமின்றாம்).

இங்ஙனமே அந்தக்கரணமும் அதன் தர்மங்களாகிய காமாதிகளும் கேவலம் சாக்ஷிக்கு விஷயமாயிருந்தாலும் அவ்வவ்வாகாரமானவிருத்திகளையங்கீகரித்திருப்பதால் மேற்கூறிய லட்சணம் அவ்விட (அந்தக்கரணம் அதன் தர்மங்களிட)த்திலுமிருக்கின்றது, இருத்தலால் அவ்வியாப்தி யின்று.

(ஆ) அந்தக்கரணமும் அதன் தர்மங்களும் விருத்திக்கு விஷயமென்று ஒப்புக்கொள்ளின் கேவலம் சாட்சிக்கு விஷயமெனனும் கொள்கைக்கு விரோதம் வருகின்றது. (வருதலால் அஃதெங்ஙனமொவ்வும்?) 22

35 (ச) (க) **கேவலசாக்ஷி விஷயத்துவமாவது** விருத்தியன்றிச சாட்சிக்குவிஷயமாவதின்று, ஆனால், இந்திரிய அநுமானுதிப பிரமாண வியாபாரமின்றிச சாக்ஷிக்கு விஷயமாயிருக்குந் தன்மையாம்.

---

(க) சாக்ஷிக்கு விஷயமாவது - **சாக்ஷிபாஸியமாம்**, அஃதாவது அவித்தியாவிருத்தி வாயிலாக எது சாக்ஷியால் பிரகாசிக்கப்படுகின்றதோ அது **சாக்ஷிபாஸ்ய**மெனப்படும்

ஆகையினாலுன, அகங்காரமிகை என்னும் நூலில் ஸ்ரீமத சங்கரபகவதபாதாசாரிய சுவாமிகளால அகமாகார விர்த்தி அங்கிகரிககப படடிருககின்றது. அஙஙனம அங்கீகரிககப படடபடியாறறுன (க) பிராதிபாசிகமான ரஜதஸ்தலததில ரஜதாகாரமான (உ) அவிததியாவிர்ததி வேதாநத சமபிரதாய முணர்நத (சர்வஞ்ஞமுனி முதலிய)வர்களால ஒபபுககொள ளபபடடிருககிறது

---

(க) சத்தை 1 வியாவகாரிகம் 11. பிராதிபாசிகம் 111 பார மார்த்திகமென மூன்றுவகைததாம-

1 எநதபபதார்ததததிறகு ஆதமஞானமினறிப பாதமுணடா கிறதில்லையோ, ஆனால ஆதமஞானததினாலேயே பாதமுணடாகினற தோ அநதபபதாரததம வியாவகாரிகசத்தை யெனபபடும. இதறகு தாரணம கடபடமுதலியனவாம்

11. எபபதாரததததிறகு ஆதமஞானமின்றியே பாதமுணடா கின்றதோ அபபதார்த்தம பிராதிபாசிக சத்தையாம். இதறகுதார ணம கயிறறரவு, கானல நீர முதலியனவாம.

111 எது முககாலததினும் பாதிககப படுகினறதினறோ அது பாரமார்த்திக சத்தையாம் இதறகுதாரணம சேதனமாம.

1. ஜனன, மரண, பநத, மோக்ஷ வியவகாரஙகளைசசிததிககச் செயவதாகிய சததை வியாவகாரிக சத்தை யெனப்படும

11. பிரதீதி (தோறறல) மாததிரம இருபபு பிராதிபாசிக சத்தை யெனபடும்.

111. எஞஞானறும உணமைபபொருளா யிருப்பது பாரமார்த் திக சத்தை யெனப்படும்.

(உ) விர்த்தி (1) அந்தக்கரணவிர்த்தி (2) அவித்தியா விர்த்தி யென்றிருவகைததாம்.

(1) அந்தக்கரணவிர்த்தி யுணடாவதறகு முன்னும் அதன நாசததிறகுட பின்னும அவவிரததியின விஷயமிருககும. இதறகு

37 அவற்றுள் (க) சையோகம், சையுக்தம், தாதாத்மியம் இவை முதலிய (உ) ஸன்னிகர்ஷங்கள் சைதன்னியத்தைப் பிரகாசஞ்செய்கின்ற விர்த்தியுண்டாகும் விஷயத்தில் உபயோகப்படுகின்றன.

அந்தவிர்த்தி—சம்சயம், நிச்சயம், கர்வம், ஸ்மரணமென நால்வகைத்தாம்.

38 அந்தக்கரணம் ஒன்றாயிருப்பினும் அது விர்த்தி பேதத்தினால் மனம், புத்தி, அகங்காரம், சித்தமென நால்வகைத்தாகச் சொல்லப்படுகின்றது.

"மனோபுத்திரஹங்காரம் சித்தம் கரணமாந்தரம் சம்சயோநிச்சயோகர்வஸ்மரணம் விஷயா இமே—அந்தக்கரணம் மனம், புத்தி, அகங்கார சித்தமென நால்வகைத்தாம்.

---

(க) கூடியதென்னும் வழக்கிற்குக் காரணமாயிருப்பது சையோகமெனப்படும். சையோகம் வியாபியாமலிருப்பது வியாபியாமலிருத்தல்-தானும் தன் அத்தியந்தாபாவமும் ஓர் அதிகரணத்திருத்தல், அஃதாவது ஏகதேசத்திருப்பதாம்.

சையோகமுடையது சையுக்தமெனப்படும்.

கலப்பிதபேதத்தோடு கூடிய வாஸ்தவ அபேதம் தாதாத்மியமெனப்படும்.

(உ) ஸன்னிகர்ஷம்-சம்பந்தம். அபாவத்திற்கும் சாதிரிசியத்திற்கும் விலக்ஷணமாயப் பிரதியோகியை அபேக்ஷித்துக்கொண்டு ஞானத்திற்கு விஷயமாயிருப்பது சம்பந்தமெனப்படும்.

எதனிடத்தில் எது சேருகின்றதோ அங்ஙனஞ் சேர்ந்த வஸ்துவின் சம்பந்தத்திற்கு அநுயோகி யென்றும், சேரும் வஸ்துவின் சம்பந்தத்திற்குப் பிரதியோகி யென்றும் சொல்லப்படும்.

i சம்சயாகார விர்த்தியுடையது மனமாம்.
ii. நிச்சயாகார விர்த்தியுடையது புத்தியாம்
iii கர்வாகார விர்த்தியுடையது அகங்காரமாம்.
iv ஸ்மரணாகார விர்த்தியுடையது சித்தமாம்."
என்று பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

39 அந்தப்பிரத்தியக்ஷம் (1) சவிகல்பம் (2) நிர்விகல்பமென்றிருவகைத்தாம் அவற்றுள்:—

(1) சவிகல்பம் வைசிஷ்டிய (சம்பந்த)த்தோடு கூடிய ஞானம் அது கடத்தை நானறிகின்றேனென்றுற்பத்திக்கத்து ஞானமாம்.

(2) நிர்விகல்பம் சம்பந்தமற்றோனாயிருக்கும் ஞானம். அது "ஸோயம் தேவதத்த —அந்தத்தேவதத் தனிவன்" என்றுற்பத்திக்கத்து லௌகிகவாக்கியத்தாலும் "தத்துவமசி- அதுநீயாயிருக்கின்றாய்" என்றுற்பத்திக்கத்து வைதிகவாக்கியத்தாலும் உண்டாகின்ற ஞானமாம.

(ஆ) இந்தஞானம (தத்துவமசி முதலியவற்றாலுண்டாகும ஞானம) சாபதம் (சபதபிரமாணத் தாலுண்டாகும் ஞானம) பிரத்தியக்ஷமன்று, என்னே? இந்திரியங்களாலுண்டாகாமையின 23.

40 (ச) பிரத்தியக்ஷஞானம் இந்திரியத்தினாலுண்டாகின்றதெனனும நியமமின்று. இத முன்னரே (26வது பாராவில்)

கண்டிக்கப்பட்டுள்ளது. ஆனல் (பிரத்தியக்ஷ ஞானத்திற்கு) யோக்கிய வர்த்தமான விஷயத்தை ஜனியத்திற்குப் பிரமாணத்தை ஜனியத்தோடுள்ள அபேதம் காரணமாமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

அங்ஙனமே, 'ஸோயம் தேவதத்த' என்னும் வாக்கியத்தாலுண்டாகின்ற ஞானத்திற்கு விஷயம் சமீபத்திலிருப்பதால் ததாகார (அவ்வாகார) மான அந்தக்கரணவிர்த்தி வெளியிற் செல்வதாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது; இருப்பதால், தேவதத்தாவச்சின்ன சைதன்னியமும் தேவதத்தாகாரமான விர்த்தி அவச்சின்ன சைதன்னியமும் அபின்னமாய் விட்டபடியால் 'ஸோயந் தேவதத்த:' என்னும் வாக்கியத்தினலுண்டாகின்ற ஞானம் பிரத்தியக்ஷமாம்

இங்ஙனமே 'தத்துவமசி' முதலிய வாக்கியங்களாலுண்டாகும் ஞானமும் பிரத்தியக்ஷம்; ஆண்டுப்பிரமாதாவே விஷயமாகையாலும் இரண்டிற்கும் அபேதமிருப்பதாலுமெனக.

(ஆ) (அங்ஙனமாயின்) வாக்கியத்தாலுண்டாகின்ற ஞானம் பதார்த்தத்தின் சம்பந்தத்தைக் கிரஹிப்பதால் எங்ஙனம் நிர்விகல்பமென்று சொல்லக்கூடும்? 24.

41. (ச) வாக்கியத்தாலுண்டான ஞானத்திற்கு விஷயமாயிருப்பதில் பதார்த்தத்தின் சம்பந்தம் நியமமன்று, ஏனெனின், தாத்பரியத்திற்கு அவிஷயமான (விஷயமாகாத) சம்பந்தமும் வாக்கிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாக வேண்டும். ஆனல் தாத்பரியத்திற்குவிஷயமாயிருப்பதே (நியாமகம்).

பிரகிருதத்திலோ "ஸ்தேவ ஸோம்மிய இதமக்கிர ஆஸீத்
இந்த உலகம் சிருஷ்டிக்குமுன்னர்ச் சத்தாகவே இருந்தது"
என்று (க) உபக்கிரமித்துத் "தத்சத்தியம் ஸஆத்மா தத்துவமஸி
சுவேதகேதோ-ஓ சுவேதகேதுவே அது சத்தியம், அஃது ஆத்மா,
அது நீயாயிருக்கின்றாய்" என்று உபசம்மாரத்தினால் (உ) சுத்
தப்பிரஹ்மத்தினிடத்தில் வேதாந்தங்களின் (ஈ) தாத்பரியம் நிச்
சயிக்கப்பட்டிருக்கின்றது அங்ஙனமாக (அவை) எங்ஙனம்
தாத்பரியத்திற்கு விஷயமாகாத சம்பந்தத்தைப் போதிக்கும்?

---

(க) வேதாந்த வாக்கியங்களின் தாத்பரிய உணர்ச்சிக்கு ஏது
(1) உபக்கிரம உபசம்மாரம், (2) அப்பியாசம், (3) அபூர்வதை,
(4) பலம், (5) அர்த்தவாதம், (6) உபபத்தி என்பனவாம் இவை
சட்விதலிங்கமென்று கூறப்படும்.

(1) எப்பொருள் ஆரம்பத்திலிருக்கின்றதோ அதுவே அந்தத்
திலு மிருக்குமாயின் அங்கு உபக்கிரம உபசம்மாரங்களின் ஒருவடி
வாந்தன்மை சொல்லப்படுகின்றது

பிரகரணத்தின் ஆரம்பம் உபக்கிரமமாம். பிரகரணத்தின்
முடிவு உபசம்மாரமாம்.

(2) அத்வைதார்த்தத்தை அடிக்கடி சொல்லுதல் அப்பியாச
மாம்.

(3) பிரஹ்ம உபநிஷத்துக்களொழிந்த வேறு பிரமாணங்
களால் அறியப்படாததென்பது அபூர்வதையாம்.

(4) அத்வைதப்பிரஹ்ம ஞானத்தினால் சர்வதுக்க நிவிர்த்தியும்
பரமானந்தப் பிராப்தியுமே பலமாம்.

இதுதான தததுவ மஸ்யாதி வாககியங்கட்கு அகண்டா ர்ததததனமை. எது சமபநதத்தை விஷயமாக்காத பதார்த்த ஞானத்தையுணடு பணணுந்தன்மையோ (அதுவே பரம).

"வாககியங்கடகுச சமபந்தத்தை விஷயமாககாத நண ஞானதல த யுணடுபணணுந தனமையே அகணடார்ததத துவம; அல்லது (க) பிராதிபதிகாரதத மாத்திரம போதிககுந

---

(5) ஸதுதியை அலலது நிநதையை அறிவிககும வாககியம அர்த்தவாதமாம்

(அபேத ஞானததின ஸதுதி வடிவினவும பேத ஞானததின நிநதை வடிவினவுமாகிய வாககியஙகள உபநிஷததுககளில இருக கினறமை காண்க.)

(6). பிரதிபாதிககபபடும அதவைத ஆதததிறகு அநுகூல மான யுகதி உபபத்தியாம்.

இது கூடும, இது கூடாதெனறு தனககணணே தோனறுவது யுக்தி எனபபடும்

(உ) தததுவக கூடடஙகளைத தததங்காரணஙகளில ஒடுககிக கொண்டுசென்றால காரணகாரியஙகளினறி முடிவாய நிறகுஞ் சேத னம சூத்தப்பிரமாம்

(௩) இவவாககியததால கேடபவனுககு இபபொருளின ஞான முண்டாகவேணடு மெனறு சொலலுவானது இசசை தாத்பரிய மாம்.

(க.) பிராதிபதிக மெனபது பெயர்பபகாபபதமாம். அதறகு உதாரணம —இறை, உமை, தையல எனறறதொடககததனவாம. இபபிராதிபதிகமென்னும பெயாப்பகாபபதஙகளின ஆசதமபிராதி

தன்மையாம்" என்று சிற்சுகாசாரியரால் சொல்லப்பட்டிருக்கின்றது.

42. (மீண்டும்) அப் பிரத்தியக்ஷம் 1 ஜீவசாக்ஷிப் பிரத்தியக்ஷம், 11 ஈசுவரசாக்ஷிப் பிரத்தியக்ஷமென இருவகைத்தாம்

ஜீவ சாக்ஷிப் பிரத்தியக்ஷம்.

அவற்றுள் 1 ஜீவனாவது அந்தக்கரண அவச்சின்ன சைதன்னியம்; ஜீவசாக்ஷியோ (கூடஸ்தரோ) அந்தக்கரண உபகித சைதன்னியம் அந்தக்கரணம் (க) உபாதியாயிருந்தால் (அவ்வுபாதியோடு கூடிய) அச்சைதன்னியம் சாக்ஷியென்றும், அந்தக்கரணம் விசேஷணமாயிருந்தால் (அவ்விசேஷணத்தோடுகூடிய) அச்சைதன்னியம் ஜீவனென்றும் வியவகரிக்கப்படுகின்றன.

இது தான் இவ்விரண்டிற்கு (ஜீவனுக்கும் சாக்ஷிக்கு) முள்ள வேறுபாடு

(க). விசேஷணமாவது காரியத்தில் பிரவேசித்து வியாவர்த்தகமாயிருப்பது.

---

பதிகார்த்த மெனப்படும். "பனனும் பகாப்பதப் பேரே பிராதிபதிகமது" என்று பிரயோக விவேகம் கூறுகின்றது. பகாப்பதம் அகண்டபதமென்றும், பகுபதம் சகண்டபதமென்றும் கூறப்படும். பிராதிபதிகார்த்தமெனினும் அகண்டார்த்த மெனினும் ஒக்கும்.

(க) அவச்சேதவாதம் கொள்ளுவோர் மதத்திலோ

(1). அந்தக்கரண விசிட்ட சேதனம் பிரமாதாவாம். அதுவே கர்த்தா போக்தாவாம்

(2) அந்தக்கரண உபஹித சேதனம் ஸாக்ஷியாம். ஒரே அந்தக்கரணம் பிரமாதாவுக்கு விசேஷணமாயும் ஸாக்ஷிக்கு உபாதியாயு மிருக்கிறது.

சொரூபத்தில் எக்குப் பிரவேசமுண்டோ அந்தமையு வியாவர்த்தக (வேறுபிரித்தறிவிக்கும்) வஸ்து விசேஷண மெனப்படும்.

மற்றப் பதார்த்தங்களினின்றும் வேறுபடுத்தி வஸ்துவின் சொரூபத்தை அறிவிப்பது எதுவோ அது வியாவர்த்தக மெனப்படும்.

எது வேறுபடுத்தி அறியப்படுகிறதோ அது வியாவர்த்திய மெனப்படும்.

'நீலகடம்' மென்பதில் கடத்தின் நீலவர்ணம் விசேஷணமாம். ஏனெனின், நீலகடத்தில் நீலவர்ணம் பிரவேசித்து மஞ்சள் வெண்மை முதலிய வர்ணங்களுடன்கூடிய கடங்களினின்றும் வேறுபடுத்தி இந்நீலகடத்தை யறிவிக்கின்றது. ஆகையால், நீலவர்ணம் வியாவர்த்தகமாம், அதனால் விசேஷணமாம். கடம் பரிச்சேத்தியமாம். ஏனெனின், மஞ்சள் முதலிய வர்ணங்களுடன்கூடின கடங்களினின்றும் வேறுபடுத்தப்பட்டு இந்நீலகடம் அறியப்படுகிறது.

வேறுபடுத்தறியப்படும் பதார்த்தம் பரிச்சேத்திய மென்றும் வியாவர்த்திய மென்றும் விசேஷிய மென்றும் சொல்லப்படும். "தண்டி புருஷன்" என்பதிலும் புருஷனுக்குத் தண்டம் விசேஷணமாம்.

இவ்விதமாகப் பிரமாதாவுக்கு அந்தக்கரணம் விசேஷணமாம். ஏனெனின், பிரமாதாவின் ஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் பிரவேச மிருத்தலால் பிரமேய சேதனத்தினின்றும் பின்னப்படுத்திப்

பிரமாதாவின் ஸ்வரூபத்தை யறிவித்தலால் அந்தக்கரணம் வியாவர்த்தகமாம்.

எது வஸ்துவின் ஸ்வரூபத்தில் பிரவேசியாமல் வியாவர்த்தகமாயிருக்கிறதோ அது உபாதியெனப்படும்.

(1) நையாயிகமதத்தில் கர்ணகோளகத்தால் வளைபட்ட ஆகாசம் சுரோத்திரமெனப்படும். இவ்விடத்தில் கர்ணகோளகம் சுரோத்திரத்திற்கு உபாதியாம். ஏனெனின், சுரோத்திரத்தின் ஸ்வரூபத்திற் கர்ணகோளகம் பிரவேசியாமல் வெளியிலுள்ள ஆகாசத்தினின்றும் சுரோத்திரத்தை வேறுபடுத்தியறிவிக்கிறது. ஆகையால் கோளகம் வியாவர்த்தகமாம்.

(2) கடாகாசம் மணங்களவு அன்னத்திற்கு அவகாசம் (இடம்) கொடுக்கிறது என்னுமிடத்திலும் ஆகாசத்திற்குக் கடம் உபாதியாம். ஏனெனின், மணங்கு அன்னத்திற்கு அவகாசம் கொடுக்கும் ஆகாசத்தின் ஸ்வரூபத்தில் கடத்தின் பிரவேசமில்லை. கடம் பிருதிவியின் காரியம். அதன்கண் அவகாசம் கொடுத்தல் பொருந்தாது. ஆதலால் கடத்திற்குச்சொரூபத்தில் பிரவேசம் பொருந்தாது, வியாபக ஆகாசத்தினின்றும் வேறுபடுத்தறிவிக்கின்றது. ஆதலால் மணங்கு அன்னத்திற்கு அவகாசம் தருவதாகிய ஆகாசம் எதுவோ அதற்குக் கடம் உபாதியாம்.

அதுபோல அந்தக்கரண உபஹித சேதனம் சாக்ஷியாமென்னுமிடத்தில் அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாம். ஏனெனின், சாக்ஷியின் ஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் பிரவேசமில்லை, பிரமேய சேதனத்தினின்றும் சாக்ஷியை வேறுபடுத்தியறிவிக்கிறது. ஆகையால், ஒரே அந்தக்கரணம் சாக்ஷிக்குபாதியும் பிரமாதாவிற்கு விசேஷணமுமாம். இவ்விதத்தால்,

உபாதியோ காரியத்தில பிரவேசியாது வியாவர்த்தகமாய வர்த்தமான காலத்திருப்பது.

உருவத்தோடு கூடியது கடம எனபுழி, உருவம விசேஷணமாம். கர்ணசட்குல்லி (பூறுக்கு) யோடு கூடிய ஆகாயம சுரோத்திரேந்திரியம எனபுழிக கர்ணசட்குலலி உபாதியாம். இவவுபாதியை நையாயிகர்கள் பரிசாய (நியாம) கம் எனபர்.

43 பிரகிருததத்திலோ அந்தககரணம ஜடமாயிருககினறது. அதனுலவிஷயபபிரகாசத தனமைகூடாது, கூடாமையின், விஷயத்தைப பிரகாசிபபிககினற சைதனனியத்திறகு (ஜீவசாக்ஷிககு) அஃது உபாதியாயிருககினறது. இந்த ஜீவசாக்ஷியானது ஜீவனதோறுமவெவவேருயிருககினறது (வெவவேறெனறு கொள்ளாது ஜீவசாக்ஷி ஏகமெனறுகொணடால (க) சைத்திரனுல் அறிய (அநுபவிகக) பபட்ட விஷயததில மைத்திரனுககும ஸமரண முணடாதலவேணடும். (உண்டாகாமையின ஜீவசாக்ஷி அனேகமாம)

---

(1). அநதககரண உபஹித சேதனம சாக்ஷியாம

(2) அநதககரண விசிஷ்டசேதனம பிரமாதாவாம்

(1) உபாதியுடையது உபஹிதமெனபபடும்

(2) விசேஷணமுடையது விசிஷ்டமெனப்படும

அநதககரண விசிஷ்டபபிரமாதாவே காததா போகதாவும் சுகியும துககியுமான சமுசாரி ஜீவனும்

இஃது அவசசேதவாததகின் கிரமமாமென்று சாரசாகரம கூறுகினறது

## ஈசுவர சாக்ஷிப் பிரத்தியக்ஷம்.

43. ஈசுவரசாக்ஷியோ மாயோபகித சைதன்னியம் (மாயையை உபாதியாகவுடைய சேதனம்) அஃதொன்று; என்னை? (க) அதிபூதமான மாயை ஒன்றாயிருத்தலால்.

(ஆ). "இந்திரோமாயாபிஃ புரூரூப ஈயதே—இந்தப்பரமேசுவரன் மாயைகளால் வெகு ரூபங்களாகச் சொல்லப்படுகின்றான்" என்னும் சுருதியில் 'மாயாபிஃ' என்று பகுவசனம் (பன்மைச்சொல்) இருப்பதால் (மாயை பல வென்று அறியப்படுகின்றது) அங்ஙனமாக மாயை ஒன்றென்று எங்ஙனம் கூறலாம்? 25

44. (ச) 'மாயாபிஃ' என்னும் பகுவசனம் மாயையிலிருக்கின்ற சக்திவிசேஷ அபிப்பிராயத்தினாலாவது அல்லது மாயையின்கணுள்ள சத்துவ, ரஜஸ், தமோகுணங்களின் அபிப்பிராயத்தினாலாவது பொருந்திவிடுகின்றது.

45. மேலும் "மாயையை உபாதான காரணமென்று அறியவேண்டும். மகேசுவரனை மாயி என்றறியவேண்டும். சிகப்பு, வெளுப்பு, கறுப்பு நிறங்களுள்ளதாயும், தனக்குச்சமானமான பிரஜைகளை யுண்டுபண்ணிக்கொண்டும் ஒரு அஜை (மாயை)யை ஒரு அஜன் (ஜீவன்) அநுபவித்துக்கொண்டிருக்கின்றான், மற்றொருவன் அதனை விட்டுவிடுகின்றான்"

---

42 (க) மைத்திரன், சைத்திரனென்பன இலக்கண நூலில் சாதத்தன் கொற்றனென்ன உதாரணமாகவரும் பெயர்கள் போன்றனவாம்.

(க) அதிபூதமாயை யென்றது சுத்தசேதனத்தைக் கற்பனையாக மறைத்துள்ள மூலாஞ்ஞானத்தை

"எந்த யோகியானவன் தன் மனதில் எவரைத் தியானித்து விஸ்தாரமான அவித்தையைக் கடக்கின்றானோ அந்தப் பரமாத்மாவின் பொருட்டு நமஸ்காரம் பண்ணுகின்றேன்" என்னும் சுருதி ஸ்மிருதிகளிலடங்கிய ஏகவசன (ஒருமைச்சொல்) பலத்தாலும் இலாகவத்தாலும் (எளிதின் முடிதலாலும்) மாயை ஒன்றென்று நிச்சயிக்கப்படுகின்றது ஆகையால் மேற்சொல்லிய மாயோபகித சேதனம் ஈசுவரசாக்ஷியாம். அதுவும் அநாதி

அதன் உபாதியான மாயை அநாதியாயிருத்தலால் மாயாவச்சின்ன சைதன்னியம் ஈசுவரனும் சைதன்னியத்திற்கு மாயை விசேஷணமாயிருந்தால் அது ஈசுவரனென்றும், உபாதியாயிருந்தால் சாக்ஷியென்றும் வியவகரிக்கப்படுகின்றது ஈசுவரத்தன்மைக்(தர்மத்திற்)கும், சாக்ஷித்தன்மைக்கும் பேதமேயன்றித் தர்மியான ஈசுவரனுக்கும் ஈசுவரசாக்ஷிக்கும் பேதமின்று அந்தப் பரமேசுவரன் ஒருவனாயிருந்தாலும் தனக்கு உபாதியான மாயையின் (க) சத்துவ, ரஜஸ, தமோகுணங்களின் பேதத்தினால் பிரமமா, விஷ்ணு, மகேசுவரனென்னும் பெயரை அடைகிறான்.

---

(க). பரமேசுவரன் மாயையின் சத்துவகுணப் பிரதானத்தால் உலகைக்காக்கும் விஷ்ணுவாகவும், இரஜோ குணப்பிரதானத்தால் உலகைப்படைக்கும் பிரமனாகவும், தமோகுணப்பிரதானத்தால் உலகை அழிக்கும் மகேசனாகவும் சொல்லப்படுகிறானென்றறிதல் வேண்டும்.

(ஆ). ஈசுவர (க) சாக்ஷி அனுமேயமாயிருக்குமாயின் "ஏதைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய — நான் பல பிரஜைகளாக ஆய்விடக்கடவேனென்று பிரஹ்மம் சங்கற்பித்தது" என்றிட்டுக்காட்டுச் சுருதியினால் சிருஷ்டிக்கு முன்னர்ப் பரமேசுவரனுக்குச் சங்கற்பமுண்டானதாகக் கூறுதல் எங்ஙனம் பொருந்தும்'. ௨௫.

46, (ச) இந்திரிய விஷய சம்பந்த முதலிய காரண வசத்தினால் ஜீவோபாதியான அந்தக்கரணத்தின் விருத்தி பேதங்கள் எங்ஙனம் உண்டாகின்றனவோ அங்ஙனமே சிருஷ்டிக்கப்போகின்ற பிராணிகளின் கன்மவசத்தினால் பரமேசுவரனுக்குபாதியாகிய மாயையினிடத்தில் இஃது இப்போது சிருஷ்டிக்கத்தக்கது, இப்போது பாலனம் பண்ணத்தக்கது, இப்போது சம்காரம் பண்ணத்தக்கது என்றிருக்கத்தது விருத்தி விசேஷங்கள் உண்டாகின்றன. அந்த விருத்திகள் சாதியா(உற்பத்தியுடையனவா)யிருப்பதால் அவற்றிற் பிரதிபிம்பித்த சைதன்னியமும் சாதியென்று சொல்லப்படுகின்றது. இங்ஙனம் சாக்ஷி

---

(க. சாக்ஷி என்பதற்கு சாக்ஷியே பிரத்தியக்ஷமாயிருக்கிறதென்பது பொருளாதலால் அதற்கு அனுமேயத்வே ஞானமுண்டென்பது புலப்படுகின்றது. அங்ஙனமாக அது சங்கற்பித்ததென்பது எங்ஙனமெனின் கூறுதும் —

உபாதியான மாயையும் சேதனமும் அனுமேயமாயிருப்பினும் ஜீவர்களின் கன்மவசத்தினால் சிருஷ்டிக்க வேண்டுமென்னும் விருத்தி உண்டாதலால் சங்கற்பமென்றறிய வேண்டுமெனக

(ஜீவசாக்ஷி ஈசுவரசாக்ஷி என) இரண்டு வகையாயிருத்தலால் பிரத்தியக்ஷ ஞானமும இரண்டு வகையாம்.

47 பிரத்தியக்ஷத்தன்மையும ஞேயமான விஷயத்தி லிருக்கின்றதென்றும ஞப்தியான ஞானத்திலிருக்கின்றதென்றும நிரூபிக்கப்பட்டது. அவவிரண்டனுள ஞானத்திலுள்ள பிரத்தியக்ஷத்தன்மைக்குச சித்துத்தன்மையே சாமானிய லக்ஷணம

பர்வதம வன்னியுடைத்து என்றறிருடகத்து ஸ்தலங்களிலும வன்னியாதி ஆகாரமான விருத்தி உபகித சைதன்னியத்திறகுத் தன்னுடைய சொரூபமசம சுயமபிரகாசமாயிருப்பதால பிரத்தியக்ஷத்தன்மை இருக்கின்றது. ஆகையால அவ்வவ விஷயாமசப பிரத்தியக்ஷத்தன்மையோ முறகூறியபடியேயாம.

அந்த லக்ஷணத்திறகுப் பிராந்திவடிவப பிரத்தியக்ஷத்தில அதிவியாபதி யின்று.

இந்தலக்ஷணம பிரம (பிராந்தி) பபிரமைகளுக்குச சாதாரணமான பிரத்தியக்ஷத்தன்மையின் நிரூபணத்திலை அந்தப் பிராந்திப பிரத்தியக்ஷமும லக்ஷியமாயிருக்கின்றது. (ஆகையால மேற்கூறிய லக்ஷணத்தில அதிவியாபதியின்று)

முன்னர்க்கூறிய லக்ஷணம பிரத்தியக்ஷப் பிரமைககுமாத்திரம லக்ஷணமா மென்றுசொல்லுமபக்ஷத்தில அபபொழுது விஷயத்திறகு "அபாதிதம (பாதிக்கபபடாதது)" என்றோர்

விசேஷணங்கொடுத்தல் வேண்டும். கிளிஞ்சில் முதலியவைகளைச் சாமானியமாய்ப் பார்த்துண்டான இதுவெள்ளி என்றறிவுண்டாக்கத்துப் பிராந்தி சமகாரகாலத்துண்டான பாதத்திற்கு(இது கிளிஞ்சில் என்றறிவுண்டாக்கத்து ஞானத்திற்கு) விஷயமான பிராதிபாசிக வெள்ளி முதலியவைகளை விஷயமாக வுடைத்தாயிருக்கிறது; உடைத்தாயிருப்பதால் மேற்சொல்லிய (அபாதித) லக்ஷணமின்று இன்மையால் அதிவியாப்தி இன்று.

(ஆ) கிளிஞ்சலின் விசேஷவடிவத்தைப் பாராது சாமானியவடிவைப் பார்க்குமிடத்து அதன்கண் இதுவெள்ளி என்னும் ஞானமுண்டாகின்றது. அந்த ஞானத்தினால் வெள்ளியைக் கிரஹிக்கவேண்டுமென்னும் பிரவிர்த்தியுண்டாகின்றது. இந்த

(௩) விஸம்வாதிப் பிரவிர்த்தியினாலே பிராந்திஞானஞ் சித்திக்கின்றது. சித்தித்தாலும், அதற்குவிஷயம் பிராதிபாசிகமாயும், பிராதிபாச (தோற்றிய) காலத்துண்டாயுமிருக்கிற வெள்ளி முதலியவைகளவிஷயமாயிருக்குமென்பதில் பிரமாணமின்று. என்னை? ஏற்கனவே சித்தமான(இயல்பாகவே பெறப்பட்டுள்ள) தேசாந்தரத்திலுள்ள ரஜதமே அந்தஞானத்திற்கு விஷயமாகச் சம்பவிக்கின்றமையின். 27

---

(க) நிஷ்பலப் பிரவிர்த்தியை (பயனில் முயற்சியை)ப் பிறப்பிக்கும் இச்சைமுதலியன விஸம்வாதி எனப்படும். அதனின்வேறாயது சம்வாதி எனப்படும். அஃதாவது சபலப் பிரவிர்த்தியைப் பிறப்பிக்கும் இச்சைமுதலியனவாம். விஸம்வாதிஞானம் பிராந்தியென்றும் சம்வாதிஞானம் யதார்த்தமென்றும் அறிக

48 (அ) தேசாந்தரத்திலுள்ள வெள்ளி நேத்திரேந்திரியத்திற்குச் சமீபத்திலிராமையின் அது பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாகின்றதின்று (ஆதலால் அது கூடாது.)

(ஆ) (அங்ஙனமாயின்) பிராந்திவடிவ பிரத்தியக்ஷ விஷயத்தில் ஞேயமான (அறியக்கூடிய) வெள்ளி முதலியவைகளாலுண்டாகின்ற ஞானமே சம்பந்தம் (என்று சொல்லுகின்றோம்). 28

49. (அ) ஞானத்தைச்சம்பந்தமாக அங்கீகரிக்கின் அந்த ஞானவடிவ சம்பந்தத்தினாலேயே பர்வதமுதலியவற்றிலுள்ள தீ முதலியவைகளுக்குப் பிரத்தியக்ஷத்தன்மை ஏற்படும். ஏற்படுங்காலத்து அநுமானமுதலிய பிரமாணங்களால் யாதொரு பிரயோசனமுமில்லாமற்போய்விடும் [ஆதலால் ஞானம் பிரத்தியாசத்தி (சம்பந்தம்) ஆகமாட்டாது ]

(ஆ) வெள்ளியை உண்டுபண்ணக்கூடிய ரஜதாவயவங்கள் (வெள்ளி உறுப்புகள்) சுத்தியிலிராதபோது உன்னுடைய மதத்திலும் எங்ஙனம் ரஜதம் உண்டாகும்? 29

50 (அ) உலகத்தில் பிரசித்தமான காரணமானது பிராதிபாசிக (தோற்றல் மாத்திரமாயுள்ள) இரஜதத்தை உண்டுபண்ணுகிறதின்று. ஆனால் அக்காரணமேவேறு அஃதெங்ஙனமெனின், காமாலைமுதலிய தோஷசகித நேத்திரமுள்ள புருஷனுக்கு எதிரிலுள்ள திரவியத்தின் சம்பந்தத்தினால் இதுவென்கிற ஆகாரமாயும் பளபளப்பாயுமுள்ள அந்தக்கரண விர்த்தி

உண்டாகின்றது. அவ்விருத்தியில் இதமவச்சின்ன (இது வென்பதனால் வளைவுபட்ட) சைதன்னியம் பிரதிபிம்பிக்கின்றது. அந்தப்பிரதிபிம்பத்தில் முற்கூறியவகையாக விருத்தி வெளிக்கிளம்புவதால் இதமவச்சின்ன சைதன்னியமும் விருத்தி அவச்சின்ன சைதன்னியமும் பிரமாத்ரு சைதன்னியமும் ஒன்றாய் விடுகின்றன.

ஆகவே, பிரமாத்ரு சைதன்னியத்தினும் வேறாகாத விஷய சைதன்னியத்திலுள்ள அவித்தையானது பளபளப்பு முதலிய சாதிருசியத்தின் (ஒப்புமையின்) தரிசனத்தால் உத்போதத்தை (பிரகாசத்தை) யடைந்த இரஜத சம்ஸ்காரத்தைச் சகாயமாகவுடையதாயும் காமாலையாதி நேத்திரதோஷத்தோடு கூடினதாயுமிருப்பதால இரஜதாகாரமாகவும் இரஜதஞானாபாச (வெள்ளிஞானப் பிராந்தி) ஆகாரமாகவும் பரிணமிக்கின்றது

பரிணாமம்.

உபாதான (முதற்) காரணத்திற்குச் சமானமானசத்தையுடைய காரியந் தோன்றுதல பரிணாமமாம.

விவர்த்தம்.

உபாதானகாரண (அதிஷ்டான)த்திற்கு விபரீதமான சத்தையுடைய காரியந் தோன்றுதல விவர்த்தமாம.

பிராதிபாசிக இரஜதமோ அவித்தையின பரிணாமமென்றும் சேதனத்தின விவர்த்தமென்றும் சொல்லப்படுகின்றது.

அவித்தியாபரிணாமமா(கிரியா)ன இரஜதமும அவித்தை

க்கு அதிஷ்டானமான இதமவச்சின்ன சைதன்னியத்திலிருக்கின்றது.

நம்முடைய (வேதாந்த சித்தாந்த) மதத்திலோ எல்லாக காரியமும் தமககு உபாதானமான அதிஷ்டானத்தை யாசிரயித்துககொண்டிருககின்றனவென்பது நியமமாம

(ஆ) இரஜதம சைதன்னியத்திலிருககுமாயின அதறகு இஃது இரஜதமென்று முன்னிருககும வஸ்துவுடனெங்ஙனம் தாதாத்மியம பொருந்தும? 30.

51 (ச) எங்ஙனம நியாயமதத்தில சுகாதிகளுககு அதிகரண(இட)மான ஆத்மாவிறகுச சரீரம அவச்சேதகமாயிருப்பதால ஆத்மாவிலிருககின்ற சுகமுதலியவைகள சரீரத்திலிருப்பதாகக காணப்படுகின்றனவோ, அங்ஙனமே சைதன்னியமாத்திரம இரஜதத்தைககுறித்து அதிஷ்டானமன்று (ஆனால) அதறகு இதமவச்சின்ன சைதன்னியம் அதிஷ்டானமாம. ஆகையால இதம பதார்த்தம (சுத்தி) அந்தச்சைதன்னியத்திறகு அவச்சேதகமாயிருப்பதால இரஜதத்திறகு முன்னிருக்கும வஸ்துவுடன சமபந்தஞானம பொருந்துகின்றது.

அந்தவிஷய சைதன்னியத்திறகும அந்தககரண உபஹித சைதன்னியத்திறகும அபேதமிருப்பதால விஷய சைதன்னியத்தில் இரஜதம அத்தியஸ்தமாயிருந்தாலும் அது சாக்ஷியினிடத்தில அத்தியஸ்தமென்றும கேவலசாக்ஷிவேத்தியமென்றும் சுகாதிகளைப்போன்று மறறொன்றினாலறியப படாததென்றும சொல்லப்படுகின்றது.

(ஆ) (இரஜதம்) சாக்ஷியினிடத்தி அத்தியஸ்தமாயி ருக்கிறதென்று சொல்லுமிடத்தில் நான் சுகியென்னுமஞானம் உண்டாகுவது போன்று நான் இரஜதமென்னுமஞானமும் உண்டாதல்வேண்டும் 31.

52 (ச) சுகாதிகள் அந்தக்கரண அவச்சின்ன சைதன் னியத்திலிருக்கிற அவித்தையின் காரியமாயிருப்பதால், நான் சுகியென்னும் ஞானம் உண்டாகின்றது. சுகாதிகள் கடாதிக ளைப்போல சுத்தசைதன்னியத்தில் அத்தியஸ்தமாயிருக்கின் றன ஆனால் எது எவ்விதமான அநுபவத்தினாலுண்டான சம்ஸ் காரசகிதமான அவித்தையினாலுண்டாகின்றதோ அஃது அவ் விதமான அநுபவத்திற்கு விஷயமாகவிருக்கின்றதென்பது நிய மமாம்.

ஆகவே, கடம் இதுவென்னும் அநுபவத்தினாலுண்டான சம்ஸ்காரத்தைச்சககாரி(துணை)யாகவுடைய அவித்தியாஜன்னி யமாயிருப்பதால் இதுவென்னும் அநுபவத்திற்கு விஷயமாயிருக் கின்றது. அந்தக்கரணமோ நானெனகிற அநுபவத்தினாலுண்டான சம்ஸ்காரத்தைச் சககாரியாகவுடைய அவித்தியாஜன்னியமா யிருப்பதால் நானென்னும் அநுபவத்திற்கு விஷயமாயிருக்கின்றது. சரீர இந்திரியமுதலானவைகளோ இருவகை (யான் என தென்னும்) அநுபவங்களால் உண்டான சம்ஸ்காரத்தைச் சக காரியாகவுடைய அவித்தியா காரியமாயிருப்பதால் இருவகை அநுபவத்திற்கும் விஷயமாயிருக்கின்றன. அங்ஙனமே, இஃது என சரீரம், நானதேகி, நானமனிதன், நானபிராமணன், இது

கண, நான்குருடன, இதுகாது, நான்செவிடன் என்றற்ளுடக் கதது இருவகை அநுபவமுமுணடாகினறன.

பிரகிருகததிலோ, பிராதிபாசிக வெள்ளி பிரமாதருசைத ணைியததோ டபேதமான இதமமசாவசசின்ன சைதனனி யத்திலிருககிற அவிதனதயினுலுண்டாயினும், இதுவெளளி யென்று யதார்ததமான வேள்ளியைப் பார்க்குமிடத்தில் இது வெனனும அநுபவத்தினுலுணடான சமஸ்காரஜனனியமாயிரு ப்பதால் இஃதேன்னும் அநுபவததிறகு விஷயமாயிருககினற தேயனறி நானேன்னும் அநுபவததிறகு விஷயமாகவிலலையென றறிநதுகொள்ளல வேணடும.

(ஆ) இவவாறிருபபினும மிததியாரஜதம சாக்ஷாத் சாக்ஷியுடன சமபந்தபபட்டிருககினறமையின அதற்குப் பரணம (தோறறம) சமபவிககுங்கால் ரஜததனைத விஷயமாகவு டைய பிராநதிவடிவ அவிததியாவிர்த்தியை யாதுபிரயோஜனங் கருதி ஒபபுககொளளலவேணடும? 32.

53 (ச) நீ சஙகிததது ஒபபுககொளளததககதனறு; (ஏனெனின) வெளளியை விஷயமாகவுடைய விருததியுபகித சைதனனியததின சததையைபபார்ககிலும வேறுசததை யில்லாமையே விஷயப் பிரத்தியக்ஷததிறகுக காரணமாம. ஆதலின, வெளளியின பிரதியக்ஷததனமை சிததிககும நிமித்தம அவிததியாவிருததி அங்கீகரிககப்பட்ட தெனக

(ஆ.) (கிளிஞ்சிலைபபார்தது இதுவெள்ளியெனனுமஞான முணடாகுமிடததது) இதுவெனனும விருததிககும இரஜத

மென்னும் விருத்திக்கும் தனித்தனியாக ஒவ்வொருவிஷயம் இருக்கும்போது குரு (மீமாம்சகர்களுள் ஒருசாராராகிய பிரபாகரர்) மதம்போன்று (க) விசிட்டஞானத்தை யங்கீகரிக்காத விடத்துப் பிராந்தி ஞானம் எங்ஙனம் சித்திக்கும்? 33.

54. (ச) நீ இவ்வணம் சங்கித்ததுசரியன்று இதுவென்னும் விருத்தியிலும் இரஜதமென்னும் விருத்தியிலும் பிரதிபிம்பித்துள்ள சைதன்னியம் ஒன்றே அது சத்தியவஸ்து மித்தியாவஸ்துவென்னும் தாதாத்மியத்தைக்கிரஹிப்பதால (கிளிஞ்சிலில் இதுவெள்ளியென்றுண்டாகும் ஞானம்) பிராந்தியென்று கிரஹிக்கப்பட் டிருக்கின்றது. ஆகையினுற்றான், சாக்ஷிஞானம் சத்தியவஸ்துவையும் மித்தியாவஸ்துவையும் விஷயமாகவுடைத்தாயிருக்கின்றது, இருக்கின்றமையின், அது பிரமாணமென்னும் நியம மின்றாம். ஆகையால், பிராசீனர்கள் (சாக்ஷிஞானத்தை) அப்பிரமாணமென்று கூறியதும் அங்கீகரிக்கத்தக்கதே.

---

(க) தருமதத்தினர்யாண்டுசசுக்தியில இரஜதபபிராந்தியுண்டாகின்றதோ ஆண்டு நேத்திரத்திறகுத தனவிருத்தி வாயிலாகச சுக்தியுடன் சம்பந்தமுண்டாய இதுவென்றுசுக்தியின சாமானியஞானம் உண்டாகின்றது, இரஜதத்தின் ஸ்மரணமு முண்டாகின்றது.

இஃதுஇரஜதம் எனபதில இரண்டு ஞானங்களுள அவை றன(1) இதுவென்னும் அம்சமோ சுக்தியின் சாமானியப்பிரத்தியக்ஷ ஞானமாம், (2) இரஜதமிருக்கின்ற தெனபதோ இரஜதத்தின் ஸ்மிருதிவடிவஞானமாம,

இவவாறறுல இது வெள்ளியென்பதில இரணடு ஞானங்களுள. ஆனால பிரமாதாவின பயதோஷமும பிரமாணத்தின இருளதோ

(ஆ) சித்தாந்தத்தில், தேசாந்தரத்தில் இருக்கின்ற இரஜதமும் அவித்தியா ஜன்னியமாயிருக்கிறது; அநித்தியஸ்தமாயுமிருக்கின்றது அங்ஙனமிருக்க, எங்ஙனம், சுக்திரூபியத்திற்கு (கிளிஞ்சிலில் தோன்றிய வெள்ளிக்கு) வியாவகாரிக வெள்ளியைப்பார்க்கிலும் வேற்றுமையுண்டாகும்? 34

55 (ச) நீ கூறியது உசிதமன்று உன்மதத்தில் எல்லாம் சத்தியம் அங்ஙனமிருப்பினும் சில க்ஷணிகம், சில ஸ்தாயி (ஸ்திரமாயிருப்பது) என்பதில் யாது காரணமோ அச்சுபாவ விசேஷமே எனக்குங்காரணமாம் அல்லது கடாதிகளின் அத்தியாசத்தில் அவித்தையே தோஷமாயிருப்பதால் அதுவே காரணமாம். சுக்தியின் இரஜத அத்தியாசத்திலோ அவித்தியா

---

தோஷமாகிய இவற்றின் பலத்தினால் "எனக்கு இரண்டு ஞானங்களுண்டாயிருக்கின்றன" வென்று புருஷனுக்கு விவேகமுண்டாகின்றதில்லை இதுவென்னும் அம்சமான சுக்தியின் சாமானியஞானம் யதார்த்தமாம் முன்பார்த்த இரஜதத்தின் ஸ்மரணவடிவ ஞானமும் யதார்த்தமாம் என்றாலும், எனக்கு இரண்டுஞானங்களுண்டாயின, அவற்றுள் ஒன்று சுக்தியின் சாமானியப்பிரத்தியக்ஷஞானம், மற்றொன்று இரஜதத்தின் ஸ்மிருதிவடிவஞானம் என்னும் விவேகமுண்டாகின்றதில்லை இவ்விரண்டுஞானங்களின் அவிவேகத்தைப் பிராந்தியென்பர் பிராந்தியுண்டாகுமிடங்களிலெல்லாம் அவர்கள் மதப்படி இவ்வாறறிதல்வேண்டும் இதில்

1 இது வென்னும் பிரத்தியக்ஷ ஞானம் சாமானியமென்றும்,
2 வெள்ளியென்னும் ஸ்மிருதி ஞானம் விசேஷணமென்றும்,
3, இஃது இரஜதமென்னும் ஞானம் விசிட்டமென்றும் அறிதல் வேண்டும்.

தோஷமேயன்றி நேத்திராதி தோஷங்களும் காரணமாம ஆகையால், ஆகந்துக (இடையேயுண்டான) தோஷ ஜன்னியமாயிருப்பதால அது பிராதிபாசிகமென்பதிற காரணமாம் ஆகையாலறான சொப்பனத்திற காணப்படுகின்றதோ, யானை முதலியனம ஆகந்துகமான நித்திராதி தோஷ ஜன்னியமாயிருப்பதால பிராதிபாசிகமாயிருக்கின்றன

(ஆ) சொப்பனஸ்தலத்தில் முன்னனுபவிக்கப்பட்ட ரதாதிகளின ஸ்மரணத்திலேயே வியவகாரம சித்திப்பதாயிருக்க, அணடு ரதாதிகள உண்டாகின்றனவென்று கற்பிப்பது கூடாது, ஏனெனின், (க) கௌரவதோஷம வருகின்றமையின. 35.

56 (ச) சொப்பனஸ்தலத்தில ரதாதிகளின ஸ்மரணத்தை மாத்திரம ஒப்புக்கொள்ளுமிடத்து ரதத்தைப்பார்க்கிறேன, பார்த்தேன என்றுணடாகும அநுபவத்திற்கு விரோதம வருகின்றமையாலும "பின்னர் ரதங்களையும, குதிரைகளையும, மார்க்கங்களையுஞ் சிருஷ்டிக்கின்றன" என்று ரதாதிகளின சிருஷ்டியைக்கூறும சுருதிக்கு விரோதம வருகின்றமையாலும அது (சொப்பன உலகம ஸம்ருதி வடிவமெனபது) அங்கீகரிக்கத்தக்கதன்று.

சுக்திரஜதம்போல சொப்பனத்திற காணப்பட்ட ரதாதி

---

(க). ஒரு வஸ்துவினாலேயே ஒரு காரியம் சித்திக்கக்கூடியதாயிருக்க, அதற்குப பலவஸ்துக்களை ஹேதுவாகக் கற்பித்தல மிகைபடக்கூறலென்னும கௌரவ தோஷமாம்

(தேர்முதலியவை)களும் பிராதிபாசிகங்களாம். எவ்வளவு காலம் அவைகளின் தோற்றம் ஏற்படுகின்றனவோ அவ்வளவு காலம் அவை நிகழுகின்றன.

(ஆ) சொப்பனத்தில் காணப்பட்ட ரதாதிகளுக்கு அதிஷ்டானமான தேசமும் காணப்படுகின்றது; அது சமீபத்திலிராமையின் அநிர்வசனீயமான பிராதிபாசிகதேசமென்றே அங்கீகரித்தல் வேண்டும். அப்போது ரதாதிகளின் அத்தியாசம் எவ்விடத்தினின்றும் உண்டாகின்றது? 36.

57. (ச) [சொப்பனத்தில் காணப்படும் தேசம் (இடம்) சொப்பனபதார்த்தங்களுள் ஒன்றாயிருக்க, அப்பதார்த்தங்களுண்டாவதற்குத்தேசம் யாதென்று வினவப்பட்டது] சொப்பன ரதாதிகளுக்குச் சுயம்பிரகாச சைதன்னியம் அதிஷ்டானமாயிருக்கின்றது; அங்ஙனமிருப்பதால், தோன்றுகின்ற ரதாதிகள் இருக்கின்றனவாய்த் தோன்றுகின்றன.

சத்ரூபமாய் விளங்குஞ் சைதன்னியமே அதிஷ்டானம் தேசவிசேஷமும் சைதன்னியத்தில் அத்யஸ்தமாயிருக்கின்றது. அதுவும் பிராதிபாசிகம் ரதாதிகளில் இந்திரியத்தினால் கிரகிக்கப்படுந்தன்மையும் பிராதிபாசிகமே, ஏனெனின், அப்பொழுது எல்லா விந்திரியங்களும் அடங்கியிருக்கின்றன.

நான் யானையென்று சொப்பனத்திற் றோற்றமுண்டாகட்டுமென்றொருவன் சங்கிப்பானேயாயின், அதற்குச் சமாதானம் முன்னரே (52-வது பாராவில்) சொல்லப்பட்டிருக்கிறது.

சொப்பனத்திற் காணப்படுங் கஜாதிகள சாக்ஷாத (நேரே) மாயையின் பரிணமமென்று சிலரும் அநதககரணததின வாயிலாக மாயையின பரிணமமென்று சிலருங் கூறுவர்

(ஆ) கஜாதிகள் சுதத சைதன்னியத்தினகண அத்தியஸ்த மெனறு கூறுமிடதது இபபோது (விழித்த காலததில) அதிஷ்டான சாக்ஷாத்காரமினமையின விழிததுககொணடகாலத்துஞ் சொபபன தரிசன கஜாதிகளிருக்கட்டுமே? 37.

58 (ச.) காரியத்தின நாசம இருவகைததாம

1. ஒன்று உபாதான காரணத்தோடுகூடவே நசிதது விடுவது.

ii. மற்றொனறு உபாதான காரணமிருக்கும்போதே நசித்துவிடுவது.

i. முனைததறகுப பாதமெனறும,

ii. பினைதறகு நிவிர்த்தி யெனறு பெயராம.

i பாததறகுககாரணம அதிஷ்டானத்தின சாக்ஷாத காரம. அந்தச்சாக்ஷாத்கார (பிரத்தியக்ஷ)மின்றி உபாதான காரணமான அவித்தை நிவிர்த்தியாவதினறு.

ii. இரணடாவதற (நிவிர்த்திக)குககாரணம விரோதி விருத்தியுண்டாவதாற தோஷநிவிர்த்தி யுணடாகினறது (அதுவே காரணம).

ஆகையால், எணடுப பிரஹமசாக்ஷாத்காரமின்மையின் சொபபனத்திற்றோனறிய பிரபஞ்சமானது பாதிக்கபபடுகினறதினறு; உலக்கையடியால் கடாதிகள உடைவதுபோலும.

அல்லது விரோதியான வேறு ஞானமுண்டாவதால் சொப்பனத்திற்குக் காரணமான நித்திரை முதலிய தோஷங்கள் நாசத்தையடைகின்றன, அடைவதால், கஜாதிகள் நிவிர்த்தியடைவதில் விரோதம் யாது?

இங்ஙனம் காரியநாசம் (க) இருவகைத்தென்று சொல்லியதாலும் சுக்தியில் தோன்றிய வெள்ளி சுக்தியவச்சின்ன சைதன்யத்திலிருக்கின்ற (உ) தூலாவித்தையின் காரியமென்று சொல்லுமிடத்து இது சுக்தியென்னும் ஞானத்தினால் அதனஞ்ஞானத்தோடுகூட ரஜதத்திற்குப் பாதமுண்டாகின்றது (ங) மூலாவித்தையின் காரியமென்று சொல்லுமிடத்து, மூலாவித்தையோ பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினாலேயே நிவிர்த்தியாகின்றமையாலும் சுக்தி ஞானத்தினால் நிவிர்த்தியாகாமையாலும் சுக்திஞானத்தினால் நிவிர்த்தி மாத்திரமேயன்றிப் பாதமுண்டாவதின்று; உலக்கையினடியினால் கடத்திற்கு நாசமுண்டாவதுபோலும்.

---

(க) (1) காரியமான கடம் தன் காரணமான மண்ணுடன் கூடத் தனக்கென சொரூபமொன்றில்லாததென்று நிச்சயிப்பது பாதம்.

(2) காரியமான கடம் தன் காரணமான மண்ணில் லயத்தை யடைவது நிவிர்த்தி.

இவ்விரண்டனுள் முன்னது அத்தியந்தநிவிர்த்தியென்றும் பின்னது லயநிவிர்த்தியென்றும் சொல்லப்படும்.

1. காரியமான ஆடை தன் காரணமான நூலுடன் நாசத்தையடைவது அத்தியந்தநிவிர்த்திக்கு உதாரணமாம்

(2) இரஜ்ஜு முதலிய உபஹித (கயிறுமுதலியவற்றை உபாதி

(ஆ) சுக்தியில இரஜதந்தோன்றுஞ் சமயத்தில் (அவ் விரஜதத்திற்கு) பிராதிபாசிக சத்தை அங்கீகரித்துள்ளபடியால் இஃதிரஜதமன்றென்று திரைகாலிக நிஷேதஞானம (முக்கால த்து மின்றென்னு முணர்ச்சி) வாராமற் போய்விடும ஆனல் இப்போது கடம கறுப்பன்று என்பதுபோல இப்போது இது வெள்ளியன்றென்னும ஞானமுண்டாகின்றது 38.

59 (ச) இவ்விடத்து, இரஜதத்துவாவச்சின்னத்தைப் பிரதியோகியாக (எதிர் மறையாக)வுடைய அபாவம நிஷேத ஞானத்தின விஷயமன்று. ஆனல், லௌகிக பாரமார்த்திகத்துவாவச்சின்ன பிராதிபாசிக இரஜதத்தைப்பிரதியோகியாகவுடைய அபாவமநிஷேத ஞானத்திற்கு விஷயமாம; (ச) வியதிகரண தர்மாவச்சின்னத்தைப் பிரதியோகியாகவுடைய அபாவத்தை அங்கீகரித்திருக்கின்றமையின.

(ஆ) பிராதிபாசிக இரஜதத்தில பாரமார்த்திகத்தன்மை அறியப்பட்டதா? அறியப்படாததா? அறியப்படாதவிடத்து எல்லாப்பிரதியோகியின ஞானமுமிராமையின அபாவப

---

யாகவுடைய)சைதன்னியத்தை மறைக்கும அஞ்ஞானம தூலாஞ்ஞானமெனப்படும. அவஸ்தாஞ்ஞானமெனபதுமிதுவே.

(ந) சுத்த சைதன்னியத்தை (பிரஹ்மத்தை) மறைக்கும அஞ்ஞானம மூலாஞ்ஞானமெனப்படும. காரண அஞ்ஞானமெனபதுவும் இதுவே.

(ச) வியதிகரண தாமாவச்சின்னம—வேறிடத்திலுள்ள தர்மத்தை யவச்சேதகமாகவுடையது.

பிரத்தியக்ஷமுண்டாகமாட்டாது. அந்தப்பாரமார்த்திகத்தன்மை அறியப்பட்டதென்று சொல்லுமிடத்து அபரோக்ஷ ஞானம் அக்காலத்திலிருக்கின்ற விஷயசத்தையோடு கூடியதென்னும் நியமமிருப்பதால இரஜதத்திலிருக்கின்ற பாரமார்த்திகத்தன்மையும் இரஜதம்போல் அநிர்வசநீய மாகவுண்டாகின்றதென் ஒப்புக்கொள்ளல வேண்டும். ஆகையினால், அந்தப் பாரமார்த்திகத்தன்மையுடன் கூடிய இரஜதமிருக்கும் போது பாரமார்த்திகத்தன்மையை அவச்சேதகமாகவுடைய பிரதியோகியோடு கூடிய அபாவம் அதி (சுகதியி) லெப்படியிருக்கும்? 39.

60. (அ) அதிஷ்டானத்திலுள்ள பாரமார்த்திகத்தன்மை இரஜதத்திற்குமின்றேயன்றி யதிலுண்டாவதாக அங்கீகரிப்பதின்று. ஆகையினால, எவ்விடத்தில ஆரோப்பியமானது சமீபத்திலின்றோ, அவ்விடத்திற்றான பிராதிபாசிகவஸ்து உண்டாவதாக அங்கீகரிக்கப்படுகின்றது. இங்ஙனமங்கீகரிப்பதினாலேயே, ஜபாகுசுமம (செவ்வரத்தம்பூ)இந்திரியசம்பந்த முடைத்தாயிருப்பதால அதனசிகப்பு ஸ்படிகத்தில் தோற்றுகிறபடியால ஸ்படிகத்தில அநிர்வசனீயமானலௌகித்தியம் (சிகப்பு) உண்டாவதின்று.

(ஆ) இங்ஙனமங்கீகரிக்கின, எவ்விடத்தில் ஜபாகுசமம் வேறுதிரவியத்தினால மறைபட்டிருப்பதால இந்திரியசம்பந்த மற்றதாக விருக்கின்றதோ அவ்விடத்தில லௌகித்தியம் தோன்றுகின்றபடியினால் பிராதிபாசிகமான லௌகித்தியம் ஒப்புக்கொள்ளலவேண்டும் 40.

61. (ச.) அங்ஙனமொப்புக் கொள்ளுதல் இஷ்டந்தான். இங்ஙனமே பிரத்தியக்ஷமான வேறுபிராந்திகளிலும் பிரத்தியக்ஷசாமானிய லக்ஷணமிருக்கின்றதென்றும் யதார்த்தப்பிரத்தியக்ஷலக்ஷணமின்றென்றும் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

மேற்கூறிய பிரத்தியக்ஷம்.—

i இந்திரிய ஜன்னியம் ii. இந்திரிய அஜன்னியமென்றிருவகைத்தாம்

அவற்றுள், 1. சுகாதிப்பிரத்தியக்ஷம் இந்திரியத்தாலுண்டாகாதது. சுகாதிகள் மனத்தினாலுண்டானாலும் மனது இந்திரியமன்றென்று முன்னரே நிராகரிக்கப்பட்டது

ii. கிராணம், இரசனை, சக்ஷுசு, சுரோத்திரம், துவக்கு என இந்திரியங்கள் ஐந்தாம். இவ்விந்திரியங்கள் தத்தமது விஷயங்களுடன் சம்பந்தப்பட்டே பிரத்தியக்ஷஞானத்தையுண்டுபண்ணுகின்றன

அவற்றுள் —கிராணம், இரசனை, துவக்கு என்னுமிம்மூன்றிந்திரியங்களும் தத்தம ஸ்தானத்திலிருந்துகொண்டே (முறையே) கந்தப்பிரத்தியக்ஷம், இரசப்பிரத்தியக்ஷம், பரிசப்பிரத்தியக்ஷங்களை யுண்டுபண்ணுகின்றன.

சக்ஷுசும், சுரோத்திரமும் சுயமேவ (தாமாகவே) விஷயதேசத்திற்குச்சென்று தமதுவிஷயங்களைக் கிரகிக்கின்றன.

சுரோத்திரேந்திரியமும், சக்ஷுராதிகளைப்போன்று பரிச்சின்ன (கண்ட)மாயிருப்பதால் பேரிமுதலிய வாத்தியதேசங்களில் (அதற்குக்)கமனம் (போதல்) சம்பவிக்கும். ஆகையி

றான, பேரிசப்தம என்றும் கேட்கப்பட்டதென்னு மநுபவமிருக்கின்றது.

(௧.) வீசிதரங்க நியாயத்தினால் சப்தம் கர்ணதேசத்தையடைகின்றதெனனும நையாயிகர்கள் கொள்கை அங்கீகரிக்கத்தக்கதன்றும், ஏனெனின், அநேகசப்தங்கட்கு உற்பத்தி கற்பிக்கவேண்டியதா யிருத்தலின அது கௌரவமாம.

மேலும், பேரிசப்தமானது என்றும் கேட்கப்பட்டதென னும பிரத்தியக்ஷத்தையும பிராந்தியாகக் கற்பிக்கவேண்டியிருத்தலின அதுவும கௌரவமாம

ஆகையால மேற்கூறியவாறு சுரோத்திரேந்திரியம விஷய தேசத்திற்சென்று விஷயத்தைக்கிரஹிக்கின்றதென்று கூறுவதே தகுதியாம. ஆகையினால, பிரத்தியக்ஷம இங்கு விரித்துரைக்கப்பட்டது.

பிரத்தியக்ஷ பரிச்சேதம்
முற்றிற்று.

---

(௧). விசிதரங்கம் — ஓரலையினின்றும மற்றோரலையுண்டாதல, நியாயம — திருஷ்டாந்தம சமுத்திரஜலத்தில ஓரலையினுண்பபாகத்தில மற்றோரலை யெழும்புகின்றது. அவ்வலையினுண்பபாகத்தினின்று மற்றோரலை யெழும்புகின்றது இங்ஙனமே ஒரே கிழக்கு முதலிய திக்கில அவ்வலைகளது பரமபரை (தொடர்ச்சி)யின பிரவாகம போய்க்கொண்டேயிருக்கும அதுபோல, முதற்சத்தத்தினின்றும் இரண்டாவதும, இரண்டாவதினின்றும மூன்றாவதுமாக, முன்முன சத்தங்களினின்றும பின்பின சத்தங்களினுற்பத்தி ஒரே கிழக்கு முதலிய திக்கிலுண்டாகுமெனக.

வீசிதரங்க நியாயமேயன்றிக கதம்பகோளகநியாயமும் நையாயிகர் அங்கீகரித்திருக்கின்றனர். அதுவருமாறு:— எங்ஙனம் கதம்ப

# அநுமான பரிச்சேதம்.

## அநுமானப்பிரமாணம்.

62 பிரத்தியக்ஷ பிரமாணம் நிரூபித்தபின்னர் அநுமானப்பிரமாணம் (க) நிரூபிக்கப்படுகின்றது.

அநுமிதியின்கரணம் அநுமானம் அநுமிதியும் வியாப்தி ஞானத்தன்மையினால் வியாப்திஞான ஜன்யமாம். (உ) வியாப்திஞானத்தின் அநுவியவசாய முதலிய ஞானங்கள்

---

கோளத்தின் நடுவினின்று எல்லாத்திக்குக்களையும் நோக்கி இந்தச் சப்தங்கள் எழுகின்றனவோ அங்ஙனமே எந்த நடுவிடத்தில் முதற்சப்தம் முண்டாகின்றதோ அதினின்றும் கிழக்கு முதலிய பத்துத் திக்குகளிலும் பத்துச் சத்தங்களுண்டாய அப்பத்துச் சத்தங்களினின்றும் வேறு பத்துச் சத்தங்களுண்டாம் இவ்வாறு பத்துத் திக்குகளிலும் முன் முன் சத்தங்களினின்றும் பின் பின் சத்தங்களுண்டாகின்றன என்பது

(க) நிரூபித்தலாவது - இதுலக்ஷணம், இதுபிரமாணமென்னும் ஞானத்திற்கு அநுகூலமான சப்தப்பிரயோகம்

(உ) அநுவியவசாய ஞானம் வியாப்தி ஞானத்தினாலுண்டானாலும், வியாப்தி ஞானம் விஷயமாயிருந்துகொண்டு அநுவியவசாய ஞானத்திற்குக்காரணமாயிருக்கின்றதேயன்றி வியாப்திஞானத்தன்மையினால் காரணமாவதின்று.

திரிபுடிகோசர ஞானம் அநுவியவசாயமெனப்படும், அல்லது ஞானத்தின் ஞானம் அநுவியவசாயமெனப்படும், அஃதாவது வியவசாய ஞானத்தை அநுசரித்த ஞானமென்பது.

இது கடமென்னும் ஞானம் வியவசாய ஞானமாம்.

கடத்தை நானறிந்தேனென்னும் ஞானம் அநுவியவசாய ஞானமாம்.

வியாபதிஞானததனமையால (௩) வியாபதிஞான ஜன்னியமன்று, ஆகையால் அவை அநுமிதியாகமாட்டா.

அநுமிதியின் கரணமோ வியாப்தி ஞானம்; அதன் சமஸ்காரம இடையிற்றோன்றிய வியாபாரம; (௪) மூனறாவதாய இலிஙகபராமரிசம் (குறியாராயசசி) அநுமிதியின கரணமன்று. அநதப்பராமரிசததிற்கு அநுமிதியிற காரணமாயிருபபதேசிததிககாமையின் அசாதாரண காரணத்துவமாகிய கரணததனமையானதுவெகு தூரததிற தளளபபடடது.

63. அநுமிதியானது சமஸ்காரத்தினுலுணடாகின்றதென்று சொலலுமிடதது அதறகு ஸமிருதிததனமையேறபடுமெனறு ஆசஙகிபபையாயின (அபபோது ஸமிருதிககு லக்ஷணம வேறுவகையாகக கூறுகினறோம).

ஸமிருதியின பிராகபாவததி (முனனினமையி)னுலுணடாகினறது அலலது சமஸகாரததினுல மாத்திரமுணடாகினறதெனு ஸ்மிருதியின காரணததைக கறபிபபதால சமஸ்காரததுவம்ச (நாச)ததிறகுச் சாதாரணமான சமஸ்கார ஜனனியததுவமானது ஏணடபபிரயோசனமாம.

---

(௩) யாணடுப புகை ஆணடுத தீயென நியதமான உடனிகழசசி ஞானம வியாப்தி ஞானமெனபபடும

(௪). "அடுககளை முதலிய திருஷடாநததில வனனிககும தூமததிறகும பெருமபாலும உடனிகழசசி காணடலால வியாபதியததனமையாலுணடாகும தூம ஞானம முதலாவது. அதன பின பருவதமுதலியவறறில தூமததைக கணடு வியாபபியததனமையான அதை நினைததல இரணடாவது, அதன பின ஆணடே வியாபபியததனமையான தூமததின பராமரிசம 'வனனி வியாப்பிய தூமமுடையது இது' எனனும வடிவினதாயுணடாகினறது. இவவாறான அது (இலிஙகபராமரிசம) மூன்றாவதாமெனல அறிவிக்கபபடடது." என்று தாககௌமுதி கூறுகின்றது

(ஆ.) எவ்வதிகரண (இட)த்தில வியாபதிஸ்மரணத்தி (நினைப்பி)னுல் அநுமிதி யுணடாகினறதோ அவவதிகரணத தில் எவ்வனம சம்ஸ்காரம அநுமிதியினகாரணமாகும? 41.

64 (ச) வியாப்திஸ்மரணததினல அநுமிதியுணடாகின்ற விடத்திலும் வியாபதியின சமஸகாரமே அநுமிதிககுக காரண மாயிருக்கினறது. ஸ்மரணமுண்டாயின சமஸகாரம நாச மடைகினற தெனனும நியமமுமினறு, (ஏனெனின) ஸ்மரண மானது தொடர்ச்சியாயுண்டாவதால் (அதறகுக காரணமான சமஸகார மிருககினறதென்று தெரியவருகினறது). ஆனல அனுறபுத்த (பிரகாசத்தை யடையாமலிருககினற) சமஸ்கா ரததினுலும அநுமிதியுணடாகடடுமே யெனறு மாக்ஷேபத திறகு அந்தச சமஸ்காரததின பிரகாசமும சககாரிகாரணமா மெனபது சமாதானம்

ஆகையினுல இது (பர்வதம) தூமததுடன் கூடினதென னும் பக்ஷதரும ஞானததினல தூமமானது வனனி வியாபதி யோடு கூடியதெனனும் அநுபவததினுலுணடான சமஸ்காரத் தின உதபோதம (வெளிபடுதல) இருக்குமபோது வனனி யோடு கூடியது இஃதெனறு அநுமிதி யுணடாகினறது

இடையில வியாபதி ஸமரணத்தையாவது, அந்த வியாபதி ஸ ரணததினுலுணடான வனனி வியாபதியோடு கூடினது தூமட இந்தத தூமததோடு கூடியது பர்வதம எனனும விசேஷ ரததுடன கூடியஞானததையாவது ஏதுவாகக கற பிபபதில் (ஏனெனின) கௌரவம வருகினறபடியாலும பிரமாணமிர யாலுமெனக.

அவற்றுள், வியாப்திஞானம் வன்னிஞான அம்சத்தில் காரணமேயன்றிப் பர்வதஞானத்திற் காரணமன்று.

பர்வதம் வன்னியோடு கூடியதென்னும் ஞானத்திற்கு, வன்னியம்சத்தில் அநுமிதித்தன்மையேயன்றிப் பர்வதாம்சத்தி லன்று அந்தப்பர்வதாம்சத்தில் ஞானம் பிரத்தியக்ஷமென்று யுக்தியினால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

வியாப்தியும் அநேகசாதனங்களின் ஆசிரயத்தை யாசிர யித்துக்கொண்டிருக்கிறசாத்தியத்தின் சமாநாதிகரணியம் (ஒரு நிலைக்களத்திருப்பது) அந்த வியாப்தியும் வியபிசாரம் (பிற ழ்ச்சி) காணாதிருக்கும்போது (க) சகசாரத்தைக் கண்டதி னால் கிரகிக்கப்படுகின்றது அந்தச்சகசாரதரிசனமும் பல முறைக்காண்டல் ஒருமுறைக்காண்டலென்னும் விசேஷத்தை ஆதரிக்கவேண்டியதின்று, (ஏனெனின்) சகசாரதரிசனமே யன்றி வேறென்றும் காரணமாகின்றதின்று

-/0 65 அந்த அநுமானம் அந்வயி ஒன்றேயாம், கேவலாந் வயி அங்கீகரிப்பதில்லை

அந்வயி அநுமானம்.

எல்லாத்தர்மங்களும் நம்முடையமதத்தில் பிரஹ்மத்தி லிருக்கின்ற அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகி (எதிர் மறை) யாகையால் அத்தியந்தாபாவ அப்பிரதியோகியான சாத்தியத்தையுடைய தன்மையான கேவலாந்வயித்துவமசித் திப்பதில்லை.

---

(க) சகசாரம்-ஓரிடத்திற்சேர்ந்திருப்பது, அஃது, ஏது வும் (புகையும்) சாத்தியமும் (நெருப்பும்) ஓரிடத்திருத்தல்.

அநுமானத்தைக் கேவலவியதிரேகியாயு மங்கீகரிப்பதில்லை. சாதனத்தினால் சாத்தியத்தோடு கூடியதென்னும் அநுமிதி ஞானத்தில் சாத்தியாபாவமானது சாதனாபாவத்தினால் வியாப்பியமென்னும் வியாப்திஞான முபயோகப்படுவதில்லை; ஆனால் தூமாதிகளில் அந்வயவியாப்தி தெரிந்துகொள்ளாதவனுக்கு வியதிரேகவியாப்தி ஞானத்தினால் எங்ஙனம் அநுமிதியுண்டாகுமென்னுஞ் சங்கைக்கு அருத்தாபத்தி ப்ரமாணத்தினால் (வியாப்தி ஞானம்) உண்டாகின்றதென் றுரைக்கின்றேம். ஆகையினால்தான் அந்வயவியதிரேகியென்றும் அநுமானத்தை யங்கீகரிப்பதில்லை, (ஏனெனின்) வியதிரேகவியாப்தி ஞானம் அநுமிதியைக் குறித்துக் காரணமாகின்மையின்

66 அந்த அநுமானம் சுவார்த்தம் பரார்த்தமென இருவகைத்து. அவற்றுள் சுவார்த்த (தன்பொருட்ட)னுமானமோ சொல்லப்பட்டது.

பரார்த்த (பிறன்பொருட்ட)னுமானமோ நியாயத்தினால் சாத்தியம். நியாயமாவது அவயவங்களின் சமுதாயம்.

அவயவங்களோ பிரதிஞ்ஞை, ஹேது, உதாரண மென்பன. இம்மூன்றுமே பிரசித்தமாம்,

அல்லது உதாரணம், உபநயம், நிகமனம் என்னு மூன்றேதவிர ஐந்தென்றல் பொருந்தாது.

மூன்றவயவங்களாலேயே வியாப்திஞானம், பக்ஷதருமத்தன்மை ஞானம் சம்பவிப்பதால் அதிகமாக இரண்டவயவங்களையொப்புக்கொள்ளுதல் வியர்த்தமாம்.

இங்ஙனம் அநுமானம் நிரூபிக்கப்பட்டது.

### சர்வப்பிரபஞ்சமும் மித்தை

67. இந்த அநுமானத்தினால் பிரஹ்மபின்ன சகலப் பிரபஞ்சமும் மித்தையென்று சித்திக்கின்றது. அஃதெங்ஙனம்?

(பிரதிஞ்ஞை) பிரஹ்ம பின்னமெல்லாம் மித்தை, (ஹேது) பிரஹ்மபின்னமாகையால், (திருஷ்டாந்தம்) யாது யாதுபிரஹ்ம பின்னமாயிருக்கின்றதோ அதுவது மித்தை, சுத்திரூபியம் (கிளிஞ்சில்வெள்ளி) போல

இதில் திருஷ்டாந்தம், (மித்தையென்று) சித்திக்கவில்லை யென்று சொல்லுதல் கூடாது அது மித்தையென்று யுக்தி யுடன் சொல்லப்பட்டிருக்கின்றது

இந்த ஹேது அப்பிரயோஜக (ஹேதுவிருக்கட்டும் சாத்தியம் வேண்டா)மென்றல் பொருந்தாது, சுத்திரூபியம் ரஜ்ஜுசர்ப்பம் இவை மித்தையென்று சொல்வதில் பிரஹ்ம பின்னத்துவம், இலாகவமா (எளிதிற்கொள்ளா) கிய அநுகூல தர்க்கமிருப்பதால், பிரயோஜகமாயிருக்கின்றது (ஆதலால திருஷ்டாந்தம் சித்திக்கவில்லையென்றுகூறுதல் பொருந்தாது).

மித்தியாத்துவமும், தனக்கு ஆசிரயமாக அபிமானிக்கப் பட்ட எவ்வளவு பதார்த்தங்களுண்டோ அவற்றிலுள்ள அத்தியந்தாபாவத்திற் (முற்றுமின்மைக்)குப் பிரதியோகியாயிருக் குந்தன்மை.

வஸ்துவிற்கு (க) சுவாசிரயம் அப்பிரசித்தமாகையினால் அசம்பவமெனனும் தோஷம் சித்திக்கும் அதன்பொருட்டு

(க) சுவாசிரயம்—எதற்குமித்தியாத்துவம் சொல்லுகின்றோமோ அச்சசு சுவ (தான்) என்னுமபதத்தால் கிரகித்துக்கொள்ளல் வேண்டும்.

'அபிமானிக்கப்பட்ட ஆசிரய' மென்று சொல்லப்பட்டது. அனபிலக்ஷித சித்தியெனும் (இச்சிக்காதபதார்த்தம சித்தித்தலாகிய) அர்த்தாந்தரம (வேறர்த்தம) வாராதிருக்கும் பொருட்டு 'எவ்வளவு' எனனும பதம கூறப்பட்டது

"சகல பாவபதார்த்தங்களுக்கும தமக்காசிரயமாக அங்கீகரிக்கப்பட்ட பதார்த்தங்களிலிருக்கும அபாவத்தைக்குறித்துப் பிரதியோகியாயிருக்குந் தன்மை மித்தையாம".

(என்றிவ்வாறு சித்சுகாச்சாரியரால சொல்லப்பட்டது).

அல்லது—(பிரதிஞ்ஞை) இப்படம இந்தந்துவிலிருக்கும் அத்தியந்தா பாவத்திறகுப பிரதியோகி,

(ஹேது)—படத்தன்மையிருப்பதால்,

(திருஷ்டாந்தம)-வேறுபடம போல்

எனனும அநுமானமும மித்தையென்று கூறுவதிற பிரமாணமாம

"அவயவிகள தமமுடைய அவயவங்களிலுள்ள அத்தியந்தாபாவத்திற்குப பிரதியோகிகள, அவயவித்தன்மையிருப்பதால, இதர அவயவிபோலும, குணிமுதலியவைகளிடத்திலும குணாதிகளில்லை" (க)

என்று பெரியோர்கள சொல்லியிருக்கின்றனர்

---

(க). ரூபம ரூபியிலுள்ள அத்தியந்தா பாவத்திறகுப் பிரதியோகி, குணத்தன்மை யிருப்பதால, சத்தம்போல, எனனும இவ்வநுமான மிங்கறியத்தக்கதாம.

(ஆ) அநுமானத்தினலே கடாதிகளை மித்தையென்று சொல்லுமிடத்துச் சத்தாயிருக்கிறது கடம் என்னும் பிரத்தியக்ஷத்தினலே அநுமானத்திற்குப் பாதமுண்டாகும். 42.

68. (ச) அதிஷ்டானமாயிருக்கின்ற பிரஹ்மத்தின்சத்தை அந்தப்பிரத்தியக்ஷத்தில் விஷயமாயிருக்கின்றமையின் கடாதிகளுக்கு (மேற் கூறிய பிரத்தியக்ஷத்தால்) சத்தியத்துவம் சித்திக்கவில்லை.

(ஆ). ரூபமற்ற பிரஹ்மம் எங்ஙனம் சாக்ஷாஷ ஞானத்திற்கு விஷயமாகும்? 43.

69 (ச) ரூபத்திற்கு வேறு ரூபமில்லாவிடினும் அது பிரத்தியக்ஷமாகின்றது (அது போல பிரஹ்மசத்தையும் பிரத்தியக்ஷமாதல் அமையும்)

(ஆ). ரூபமற்ற திரவியம் சக்ஷுக்கு விஷயமாக மாட்டாதென்பது நியமமாம் (ரூபமானது குணமாகையால் அது பிரத்தியக்ஷமாகக்கூடும்). 44

70 (ச) என்னுடைய (வேதாந்த சித்தாந்த) மதத்தில் பிரஹ்மம் திரவிய மென்று சித்திப்பதில்லை

i குணத்திற்கு ஆசிரயமா யிருக்கும் தன்மையாவது, சமவாயிகாரணமாயிருக்குந் தன்மையாவது, திரவியத் தன்மை யென்பது உன்னுடைய கொள்கை இவ்விரண்டு தர்மங்களும் பிரஹ்மத்திற்குச்சித்திப்பதில்லை பிரஹ்மம் நிர்க்குணமாயிருப்பதால் குணத்திற்கு ஆசிரயமாயிருக்குந் தன்மை சித்திப்பதில்லை; சமவாயம் சித்திக்காமையால் சமவாயிகாரணத் தன்மையும் சித்திப்பதில்லை

ii அல்லது பிரஹ்மத்திற்கு திரவியத்துவமிருக்கட்டும். ஆயினும் ரூபமற்றகாலம் சாக்ஷுஷாதி ஞானத்திற்கு விஷயமாயிருப்பதுபோல இந்தப்பிரஹ்மசத்தையும் விஷயமாயிருப்பதில் விரோதமில்லை

iii அல்லது, பாரமார்த்திகம், வியாவகாரிகம், பிராதிபாசிகம் எனச் சத்தை மூன்றுவகைத்தாம்.

(1.) பிரஹ்மத்தின் சத்தை பாரமார்த்திகமாம்.

(2) ஆகாசாதிகளின் சத்தை வியாவகாரிகமாம்.

(3) சுக்திரஜதாதிகளின் சத்தை பிராதிபாசிகமாம்.

ஆகவே கடம் சத்தையென்னும் பிரத்தியக்ஷம் வியாவகாரிக சத்தையைக்கிரகிப்பதால் வியாவகாரிகப் பிரமாணமாயிருக்கின்றது.

இந்தப்பக்ஷத்தில் பிரஹ்மத்தினிடம் கடாதிகளில்லையென்னும் நிஷேதம் சொரூபத்தாலேற்படவில்லை ஆனால் பாரமார்த்திகமாக இல்லை, ஆதலால் விரோதமில்லை

இந்தப்பக்ஷத்திலும் மித்தியா லக்ஷணத்தில் 'பாரமார்த்திகத்துவாவச்சின்ன பிரதியோகியோடுகூடினது' என்று அத்தியந்தாபாவத்திற்கு விசேஷணங் கொடுத்தல் வேண்டும்.

மித்தையென்பதில் இந்த அநுமானம் பிரமாணமென்பது சித்தித்தது

அநுமான பரிச்சேதம்

முற்றிற்று.

உ

# உபமான பரிச்சேதம்.

## உபமானப் பிரமாணம்

71 அநுமானம் நிரூபித்த பின்னர் உபமானம் நிரூபிக்கப்படுகின்றது. சாதிருசிய (ஒப்புமை) பிரமையின் காரணம் உபமானம். எங்ஙனம்?

கோ (ஆ) வின் பிண்டத்தைப்பற்றிய ஓர் நகரவாசி காட்டிற்குச் சென்று கவயம் (காட்டுப்பசு) எனும் மிருகத்தைப் பார்த்து இப்பிண்டம் கோவிற்குச் சாதிருசமாக விருக்கின்றதென்று முதலில் ஞானமுண்டாகின்றது. பிறகு இந்தப் பிண்டத்திற்குச் சமானமாக எனது கோவிருக்கின்றதென்னும் நிச்சயமுண்டாகின்றது.

அவற்றுள் (க) அந்வய வியதிரேகங் (உடன்பாடெதிர்மறை)களால் கவயத்திலுள்ள (உ) கோவின் சாதிருசிய

---

(க) கோவின் சாதிருசிய ஞானமிருந்தால் கவயத்தின் சாதிருசிய ஞானமுண்டாமென்பது அன்வயம்.

கோவின் சாதிருசிய ஞானமில்லாவிடின் கவயத்தின் சாதிருசியஞானமுண்டாகாதென்பது வியதிரேகம்.

(உ) கோவின் சாதிருசியம் கவயத்திலிருக்கின்றதென்னுமிடத்துக் 'கோ' பிரதியோகி, கவயம்' அநுயோகி.

இந்திரிய சம்பந்தத்தில் சாதிருசியஞானம் உவமானமாம். இந்திரியத்தின் மறைபட்டதில் சாதிருசியஞானம் உபமிதியாம். இந்திரியசம்பந்தமுள்ள கவயத்தில் கோசாதிருசியஞானம்

ஞானம் கரணம் (உபமானம்), கோவினத்துள்ள கவயசாதிரு சியஞானம் பலம் (உபமிதி). இந்தப்பல ஞானம் பிரத்தியக்ஷத் தாலுண்டாகாது. கோவின பிண்டத்திற்கு அந்தக (காட்டு

---

உவமானப்பிரமாணமாம். இந்திரியசம்பந்தமின்றிய கோவில கவயத் தின சாதிருசியஞானம் உபமிதியாம்

பேதசகித சமானதருமம் (ஒத்தவியல்பு) சாதிருசியமெனப் படும் கோவினபேதத்தோடு கூடிய சமான அவயவம் கவயத்திலிரு க்கின்றது அதுவே கோவின சாதிருசியமாம்

கோவின சமான தருமம் கோவிலுளது, பேதமில்லை கோவின பேதம் குதிரையிலுளது, சமான தருமமில்லை, ஆதலால் சாதிருசிய மன்று

சாதிருசிய ஞானத்தாலுவமிதியுண்டாவதுபோல விதாமஞான த்தாலும் உவமிதியுண்டாகின்றது.

ஒருவன் காண்டாமிருகத்தின் வாச்சியத்தையறியாது ஆரணிய புருஷன்வாயிலாக ஒட்டையின் விதாமமுடையதாய்க் கொம்போடு கூடிய மூக்கினையுடையது காண்டாமிருகமெனனும் பதத்திற்கு வாச் சியமாம் எனனும் வாக்கியத்தைக்கேட்டு வாக்கியார்த்தானுபவத்திற் குப்பின்னர் வனத்திற் சென்று ஒட்டையின் விதாமமான காண்டா மிருகத்தின் பிரத்தியக்ஷத்தினால் முற்கூறிய பிண்டத்திற் காண்டா மிருகபதத்தின் வாச்சியத்தன்மையையறிகின்றான் ஆண்டுக்கட்க மிருக மெனனும் காண்டாமிருகத்தில் ஒட்டையின் வைதாமிய (விருத்த தாம) ஞானத்தால் ஒட்டையினிடத்துக்காண்டாமிருகத்தின் வைதாமி யஞானமுண்டாகின்றது ஒட்டையினிடத்துக் காண்டாமிருகத்தின் வைதாமியஞானம் உவமிதியாம். காண்டாமிருகத்தில் ஒட்டையின் வைதாமியஞானம் உவமானமாம்.

காண்டாமிருகத்தில் ஒட்டையின் விருத்ததருமம்குறுகியகழுத்து முதலியனவாம்.

லுள்ள) காலத்தில் இந்திரிய சம்பந்தமுண்டாகவில்லை, அநுமானத்தினாலும் கவயசாதிருசியஞான முண்டாகின்றதில்லை கவயத்திலுள்ள கோவின் சாதிருசியமானது அநுமிதிக்குக் காரணமாகிறதில்லை

(ஆ) எனது கோ இந்தக்கவய பிண்டத்திற்குச்சமானமாயிருக்கிறது, இதனிடத்தி (கவயபிண்டத்தி) லிருக்கிற சாதிருசியத்திற்குக் (கோ) பிரதியோகியாயிருப்பதால்,

எது (கோ) எது (கவயத்தி)னிடத்திலிருக்கிற சாதிருசியத்திற்குப் பிரதியோகியாயிருக்கிறதோ அஃது அதற்குச்சமானமாயிருக்கின்றது எங்ஙனம்

மயித்திரனிடத்திலுள்ள சாதிருசியத்திற்குப் பிரதியோகி சைத்திரன்; அவன் மைத்திரனுக்குச் சாதிருசியமாயிருத்தலால், என்னும் அநுமானத்தினால் அந்தச்சாதிருசியஞான முண்டாகட்டுமே?. 45.

72 (ச) இத்தகைய அநுமான முண்டாகாமையாலும், இதற்குச்சமானமாயெனது கோவிருக்கிறதென்னும் ஞானம் அநுபவ சித்தமாயிருப்பதாலும் நான் உவமானம் பண்ணுகிறேன் (நான் உபமிதி ஞானத்துடன் கூடினவன்) என்னும் அநுவியவசாய (பின்னிகழ்) ஞானமிருப்பதாலும் அநுமானத்தில் உவமானம் அடங்காது உவமானம் வேறுபிரமாணமே.

**உபமான பரிச்சேதம்**

முற்றிற்று

---

# ஆகம பரிச்சேதம்.

## சப்தப் பிரமாணம்

73 (க) எந்த வாக்கியத்தின் தாற்பரியத்திற்கு விஷய மான பதார்த்தத்தின் சம்பந்தம் பிரமாணாந்தர(வேறுபிரமாண) த்தால் பாதிக்கப்படவில்லையோ அந்த வாக்கியம் பிரமாண மாம்.

74 வாக்கியத்தாலுண்டாகின்ற ஞானத்திலும் ஆகாங் க்ஷை (அவாய் நிலை), யோக்கியதை (தகுதி), ஆசத்தி (அண் மை), தாற்பரியஞானமென்னும் நான்கு காரணங்களுண்டு. அவற்றுள்,

### 1 ஆகாங்க்ஷை.

1 பதார்த்தங்களுள் ஒன்றற்கொன்று அபேக்ஷா விஷ யத்திற்கு யோக்கியமாயிருக்குந்தன்மை ஆகாங்க்ஷையாம்.

(உ) கொண்டுவாவெனக் கிரியையைக்கேட்டவுடன் கா ரகத்திற்கு அபேக்ஷா விஷயத்துவம் வருகின்றது' காரகத்

---

(க) வேறு பிரமாணங்களின்ற பாதிக்கப்படாமலிருக்கின்ற தாற்பரியத்திற்கு விஷயமான பதார்த்த சம்பந்தபோதக வாக்கியம் சப்தபிரமாணம்

(உ) கிரியையை (வினைச்சொல்லைக் கேட்டவுடன், காரக (செயப்படுபொருளாகிய) அபேக்ஷை யுண்டாகின்றது.

காரகத்தைக்கேட்டவுடன் கிரியாபேக்ஷை யுண்டாகின்றது

காணத்தை (கருவியை)க் கேட்டவுடன் அதன் சாதனாபேக்ஷை யுண்டாகின்றது, உண்டாகவே, அபேக்ஷையின்றி இருப்பவனுக்கும் வாக்கியார்த்தபோத முண்டாவதால் ஜிஞ்ஞாசா (அபேக்ஷா) விஷ

தை (செயலதை)ககேட்டவுடன் கிரியைக்கு அபேக்ஷா விஷயததுவம வருகினறது காரணததைக் கேட்டவுடன் அககரண சாதனததின அபேக்ஷையுண்டாகினறது.

ஆகையினால, அபேக்ஷிககாதவனுககும (அபேக்ஷா விஷயத்துவ மிராவிட்டாலும் அவவிஷயததுவ யோககியதை யிருபபதால) வாககியார்ததபோத முணடாகினறது; உணடாவதால, (அபேக்ஷா விஷயததுவ) யோககியதை ஆகாங்க்ஷையென்று சொலலபபடுகினறது.

யோககியதையில அவசசேதகமா யிருககுந்தர்மம கிரியாததுவம், காரகத்துவமுதலியன ஆகையினால பசு, குதிரை முதலியவிடங்களில அவவியாபதியிலலை.

75. அபேத (ஜீவபபிரஹம)ஙகடகு அனவயமிருக்கும போது சமானவேறறுமையோடுகூடிய பதஙகளினற பிரதிபாதியததனமையானது யோககியதாவசசேதகமாம. ஆகையினால தத்துவமசி முதலிய வாககியஙகளில அவவியாபதியினறு.

இவவித ஆகாஙக்ஷையைககருதியே பூர்வமீமாமசை மூனறாவது அததியாயம, மூனறாவது பாததின, பலாபல அதிகாணததிலும (சுருதி, இலிஙக, வாககிய, பிரகரண, ஸ்தான, சமாககியை எனனுமிவவாறுககுமுளள பலாபலததை விசா

---

யததுவ யோககியததுவம ஆகாங்க்ஷையென்று சொலலபபட்டது. கிரியையுடன சேர்ககுந்தன்மை காரகமாம.

யாகம சுவாககசாதனம், அதனசாதனம சோமலதைமுதலியனவாம.

ரிககும அதிகரணததிலும்) "ஸாவைஸ்வதேவியாமிக்ஷா, வாஜி பயோவாஜினம்-அந்த ஏடு (தயிரேடு) விஸவதேவதைகளை உததேசித்தது ஏறபட்டது அநத ஏடடின கீழிருககும் ஜலாமச மானது வாஜியென்னும தேவதைகளின பொருட்டு."

என்னுமிடத்திலும வைஸவதேவயாகம ஆமிக்ஷயு(ஏட்டு) டன கூடியிருப்பதால அதறகு வாஜினத்தின (எட்டின கீழிருககும ஜலத்தின) ஆகாஙக்ஷயுண்டாகறதிலலை

(ஆ.) அந்த வைஸவ தேவயாகததிலும் வாஜினமானது ஜிஞஞாஸை (ஆகாங்க்ஷ)ககு விஷயமன்றியிருபபினும(அதற்கு) விஷயத்துலயோககியதை யிருககிறது.

பிரதேய (கொடுககததகுந்த) திரவியத்தனமையானது யாகத்திறகுணடான ஜிஞஞாஸைககு விஷயதாவசசேதகமாயிருககிறது 46.

76. (ச) அறறனறு (அஃதாவது நீ சொனனதுசரியனறு). தனககுச் சஜாதிய (தனனின)மான டதார்த்தஙகளின அநவய போதமினமை யோடுகூடின பிரதேய திரவியதத்ன்மையே ஜிஞஞாஸாவிஷயதாவசசேதமாகக கூறினமையின வாஜின திரவியததிறகுத தனககுசசமான திரவியமான ஆமிக்ஷாதிரவியததின அநவயபோதத்துடன கூடியிருபபதால அபபடிப் பட்ட அவசசேதகததனமையினறு ஆமிக்ஷககோ வாஜினத்தின அநவயஞானமிலலை அஃது அந்தக்காலத்தில ஆருடமாக(ஏற)விலலை, வேறு உதாஹரணஙகளிலும தௌர்பபலியத்திறகுககாரணமான ஆகாஙக்ஷயினமை யிருககினறதென் றறிதல வேணடும

## 2 யோக்கியதை

II. யோக்கியதையும் தாற்பரியத்திற்கு (க) விஷயமான பதார்த்தசம்பந்தத்தின் பாதாபாவம் (பாதமின்றியிருப்பது).

'தீயால் நனைக்கிறான்' என்றவிடத்து வாங்கியங்களில் பதார்த்தசம்பந்தம் பாதிக்கப்படுவதால் யோக்கியதையில்லை

'ஸப்பிரஜாபதிராத்மனோவபா முதக்கித்து—அந்தப்பிரஜாபதியானவர் தம்முடைய வபையை(நரலை) எடுத்தார்' என்னும் வாக்கியத்திலும் தாற்பரியத்திற்கு விஷயமான பசுவின் (ஆட்டின்) சிரேஷ்டத்தன்மை பாதிக்கப்படாமையால் யோக்கியதையிருக்கின்றது

தத்துவமசி முதலிய வாக்கியங்களிலும் வாச்சியத்தின் அபேதத்திற்குப் பாதமிருப்பினும் லக்ஷிய சொரூபத்தின் அபேதத்திற்குப்பாதமின்மையால் யோக்கியதையிருக்கின்றது.

## 3. ஆசக்தி.

III ஆசத்தியும் விளம்பமின்றி (மறைவின்றி) பதத்தினாலுண்டான பதார்த்தத்தின் ஸ்மரணமாம் பிரமாணாந்தரத்தால் ஸ்மரிக்கப்பட்ட பதார்த்தத்தின் அந்வயத்திற்குப் பாதமிராமையின்'பதத்தினாலுண்டான' என்று சொல்லப்பட்டது ஆகையினாற்றான், பதார்த்தங்கள் சொல்லப்படாதவிடத்தில் அந்தந்தப் பதங்கள் அத்தியாகாரம்(சேர்த்துக்கொள்ளல்)

---

(க) இவ்வாக்கியத்தால் கேட்பவனுக்கு இப்பொருளின் ஞானமுண்டாகவேண்டுமென்று கூறுவானது இச்சை தாற்பரியமெனப்படும்.

டணணபபடுகின்றன துவாரம (வாயில) என்னுமிடத்தில மூடெனகிறபதத்தைச சேர்த்துக்கொள்ளல வேணடும ஆகையினாறறான 'இஷேத்துவா' முதலிய மந்திரங்களில 'சேதம டணணுகிறேன' னெனனும பதம சேர்க்கபபட்டிருக்கின்றது ஆகையினாறறான விகிர்தியாகங்களில சூரியனுக்காக உன்னை (நெலலை) எடுக்கிறேனெனறும பதம பிரயோகிக்கபபட்டிருக்கின்றது.

### பதார்த்த நிருபணம்

77. சக்கியம், லக்ஷியமெனப பதார்த்தம இருவகைத்தாம, அவைறறுள,

### சக்கியபதார்த்தம்

சக்தியாவது பதங்கட்கு அர்த்தங்களில முக்கியமான விருத்தி எங்ஙனம? சகடமெனனும பதத்திற்குக குவிந்தும வளைந்துமுள்ள கழுத்தோடு கூடிய வஸதுவிலிருக்கும விருத்தியே சக்தியெனபபடும அந்தச்சக்தியும வேறுபதார்த்தம, சித்தாந்தத்தில காரணத்தில காரியத்திறகநுகூலமான சக்திமுறறும பதார்த்தாந்தரமென றொபபுக்கொள்ளபபட்டிருக்கின்றமையின.

அந்தச்சக்தியும் அந்தந்தப்பதங்களினாலுண்டான பதார்த்தங்களின ஞானமாகியகாரியத்தினால அநுமிக்கத்தக்கதாம அப்படிப்பட்டசக்திக்கு விஷயமாயிருக்குந்தன்மை சக்கியத்துவம்.

அந்தச சக்கியத்துவமானது ஜாதிக்கேதவிர வியக்திக்கிலலை எனெனின, வியக்திகள அனேகமாகையால கௌரவதோஷ மேறபடுகின்றது.

(ஆ) அங்ஙனமாயின எங்ஙனம 'கோ' முதலிய பதங்களினால வியகதிஞான முண்டாகும? 47.

78 (ச) i. ஜாதியானது வியகதி ஞானத்திறகுச சமானமான ஞானத்தினலறியக கூடியதாயிருககதலால (வியகதிஞானமுண்டாகிறதெனறு சொல்லுகிறோம)

ii. அலலது 'கோ' முதலியபதஙகடகு வியகதியில சகதி சொரூபசத்தா யிருககிறதேயன்றி அறியப்படடதாயிருபபதாற காரணமாவதிலலை. ஜாதியிலிருககின்ற சகதியோ அறியபபட்டதாயிருபபதாற காரணமாக விருககினறது

வியகதியும சகதியிலிருககினற சகதி ஞானமும காரணமாவதிலலை, கௌரவம நேரிடுகினறமையின.

ஜாதி சகதியோடு கூடினதெனனும ஞானமிருககும்போது, வியக்தி சகதியோடு கூடினதெனனும ஞானததிறகு விளமபமிலலை ஆகையினாற்றான, நியாயமதததிலும அநவயததில சகதியானது சொரூப சததாயிருககினறதெனபது சிததாநதமாம.

வாசசியததுவமாவது அறியபபடுகினற சகதிககு விஷயமாயிருககுநதனமையே ஆதலால ஜாதியே வாசசியம.

அலலது லக்ஷணையினால வியகதியின ஞானமுண்டாகினறது எஙஙனம? நீலகடமெனறவிடதது 'நீல' சபதமானது நீலகுணததோடுகூடிய கடததை லக்ஷணையினால போதிககின்றது. அஙஙனமே, ஜாதியைககூறும சபதம ஜாதியுடன கூடினவஸதுவை லக்ஷணையினால போதிககினறது.

பிரமாணாந்தரத்தினும் கிடைக்கக்கூடாத அர்த்தந்தான சப்தத்திற்கு அர்த்தமென்று மீமாம்சகர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது

இவ்வாறு சக்திய பதார்த்தம் நிரூபிக்கப்பட்டது. பிறகு லக்ஷிய பதார்த்தம் நிரூபிக்கப்படுகின்றது.

லக்ஷ்ய பதார்த்த நிரூபணம்.

79 லக்ஷணைக்கு விஷயமாயிருப்பது லக்ஷியமாம்.

லக்ஷணையானது I. கேவல லக்ஷணை, II லக்ஷிதலக்ஷணை யென்றிருவகைத்தாம். அவற்றுள்,

கேவலலக்ஷணை.

I சக்தியத்தின் சாக்ஷாத் சம்பந்தம் கேவலலக்ஷணையாம். எங்ஙனம் 'கங்கையில் சேரி யிருக்கின்றது' என்னுமிடத்து ப்ரவாகத்தின் சாக்ஷாத் சம்பந்தத்துடன் கூடின கரையில் 'கங்கா' பதத்திற்கு கேவல லக்ஷணையாம்.

லக்ஷிதலக்ஷணை.

II யாண்டுச் சக்தியத்தின் பரம்பரா சம்பந்தத்தினால் அர்த்தாந்தர (வேறர்த்தம்) தோன்றுகின்றதோ ஆண்டு லக்ஷித லக்ஷணையாம் எங்ஙனம் 'த்விரேப' (இரண்டு ரகர) பதம் இரண்டு ரகரத்திற் சக்தியுள்ளது. ப்ரமர (வண்டு) பதத்துடன் சேர்ந்த பரம்பரா சம்பந்தத்தினால் வண்டுகளிடத்தில் விருத்தி லக்ஷிதலக்ஷணையாம்.

## கௌணிவிருத்தி.

80 (க). கௌணிவிருத்தியும் லக்ஷிதலக்ஷணையே என்னை? சிங்கம் மாணவகன் என்னுமிடத்துச் 'சிங்க' சப்தத்தினுற் கூறப்பட்ட சிங்கத்தின் சம்பந்தமுள்ளது கிரௌரியம் (குரூரத்தன்மை) முதலியனவாம். அந்தச்சம்பந்தத்தினால் மாணவக போத முண்டாகின்றது. இந்தலக்ஷணையே

1 ஜகல (விட்ட) லக்ஷணை

11 அஜகல (விடாத) லக்ஷணை

111. ஜகத ஜகல (விட்டு விடாத பாகத்தியாக) லக்ஷணை

என மூவகைத்தாம். அவற்றுள்,

### ஜகல்லக்ஷணை.

1. யாண்டுச்சக்கியார்த்தத்தை யுள்ளடக்காமல் அர்த்தாந்தரம் தோன்றுகின்றதோ ஆண்டு ஜகல்லக்ஷணையாம் என்னை? விஷத்தைப்புசியென்னு மிடத்து விஷபோஜனமாகிய

---

(க). ஒருவகையாகாரத்தோடும் தாடி மீசை முதலியவற்றோடுங் கூடிய மிருகவிசேஷமாகிய சிங்கத்தின் குரூரத்தன்மை முதலிய குணங்கள் மாணவகனிடத்துச் சமமாயிருத்தலை நோக்கிக் குணவொப்புமையால் சிங்கம் மாணவகனென்றுரைக்கு மிடத்துச் சிங்கபதம் மாணவகனைக் கௌணிவிருத்தியால் அறிவிக்கின்றது என்னை? சிங்கபதத்தின் சக்கியத்தில் குரூரத்தன்மை முதலிய குணங்களிருக்கின்றன, அவற்றையுடையவன் சிங்கபதத்திற்கு அசக்கியமாகிய (பொருளாகாத) மாணவகன், அவனிடத்துச் சிங்கபதத்தின் கௌணிவிருத்தி யிருக்கிறது.

பதத்தின் சக்கிய அர்த்தத்தில் எந்தக்குணமிருக்கிறதோ அதனையுடைய அசக்கிய அர்த்தத்தில் பதத்தின் கௌணிவிருத்தி சொல்லப்படுகின்றது

ஸ்வார்த்தத்தை விட்டுச் சத்துருக்கிருஹபோஜன நிவிர்த்தி லக்ஷணையாகப் போதிக்கப்படுகின்றது.

அஜகல்லக்ஷணை.

ii யாண்டு சக்தியார்த்தத்தை யுள்ளடக்கிவேறு அர்த்தந்தோன்றுகின்றதோ ஆண்டு அஜகல்லக்ஷணையாம்

எங்ஙனம்? வெண்மைசகடமென்னுமிடத்து வெண்மையென்னும்பதம் வெண்மைக்குணத்தை விடாமல் அதனுடன் கூடிய திரவியத்தை லக்ஷணையாகப் போதிக்கின்றது

ஜகதஜகல்லக்ஷணை

iii யாண்டு விசிஷ்டத்தை (விசேஷணத்துடன் கூடியதை)க் கூறும் சப்தம் ஏகதேசத்தைவிட்டு ஏகதேசத்தை மாத்திரங்கூறுகின்றதோ ஆண்டு ஜகதஜகல்லக்ஷணையாம். எங்ஙனம்?

இந்த தேவதத்தன் அவன் என்னுமிடத்து, 'இவன்' 'அவன்' என்னும் பதங்களாற் கூறப்பட்ட விசிட்டத்திற்கு ஐக்கியம் பொருந்தாமையால் அவ்விரண்டு பதங்களால் விசேஷிய மாத்திரமே போதிக்கப்படுகின்றது

'தத்துவமசி' முதலிய விடங்களில் தத்பதவாச்சியமான சர்வஞ்ஞத்துவ முதலிய குணவிசிஷ்ட (ஈச)னுக்கும், துவம்பதவாச்சியமான அந்தக்கரண விசிஷ்ட (ஜீவ)னுக்கும் ஐக்கியம் பொருந்தாமையால், ஐக்கியம் சித்திக்கும் பொருட்டுச் சொரூபத்தில் லக்ஷணையென்று வேதாந்த சம்பிரதாயந் தெரிந்தவர்களால் சொல்லப்படுகின்றது.

81. நாங்கள் சொல்லுகிறோம்.—ஸோயந்தேவதத்த: தத்துவமசி முதலிய விடங்களில விசிஷ்டத்தைக் கூறும்பதங்கள் ஏகதேசபரமா (ஏகதேசத்தைக்கூறுவதா)யிருந்தாலும (அதற்கு) லக்ஷணையில்லை

சக்தியினால போதிக்கப்பட்ட விசிட்டங்கட்கு அபேதாந்வயம் பொருந்தாமையால் சக்தியினால போதிக்கப்பட்ட விசேஷியங்கட்கே அபேதாந்வயத்தில விரோதமில்லை எங்ஙனம் 'கடம அநித்தியம' எனனுமிடத்துக கடபதவாச்சியத்தின ஏகதேசமான கடத்துவம (அநித்தியத்திறகு) அயோக்கியமாயிருபபினும யோககியமான கடவியக்தியோடுகூட அநித்தியத்துவத்திறகு அந்வயம சித்திக்கின்றது.

யாண்டுப பதார்த்தத்தின ஏகதேசமானது விசேஷணமாகத் தோன்றுகின்றதோ ஆண்டே அது சுதந்தர (விசேஷிட)மாகத்தோன்றும பொருட்டு லக்ஷணை ஒப்புகக்கொள்ளல வேணடும எங்ஙனம 'கடம நித்தியம' எனனுமிடத்துக கடபதத்தால கடத்துவமானது சக்தியினால சுதந்திரமாகத் தோன்றவில்லை அப்படித்தோன்றும பொருட்டுககடபதத்திறகுககடத்தன்மையில லக்ஷணையாம இங்ஙனமே 'தத்துவமசி' முதலிய வாக்கியங்களிலும லக்ஷணையில்லை, (ஏனெனின) சக்தியினாற் சுவதந்திரமாயத் தோன்றிய தத்பதார்த்தத்திற்கும த்வம்பதார்த்தத்திற்கும் அபேதாந்வயத்தில பாதகமிராமையின.

இவவாறங்கீகரிககாவிடத்துக 'கிருகத்தி (வீட்டி)ல கடமிருககின்றது,' 'கடத்தில ரூபமிருக்கின்றது,' 'கடத்தைக கொண்டு வா' என்றறபிறகக கத்திடங்களில கடத்தன்மை,

சித்தத்தன்மை முதலியவைகட்கு இஷ்டமான அந்வயஞானம் சித்திக்கும்பொருட்டு யோக்கியதை யில்லாமையின் அவ்விடத்தும் கடமுதலிய பதங்கட்கு விசேஷியத்தை மாத்திரம் போதிப்பதில் லக்ஷணை நாளெனப்படும். ஆகையினால் ஆசாரியர்கள் 'தத்துவமசி' முதலிய வாக்கியங்களில் லக்ஷணை கூறியது அப்பிப்பிராயத்தினால (லக்ஷணையும் சொல்லலாமென் றங்கீகரித்தலால்) என்றறிந்து கொள்ளல்வேண்டும்.

ஆனால் ஜகத்ஜகல்லக்ஷணைக்கு உதாரணம், 'காகத்தினின்றும் தயிரைக் காப்பாற்றுக' என்பதாம்.

ஆண்டுச் சக்கியார்த்தமான காகத்தை விட்டும், அசக்கியார்த்தமான தயிருக்கு விரோதியான பொருள்களை விடாமலும் காகத்திலும், அகாகத்தி (பூனை முதலியவற்றி)லும் காகச்சப்தம் பிரவிர்த்தித்திருத்தல் ஜகத்ஜகல்லக்ஷணையாம்.

லக்ஷணை பீஜ (காரண)மோ தாற்பரியாநுபபத்தியே (தாற்பரியம் பொருந்தாமையே), அந்வயம் பொருந்தாமலிருப்பதன்று, காகத்தினின்றும் தயிரானது இரக்ஷிக்கத்தக்கது என்னுமிடத்து அந்வயாநுபபத்தியின்மையின்

கங்கையில் இடைச்சேரி யிருக்கின்ற தென்றற்றொடக்கத்திடங்களிலும் தாற்பரியாநுபபத்தியும் சம்பவிக்கின்றமையின் லக்ஷணைக்குக்காரணம் தாற்பரியம் பொருந்தாமையே.

லக்ஷணையும் பதத்தில் மாத்திரமிருப்பதன்று, ஆனால் வாக்கியத்திலுமுண்டு எங்ஙனம்?

கம்பீரமான (ஆழமுள்ள) நதியில் இடைச்சேரி யிருக்கின்றதென்னுமிடத்து ('இடைச்சேரி' 'இருக்கின்றது' என்னும்) இவ்விரண்டு பதங்கட்கும் தீரத்தில் (கரையில்) லக்ஷணையாம்.

(ஆ) வாக்கியார்த்தமானது சக்கியார்த்தமாகாமையின் எங்ஙனம் சக்கிய சம்பந்தம் லக்ஷணையெனலகூடும்? 48.

82 (ச) சக்தியினால் பதத்தின் எந்த அர்த்தம் அறிவிக்கப்படுகின்றதோ அதன் சம்பந்தம் லக்ஷணையாம்

சக்தியினால் எங்ஙனம் பதார்த்தமானது ஞாபி (அறிவி)க்கப்படுகின்றதோ அங்ஙனமே வாக்கியார்த்தமும் போதிக்கப்படுகின்றது ஆகையால் யாதோர் அநுபபத்தியுமின்று

இங்ஙனமே அர்த்தவாதவாக்கியங்கட்கு ஸ்துதியில் லக்ஷணையாம். நிந்தார்த்தவாத வாக்கியங்கட்கு நிந்தையில் லக்ஷணையாம்

அர்த்த வாதவாக்கியங்களி லடங்கிய பதங்கட்கு ஸ்துதி நிந்தை இவற்றில் லக்ஷணையை ஒப்புக்கொள்ளின் ஒருபதத்தின் லக்ஷணையினால் மேற்சொல்லிய அர்த்தங்களின் பிரதீதி (தோற்றம்) சம்பவிக்கும்போது ஏனையபதங்கள் வியர்த்தமாய் விடும்.

மேலும், விதிவாக்கியத்தி லபேக்ஷிக்கப்பட்ட ஸ்துதியாகிற பதார்த்தத்தைப் போதிக்கின்றமையின் அர்த்தவாதவாக்கியங்கள் பதஸ்தானமா யிருந்துகொண்டு விதிவாக்கியத்தோடு ஒரு வாக்கியமாக வாகின்றன.

ஆகையினால், அர்த்தவாதவாக்கியங்களுக்குப் பண்டைகவாக்கியதை (பரத்தோக்கூடிய வாக்கியத்தன்மை)யுண்டு. ஆனால் பாண்டுவாக்கியத்தோடு வாக்கியத்தையெனின், ஆண்டுத்தனித்தனியான அர்த்தங்களைப் போதிக்கின்றவாக்கியங்கள் ஆகாங்க்ஷையினால் மகாவாக்கியார்த்தத்தைப் போதிக்கின்றனவோ ஆண்டு வாக்கியங்களுடன் ஏகவாக்கியதையுண்டு. எங்ஙனம்? "சுவர்க்ககாமன் தாசபூர்ணமாசமென்னும் யாகத்தைச்செய்ய வேண்டும்" "சமித்துமுதலியயாகத்தைச்செய்யவேண்டும்" என்பனவாகிய வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் ஆகாங்க்ஷையிருக்கின்றது அஃதாவது முதலாவதுவாக்கியம் யாகத்திற்குச் சாதகத்தையபேக்ஷிக்கின்றது, இரண்டாவதுவாக்கியம் சாத்தியத்தையபேக்ஷித்துக் கொண்டிருக்கின்றது. ஆகவே, இரண்டு வாக்கியங்களும் ஒன்றுகின்றன அஃதாவது, சமித்து முதலிய அங்கயாகத்தினால் உபகாரத்தையடைந்த அங்கியான தர்சபூர்ணமாசமென்னும் யாகத்தினால் சுவர்க்கத்தைச் சம்பாதித்தல் வேண்டுமென்று அனேகவாக்கியங்கள் ஏகமாகின்றன.

"தம்முடைய அர்த்தங்களைப் போதித்து முடிந்த வாக்கியங்கள் அங்காங்கிபாவங்களின் அபேக்ஷையினால் மீண்டும் சேர்ந்து ஒரு வாக்கியமாகின்றன" என்று பட்டபாதாசாரியரால் சொல்லப்பட்டிருக்கின்றது

இங்ஙனம் இருவகைத்தானபதார்த்தமும்நிரூபிக்கப்பட்டன.

## ஆசக்தி

83 அந்தப் பதார்த்தத்தின் ஸ்மரணம் ஆசக்தியினாலுண்டாகின்றது அந்த ஆசக்தி (அண்மை)யும் சாப்த

போதத்தில் காரணம் அங்ஙனமே, (க) அந்வய வியதிரேகம் காணப்பட்டிருக்கின்றன.

இங்ஙனம் மஹா வாக்கியார்த்த ஞானத்தில் அவாந்தர வாக்கியார்த்த ஞானம் காரணம். அங்ஙனமே அந்வயமுதலிய நிச்சயமுண்டாகின்றது.

தாத்பரியம்

84 கிரமமாக வந்த தாற்பரியம் நிரூபிக்கப்படுகின்றது.

அர்த்தஞான இச்சையினு லுச்சரிக்கப்படுந்தன்மையெது வோ அது தாற்பரியமென்று (அவ்வாறு கூறின) அர்த்த ஞான மற்ற புருடனுலுச்சரிக்கப்பட்ட வேதத்தினுல அர்த்த ஞான முண்டாகாமற் போயவிடும்

இந்த உபாத்தியாயன வியுற்பத்தி (சொற்பொருளுணர்ச்சி) யற்றவனென்றுவிசேடதரிசனத்தினுல அவனிடத்திற் றாற்பரியப்பிராந்தியுமின்று

(ஆ) ஈசுவரனுடைய தாற்பரிய ஞானத்தினுல ஆண்டுச் சாபதபோத முண்டாகின்றதென்று கூறுகின்றேம 49.

85 (ச) ஈசுவரனை அங்கீகரிக்காதவர்களது மதத்திலும வாக்கியார்த்தஞானங் காணப்படுகின்றது அர்த்த ஞானத் தையுண்டுபண்ணுவதற்கு யோக்கியமாயிருப்பதே தாற்பரியம் கிருகத்தில குடமிருக்கின்றதெனனும வாக்கியம குடத்திற்கும்

---

(க.) ஆசக்தியிருந்தால சாபதபோத முண்டாகின்றதெனபது அந்வயம், அஃதிராவிடின் சாபதபோத முண்டாகாதெனபது வியதிரேகம்.

யத்திற்கு முன்னே சம்பந்த ஞானத்தை யுண்டுபண்ணுவதற்கு யோக்கியமுடைமையேயன்றிப் பட்சம்பந்த ஞானத்தை யுண்டு பண்ணுவதற்கு யோக்கிய முடைமையதன்று. ஆகையினால் அந்த வாக்கியம் 'குட' சம்பந்தத்திற் றாற்பரிய முடைமையேயன்றிப் 'பட' சம்பந்தத்திற் றாற்பரிய முடைமையதன்று.

(ஆ) (க) 'சயிந்தவத்தைக் கொண்டுவா' என்றவிடத்துள்ள வாக்கியம் எப்போது லவணத்தைக் கொண்டுவாவென்னும் இச்சையாற் சொல்லப்பட்டதோ அப்போது இந்த வாக்கியத்திற்கு அஸ்வசம்பந்த ஞானத்தை யுண்டுபண்ணுவதில் சொரூபயோக்கியதை யிருப்பதால் லவணத்திற் றாற்பரிய முள்ளதென்னுங் காலத்திலும் அஸ்வசம்பந்த ஞானம் வரல் வேண்டும். 50

86 (ச) இதரஞான இச்சையினா லுச்சரிக்கப்படாமலிருக்குந் தன்மையைத் தாற்பரியத்திற்கு விசேஷணமாகக் கொடுப்பதால் அது கூடாது. ஆகவே, எவ்வாக்கியம் எதன் ஞானத்தை யுண்டுபண்ணுவதில் சொரூப யோக்கியமாயும், அந்நிய ஞானத்தினிச்சையா லுச்சரிக்கப்படாமலு மிருக்கின்றதோ அந்த வாக்கியம் அதன் சம்பந்தத்தில் தாற்பரியமுள்ளதென்று சொல்லப்படுகின்றது.

இனி (உ) முதலியவற்றாற் சொல்லப்பட்ட வாக்கியங்களிலும் வியுத்பத்தியற்ற புருஷனாலுச்சரிக்கப்பட்ட வேதவாக்கி

---

(க) சயிந்தவமென்னும் பதம் குதிரையையும் உப்பையுமுணர்த்தும்.

(உ). முதலிய என்பதால் கிளிசுலோக முதலியவற்றையுங் கொள்க.

யங்களிலும அர்த்தஞான இச்சையேயின்மையின் அன்னிய ஞான இச்சையினு லுச்சரிக்கப்படாமலிருப்பதால லக்ஷண மிருக்கின்றது ஆகையினால அவ்வியாபதியின்று

(ஆ). இரண்டினைஞானத் தினிச்சையினால உச்சரிக்கப் பட்ட வாக்கியத்தில அவ்வியாபதியிருக்கின்றது. 51.

87. (ச) (க) அந்நியமாத்ர ஞான இச்சையினால உச்சரிக்கப்படாம லிருக்கவேண்டு மென்று சொல்லுகின்றோம (ஆகையினால மேறசொல்லிய தோஷமின்று).

மேலும, மேறசொல்லிய ஞானத்தை மாத்திரம உண்டு பண்ணக்கூடிய யோக்கியதைக்கு அவச்சேதகமாக விருப்பது சக்தீ ஆனால நமபுடைய மதத்திலோ யாண்டும காரணதை (காரணத்தன்மை)க்குச் சக்தி அவச்சேதகமாக விருப்பதால் ஒருதோஷமுமின்று இங்ஙனம ஆப்தஞானத்தை யுண்டு பண்ணக்கூடிய தாற்பரியம சாபதஞானத்தை உண்டுபண்ணு கின்றதென்று சித்திதத்திருக்குமபோது விவரணக்கிரந்தத்தின் நானகாவது வர்ணகத்தில தாற்பரியம சபதஞானத்திறகு ஹேதுவன்றென்று சொல்லப்பட்டிருக்கின்றது அஃதெங்ங னமபொருந்துமெனின, அஃது ஆப்தஞான இச்சையால உச்ச ரிக்கப்படுந்தன்மை தாற்பரியமென்று கூறியதை நிராகரிக்கின்ற தென்றறியவேண்டும. இல்லாவிடின தாற்பரிய நிச்சயத்தை யுண்டுபண்ணக்கூடிய வேதாந்த விசாரம் வியர்த்தமாயவிடும.

---

(க) அந்நியமாத்ர ஞான இச்சையினால உச்சரிக்கப்படாம லிருக்குந் தன்மை — உபயஞானத்தினால உச்சரிக்கப்படுந் தன்மை.

சாப்தஞானம முழுவதையுங்குறித்துத் தாறபரிய ஞானங் காரணமெனறெனபது விவரண வாககியததின கருதது. (ஏனெனின) தாற்பரிய சமசயம, தாறபரிய விபாயயம இவை யுணடான பிறகு உணடான சில சபத ஞானததில தாறபரிய ஞானம காரணமே இநத வாககியம இதிறகருததுளளதா? அலலது அநநியததிற கருததுளளதா? எனனும சமசயமாவது விபர்யயமாவது உணடாயிருககுமபோது இதன பிறகுண்டான வாககியாாததததின விசேட நிசசயமானது தாறபரிய நிசசய மனறி யுண்டாகமாட்டாது எனறு சிலர் கூறுகினறனர்

அநதததாறபரியம் வேதததில மீமாமசை (விசாரணை) யால சோதிககபபட்ட நியாயததினாலேயே நிசசயிககபபடுகின றது; உலகததிலோ பிரகரண முதலியவைகளால நிசசயிககப படுகினறது. அவ்வாறுள, லெளகிக வாககியங்கள இதரபபிர மாணஙகளாலறியபபட்ட அர்த்ததை அநுவதிககினறன வேதத்திலோ, வாககியார்ததமானது பிரமாணாநதரஙகளால அறியபபடாமையின அநுவாதமனறு உலகததிலும வேதத் திலும காரிய பரமாயிருககினற வாககியஙகட்குபபிராமாணய மிருபபதுபோல் சிததாாததததைப போதிககும வாககியஙகட் கும பிராமாணியமுணடு, "உனககு மகன பிறநதான" என்றுற் றொடக்க ததுவாககியங்கட்குச் சிததார்ததததிலும அவற்றி லடங்கிய பதங்களின சாமார்த்திய நிசசயம் வருகினறமையின. ஆகையினாற்றான் வேதாநதவாககியஙகட்குபபிரஹமததினிடத் தில் பிராமாணியம எங்ஙனம ஏறபடுமோ அஙஙனமே விஷய பரிச்சேதத்திற சொலலபபடும.

வேதங்கள் நித்தியனும் சர்வஞ்ஞனுமுள்ள பரமேசுவரனுல் செய்யப்பட்டமையின் பிரமாணமென நையாயிகர் கூறுகின்றனர். வேதங்கள் நித்தியமாகையால் (அவற்றிற்குப்) பிரம(பிராந்தி)ப (க) பிரமாத முதலிய புருஷதோஷம் ஏற்படவில்லை, ஆகையினுல் பிரமாணங்களென மீமாம்சகர் கூறுகின்றனர்.

நமமுடைய (வேதாந்த) மதத்திலோ வேதம் நித்தியமன்று, உற்பத்தியுடையதா யிருக்கின்றமையின். உற்பத்தியும் "அஸ்யமகதோ பூதஸ்ய நிசுவசிதமேதரிக்வேத:—இந்த மகா பூதத்தின் மூச்சுக்காற்று இருக்வேதமுதலியன" என்றற்றொடக்கத்துச் சுருதிகளால் தெரியவருகின்றது

(ஆ) வேதங்கள் (காரியமெனின்) மூன்று க்ஷணந்தானிருத்தல் வேண்டும். 52.

88 (ச) எந்த வேதம் தேவதத்தனுல் அத்தியயனஞ் செய்யப்பட்டதோ அந்த வேதம் என்னுல் அத்தியயனஞ் செய்யப்பட்டதெனனும் பிரத்தியபிஞ்ஞைக்கு விரோதம் வருகின்றமையின் (அது கூடாது) ஆகையினுற்றுன ககர முதலிய வர்ணங்(எழுத்து)களுமக்ஷணிகமன்று, அந்தக்ககரந்தானிதுவெனனும் பிரத்திய பிஞ்ஞைக்கு விரோதம் வருகின்றமையின் ஆகவே

(க). அவசியம் செய்யத்தக்குந்த காரியத்தை மறந்து விடுதல் **பிரமாத**மெனப்படும். அல்லது எதுசாஸ்திரத்தினுற செய்யத்தக்கதாயிருக்கின்றதோ எதனைச் செய்தற்கு இச்சையுமிருக்கின்றதோ அதனைச் செய்யாதிருத்தல் **பிரமாத**மெனப்படும்.

வர்ணம், பதம், வாக்கியம் இவற்றின் சமுதாயமாகிய வேதங்கட்கு ஆகாசமுதலியவைபோன்று சிருஷ்டி காலத்திலுண்டாகிப் பிரளய காலத்தில் நாசமேயன்றி இடையில் வர்ணங்களுக்குற்பத்தி விநாசங்களில்லை. (இடையில் வர்ணங்களுக் குற்பத்தி யுண்டென்றொப்புக்கொண்டால்) அனந்த ககாரங்களைக் கற்பித்தல் வேண்டும். அது (அவ்வாறு கற்பித்தல்) கௌரவமாம். ஆனால் உச்சரிக்காமலிருக்கும்போது வர்ணங்கள் தோன்றுதலின்று, உச்சாரணமாகிய வியஞ்சகம் (பிரகாசம் பண்ணிவைத்தல்) இராமையின், இருட்டிற் கடம் தோன்றாமை போலும். ஆகையினால் யாதொரு விரோதமுமின்று. ககாரமுண்டாயிற்றென்ற ஒருட்கக்கத்து ஞானம் அந்தக்ககாரந்தான் இது வென்னும் பிரத்தியபிஞ்ஞைக்கு விரோதமாயிருக்கின்றமையின் அப்பிரமாணமாம், அல்லது வர்ணங்களின் அபிவியக்தியை (பிரகாசத்தை) யுண்டுபண்ணுகிற துவனி (கண்டத்தொனி)யிலிருக்கின்ற உற்பத்தியானது அபிவியங்கியமான (பிரகாசத்தை யடைகின்றதான) அக்ஷர விஷயமாகத் தோன்றுவதால் அப்பிரமாணமாம். ஆதலால், வேதங்கள் க்ஷணிகமல்ல.

(ஆ) வேதங்கள் க்ஷணிகமன்றி யிருப்பினும் ஆகாசாதிப் பிரபஞ்சம்போல ஜன்னியமாயிருப்பதாலும் பரமேசுவரனாற் செய்யப்பட்டமையாலும் பௌருஷேயமா (புருஷனாற் செய்யப்பட்டதா)யிருக்கின்றன. ஆகையினால், வேதங்கள் அபௌருஷேயமென்னும் உன்னுடைய கொள்கை பொருந்தாது. 53.

89 (ச) புருஷனுலுச்சரிக்கப்படுவது பௌருஷேயமன்று. (அங்ஙனம் கூறின்) மீமாம்சகர்களது மதத்திலும் பிரம்மா முதல் பரம்பரையாய் வருவதால்(வேதம்)பௌருஷேயமாயவிடும். ஆகையால், புருஷனுலுச்சரிக்கப்படுவது பௌருஷேயமன்று புருஷாதீன (வச)மான உற்பத்தியும் பௌருஷேயமன்று, ஏனெனின், நையாயிகர் ஒப்புக்கொண்ட வேதங்கள் பௌருஷேயமெனனுமனுமானத்தில் நம்முடைய மதப்படி (துணிந்ததனைத்துணிவிப்பதாகிய) சித்தசாதன தோஷம் வருகின்றமையின் ஆகலால், ஸஜாதீய (தனவின)மான உச்சாரணத்தை அபேக்ஷித்து உச்சரிப்பது அபௌருஷேயம், ஆகவே சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் பரமேசுவரன் முன் சிருஷ்டியில் எந்தக்கிரமப்படி வேதம் சித்தமாகவிருந்ததோ அந்தக்கிரமப்படி வேதத்தைச் சிருஷ்டித்தனரேயன்றி அதற்கு வேறுபட்ட வேதத்தைச் சிருஷ்டிக்கவில்லை ஆகையினால், ஸஜாதீயமான உச்சாரணத்தை யபேக்ஷித்து உச்சாரணத்திற்கு விஷயமாயிருக்குந்தன்மையே வேதங்கட்கு அபௌருஷேயத்துவமாம். பாரத முதலாயினவற்றிற்கோவெனின், ஸஜாதீயமான உச்சாரணத்தை யபேக்ஷிக்காமலே உச்சரிப்பது அவற்றிற்குப்பௌருஷேயத்தன்மையாம

இங்ஙனம் பௌருஷேயம் அபௌருஷேயமென்றும் இருவகைத்தாய ஆகமங்கள் நிரூபிக்கப்பட்டன.

ஆகமபரிச்சேதம்.

முற்றிற்று.

## அருத்தாபத்தி பரிச்சேதம்.
### அருத்தாபத்திப் பிரமாணம்

90 முந்திய பரிச்சேதத்தில் ஆகமம் நிரூபிக்கப்பட்டது. இந்தப் பரிச்சேதத்தில் அருத்தாபத்தி நிரூபிக்கப்படுகின்றது.

உபபாத்திய ஞானத்தால் உபபாதக கல்பனம் (கற்பனை) அருத்தாபத்தியாம். அவற்றுள்,

I உபபாத்தியஞானம் கரணம்.

II உபபாதக ஞானம் பலம்

1. எஃதின்றி எது பொருந்தவில்லையோ அதற்கு அது உபபாத்தியமாம்.

II. எதனில்லாமையால் எதன்கண் இல்லாமையுளதாகின்றதோ அஃது அதன் உபபாதகமாம்.

1. இராத்திரி போஜனமின்றிப் பகற்காலத்திற் போஜனஞ்செய்யாதவனுக்குப் பீனத்துவம் (ஸ்தூலதை-பருமை) பொருந்தாது ஆகையால் பீனத்துவம் உபபாத்தியமாம்

II இராத்திரி போஜனமின்றிப் பீனத்துவம் பொருந்தாமையின் இராத்திரி போஜனம் உபபாதகமாம்

இராத்திரி போஜனகற்பனையாகிய யதார்த்த ஞானத்தில் அர்த்தத்தின் கற்பனையென்று சஷ்டீதற்புருஷ சமாசத்தில் (ஆறாம் வேற்றுமைத் தொகையில்) (க) அருத்தாபத்தி சப்தமானது பிரவிர்த்திக்கின்றது.

---

(க). அருத்தாபத்தியென்பது அர்த்தஸ்ய + ஆபத்தி எனப்பிரிபடுகிறதும், அதன் பொருள் அர்த்தத்தினது கற்பனையென்பது

இந்தக் கற்பனைக்குக் காரணமான பீனத்துவ ஞானத்தி லோ அர்த்தத்தின் ஆபத்தி (கற்பனை)யானது பஞ்சமீ சமாசத்தால் (ஐந்தாம் வேற்றுமைத் தொகையால்) சித்திக்கின்றமையின் அருத்தாபத்திசப்தம் பிரவிர்த்திக்கின்றது. ஆகையினாலே, பலம் காரணம் என்னு மிவ்விரண்டிலும் அருத்தாபத்தியென்னும் பதம் உபயோகிக்கப் பட்டிருக்கின்றது.

இவ்வருத்தாபத்தியானது, திருஷ்ட (காண்டல்) அருத்தாபத்தி, ıı சுருத (கேள்வி) அருத்தாபத்தி என இருவகைத்தாம்.

திருஷ்ட அருத்தாபத்தி.

91 அவற்றுள் திருஷ்ட அருத்தாபத்தி எங்ஙனம்? இந்து இரஜதம் என முன்னிருக்கும் வஸ்துவைப் பார்த்து கிரஹிக்கப்பட்ட ரஜதமானது இது ரஜதமன்றென்று நிஷேதிக்கப்படுவதால் நிஷேதிக்கப்படுந்தன்மை சத்தாயிருந்தால் பொருந்தமாட்டாது ஆகையால் ரஜதம் சத்பின்னம் (சத்துக்கு வேறுபட்டது) அல்லது சத்துவம் இல்லாமை யாகியமித்தியாத்துவம் (அசத்துக்கு) கற்பிக்கப்படுகின்றது.

சுருத அருத்தாபத்தி

92 சுருத அருத்தாபத்தி எங்ஙனம்? சொல்லப்பட்ட வாக்கியத்திற்குச் சுவார்த்தம் பொருந்தாமையால் அர்த்தாந்தரம் கற்பிக்கப்படுகின்றது. எங்ஙனம்? 'ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்றான்' என்னுமிடத்துச் சோகசப்தத்தாற் கூறப்பட்ட பந்தம் ஞானத்தினாலே நிவிர்த்தியாகின்றதென்று சுருதமாயிருக்கின்றது அந்தப்பந்தத்திற்கு மித்தியாத்துவமின்றி ஞானத்தினாலே நிவிர்த்தித்துவம் பொருந்தாமையின் மித்தியாத்துவம் கற்பிக்கப்படுகின்றது.

ஜீவித்திருக்கின்ற தேவதத்தன் கிருஹத்திலில்லையென்னும் வாக்கியத்தைக் கேட்டபிறகு ஜீவித்திருக்கின்றவன் கிருஹத்திலிராமையின் வெளியிலிருக்கின்றானென்பது கற்பிக்கப்படுகின்றது.

சுருதார்த்தாபத்தியும்:— i. அபிதானானுபபத்தி, ii. அபிஹிதானுபபத்தி என்றிருவகைத்தாம். அவற்றுள்,

அபிதானானுபபத்தி.

93 i. யாண்டுவாக்கியத்தின் ஏகதேச சிரவணமிருந்து அன்வயாபிதானம் பொருந்தாமலிருக்கின்றதோ ஆண்டு அன்வயாபிதானத்திற்கு உபயோகமான பதாந்தரம் கற்பிக்கப்படுகின்றது. இஃது அபிதானானுபபத்தியாம். எங்ஙனம்? 'துவாரம்' (வாயிலை) என்று சொல்லும்போது 'மூடு' என்னும்பதமானது அத்தியாகாரம் பண்ண (சேர்க்க)ப்படுகின்றது. அல்லது 'விஸ்வஜிதாயஜேத' என்னுமிடத்துச் 'சுவர்க்ககாமன' என்னும் பதம் சேர்க்கப்படுகின்றது.

(ஆ) துவாரமுதலியவிடத்து அன்வயாபிதானத்திற்கு முன்னர் இந்த அன்வயாபிதானம் (அன்வயத்தைச்சொல்வது) மூடு என்னும் அர்த்தத்தைத்தரும் பதமின்றிப் பொருந்தாது. ஆகையால், எங்ஙனம் ஞானமுண்டாகும்? 54.

94 (ச). அபிதானமென்னும் பதத்திற்குத் தாற்பரியமென்பது பொருள். ஆகவே, துவாரத்தை விஷயமாகவுடையபிதானம் (மூடு) என்னும் கிரியாசம்பந்தத்தைக்கூறுந் தன்மையானது மறைவைக்கூறும் பதமின்றிப் பொருந்தாது. ஆகையால், ஆண்டும் ஞானம் சம்பவிக்கின்றது.

### அபிகிதா[redacted]நுபபத்தி.

95. u அபிகிதா[redacted]நுபபத்தி எங்ஙனம்? யாண்டு வாக்யத்தால் அறியப்பட்ட அர்த்தமானது பொருந்தவில்லையென்றறியப்பட்டு அர்த்தாந்தரம் கற்பிக்கப்படுகின்றதோ ஆண்டு அபிகிதா[redacted]நுபபத்தி யென்றறியவேண்டும். எங்ஙனம்? 'சுவர்க்க காமன் ஜோதிஷ்டோமமென்னும் யாகத்தைச்செய்யக்கடவன்' என்னுமிடத்துச் சுவர்க்கசாதனமான யாகம் க்ஷணிகமாகையால் அச்சாதனத்துவம் சாக்ஷாத்தாகப் பொருந்தாது. ஆகையால் யாகத்திற்கும் சுவர்க்கத்திற்கும் இடையில் அபூர்வம் (தர்மாதர்மம்) கற்பிக்கப்படுகின்றது.

இந்த அருத்தாபத்தியானது அநுமானத்தில் அடங்குவதன்று, அந்வய வியாப்தி ஞானத்தினால் அந்வயி அநுமானத்திலடங்காமையின், வியதிரேகியும் அநுமானமன்றென்று முன்னமே கண்டிக்கப்பட்டது. ஆகையினாற்றான் அருத்தாபத்திஸ்தலத்தில் அநுமானம் பண்ணுகிறேனென்று அநுவியவசாய ஞானம் உண்டாகின்றதில்லை ஆனால் இதனாலிதைக்கற்பிக்கின்றேனென்று அநுவியவசாய ஞானமுண்டாகின்றது.

(ஆ.) அருத்தாபத்தி ஸ்தலத்தில் இஃது இஃதன்றிப் பொருந்ாதென்னும் ஞானம் கரணமென்று சொல்லப்பட்டது. ஆண்டு இஃது இஃதன்றிப்பொருந்தாமலிருப்பது யாது? 55

96. (ச.) அதன (தீயின்) அபாவத்திற்கு வியாபகமான (புகையின்) அபாவத்திற்குப்பிரதியோகித்தனமையென்று கூறுகின்றோம். இங்ஙனம் அருத்தாபத்தியானது பிரமாணாந்தர

மென்று சித்தித்திருக்கும்போது வியதிரேகியானது அநுமானாந்தர(வேறநுமான)மன்று.

(க) பிருதிவி இதரபேதமுடையது, கந்தமுடைமையின்.

என்றதொட்கத்திடத்துக் கந்தம் இதரபேதமன்றிப் பொருந்தாது என்னும் ஞானம் கரணமாயிருக்கிறது. இப்படித் தான் பிருதிவியில் இதரபேதத்தைக் கற்பிக்கின்றேனென்னும் (உ) அநுவியவசாய ஞானம் உண்டாகின்றது.

## அர்த்தாபத்தி பரிச்சேதம்
## முற்றிற்று.

---

(க) பிருதிவி ஏனையவற்றின் வேறு, நாற்றமுடைமையின், யாது ஏனைப்பொருள்களின் வேறன்று அது நாற்றமுடைத்தன்று, அப்புப் போல, இஃது அங்ஙனமன்று, ஆகலின் இங்ஙனமன்று என்று தர்க்க நூல் கூறுகின்றது இவ்வநுமானம் வியதிரேகியநுமானம்.

(உ) இதரபேதத்தின் ஞானத்தின் பிறகு கந்தமுடைமை சம்பவியாமையால் இதரபேதத்தைக் கற்பிக்கின்றேனென்பது அநுவியவசாயஞானம்.

# அநுபலப்தி பரிச்சேதம்.

## அநுபலப்தீப் பிரமாணம்.

97. இந்தப்பரிச்சேதத்தில் ஆறுவது பிரமாணம் நிரூபிக்கப்படுகின்றது.

ஞானகரண அஜன்னிய அபாவாநுபவ அசாதாரண காரணம் அநுபலப்தி வடிவப் பிரமாணமாம்

அநுமானத்தாலுண்டாகிய அதீந்திரிய அபாவாநுபவத்திற்குக் காரணமாகிய அநுமானாதிகளில் அதிவியாப்தி நீக்கும் பொருட்டு ஞானகரண அஜன்னியம் என்று சொல்லப்பட்டது.

அதிர்ஷ்டமுதலிய சாதாரண காரணத்தில் அதிவியாப்தி நீக்கும்பொருட்டு அசாதாரண காரணம் எனனும் பதம் உபயோகிக்கப்பட்டது.

அபாவஸ்மரணத்திற்கு அசாதாரண காரணமான சம்ஸ்காரத்தில் அதிவியாப்தி நீக்கும்பொருட்டு அநுபவம் எனனும் விசேஷணங் கொடுக்கப்பட்டது

(ஆ) அதீந்திரியமான அபாவ அநுமிதி ஸ்தலத்திலேயும் அநுபலப்தியினாலே அபாவம் கிரஹிக்கப்படட்டுமே; விசேஷம் (இரண்டபாவத்திற்கும் வேற்றுமை) இராமையின். 56.

98 (ச). தர்மாதர்மாதிகள் உபலப்த (விளக்க)மின்றியிருந்தாலும் தர்மாதர்மங்கள் இல்லையெனனும் நிச்சயமிராமையின யோக்கியாநுபலப்தியே அபாவத்தைக் கிரஹிக்கின்றமையின் (தோஷமின்று).

(ஆ). யோக்கியாநுபலப்தியாது.?

i. யோக்கியமான பிரதியோகியின அநுபலபதியா? அல்லது

ii. யோககியமான அதிகரணத்தில் பிரதியோகியின் அநுபலபதியா?

i முதலாவதுபக்ஷமபொருந்தாது, ஸ்தமபத்தில பிசாச முதலியவறறின பேதம அபபிரததியக்ஷமாயவிடும.

ii. இரணடாவது பக்ஷமுங்கூடாது, ஆத்மாவினகண தர்மாதர்மாபாவமும பிரததியக்ஷமாகக கூடும. 57.

99. (ச) யோககியாநுபலபதி (யோககியமாகிய அநுபலபதி) என்று கர்மதாரேசமாசம் (பணபுதொகை) அங்கீகரிததிருப பதால் மேற்சொனன தோஷமின்று.

அநுபலபதிக்கு யோககியதையாவது தர்ககித (தர்ககத் தாலறியப்படுகினற) பிரதியோகியினிருபபால பிரசஞ்கித (ஆபாதனஞ்செயயபபட்ட) பிரதியோகியோடு கூடியிருககுந தனமை. எதன அபாவம கிரஹிககப்படுகினறதோ அந்த அபா வததிறகு எது பிரதியோகியோ அதனிருபபினால அதிகரணத தில் தர்க்கிக்கபபடட பிரசஞ்சன (ஆபாதன) யோககியமான பிரதியோகியின உபலபதி சொரூபம எநத அநுபலபதிக்கிருக கினறதோ அந்த அநுபலபதிககு யோககியததுவமெனபது பொருள.

அஙஙனமனறே, மிகுநதபிரகாசமுளள பூதலததில கட மிருககும்போது கடாதிகள உபலமபம (பிரதியக்ஷ)மாகுமெ னறு ஆபாதனம் (இது இருநதால் அது காணபபடுமெனபது) சமபவிபபதால அபபடிபபட்ட பூதலததிலுளள க டாபாவமானது அநுபலபதியா லறியபபடுகினறது இருட் டில் அப்படிபபட்ட ஆபாதனம சமபவிககாமையின் (அபா

வம) அநுபலபதியாலறியததககதன்று. ஆகையாற்றன் ஸ்தம பததிலும பிசாசமிருநதால ஸ்தமபமபோல் பிரததியக்ஷமாதல வேணடும். (அஙஙனம் பிரத்தியக்ஷமாகாமையின) அதன அபா வம அநுபலபதியினலறியபபடுகினறது.

ஆதமாவில தர்மாதிகளிருபபினும் அவை அதீநதிரிய மாகையின மேறகூறிய உபலமப ஆபாதனம சமபவிககா மையின தர்மாதிகளின அபாவம அநுபலபதியாலறியததக்க தன்று.

(ஆ). மேறகூறிய வகையாக அதிகரண (இட)த்திற்கும் இந்திரியததிற்கும சம்பந்தமுணடாகுமிடதது அபாவம் அநு பலபதியாலறியப்படுகினறதென றஙகீகரிககபபட்டது ஆணடு இநதிரியமே அபாவாகாரமான விருததியிலும காரணம. (ஏனெ னின) இநதிரியமிருநதால அபாவம கிரஹிககபபடுகினறது. இந்திரியமிராவிட்டால் அபாவம கிரஹிககபபடுகிறதில்லை. 58.

100 (ச). அதுகூடாது. அநத அபாவததின் பிரதியோகி யின அநுபலபதியும் அபாவ ஞானததில காரணமாகககிருபத (சிதத)மாயிருககினறமையின அதில காரணததுவமாததிரம் கறபிககபபடுகினறது.

இநதிரியததிற்கு அபாவததுடன சமபநதமிராமையின (இநதிரியம) அபாவ ஞானததில ஹேதுவாகமாட்டாது. இந திரியததின அந்வயவியதிரேகமானது அதிகரண ஞானததால் க்ஷீணததையடைநதுவிட்டமையின அநநியதா சிததமா (பிறி தோராற்றாறபெறபபடுவதா)யிருக்கினறது

(ஆ). பூதலததிற கடமில்லை எனறு அபாவஞானம் வரு மிடததுப பூதலாமசததில அநதஞானம பிரத்தியக்ஷமாமென் டது உபயமதததிலும சிததமாம. ஆகையாலஆணடு விருததி

யின நிர்க்கமனம் (வெளிபபடுதல்) அநுதியாவசிகமாம. பூதலா வசசின்ன சைதனனியததோடு கூடிய கடாபாவாவசசின்ன சைதன்னியநதிறகும பிரமாதாவோடு அபேதமிருபபதால அதவைத சித்தாநதததிலும கடாபாவம பிரததியக்ஷமாகட்டுமே. 59.

101. (அ) நீ கூறியது உணமைதான அபாவஞானம் பிரத்தியக்ஷமாயிருபபினும அநதஞானததிறகுக காரணமான அநுபலபதி பிரமாணாநதரமாம்

பலஞானம பிரத்தியக்ஷமாயிருநதால அதறகுக காரணமான பிரமாண மும பிரததியக்ஷமாயிருககவேணடுமெனனும் நியமமிலலை.

'நீ தசமனாயிருககினறாய' என்றற்றொடக்கததுவாக்கியததினலுணடாகினற ஞானம பிரததியக்ஷமாயிருநதாலும் அசகரணமான வாககியம பிரததியக்ஷ பிரமாணததிலும வேறுபிரமாணமாக அஙகீகரிககபபடடிருககிறது. பல(ஞான)ததில பேதமினறிப பிரமாணபேதமெஙஙனம பொருநதுமெனறு ஆக்ஷேபிபபையாயின அது பொருநதாது, (ஏனெனின) விருததியின பேதததினலேயே பிரமாணபேதம பொருநதிவிடுகினறமையின ஆகவே கடாதி அபாவாகாரமான விருத்தி இநதிரிய ஜனனியமனறு, இநதிரியததிறகும (அபாவ)விஷயததிற்கும சமபநதமிராமையின, ஆனல கடாநுபலபதியாகிய பிரமாணாநதரததினலுணடாகினறது ஆகையால, அநுபலபதி பிரமாணாந்தரமாம.

(ஆ). அநுபலபதி பிரமாணாநதரமாக அஙகீகரிககுமிடததது அபாவஞானம பிரததியக்ஷமாம (அஙஙனம பிரததிய

க்ஷமாக அங்கீகரிக்கின) கடத்தோடு கூடின பூதலத்திற கட மில்லை யெனனும் பிராந்தியும பிரத்தியக்ஷமாக உணடாக வேண்டும. அந்தபபிராந்தியிலும் விஷயமான கடாபாவத்தை அநிர்வசநீயமாகவும அங்கீகரிததல வேண்டும. அஃதிஷ்ட மென்று சொல்லுதல கூடாது. அபாவத்திறகு மாயையை உபாதானமெனறு சொல்லுமிடத்து அபாவததனமை பொருந்தாது. மாயை (அபாவத்திறகு) உபாதான மனறெனறு சொலலுமிடததுச சகலகாரியஙகடகுமமாயை உபாதானமென னுமகொளகை பொருநதாமற போயவிடும. 60

102 (ச) கடத்தோடுகூடியபூதலததில, கடமிலலையெனனும் பிராநதியுண்டாகினறது. அநதபபிராநதியின விஷயம அநதக காலததிலுணடான கடாபாவமனறு. ஆனால பூதல ரூபாதி களிலுளள லௌகிகமான கடாபாவம பூதலததிலாரோபிககப படுகினறது. ஆகையால (க) அநியதாககியாதியே.

ஆரோபபியமானது சமீபததிலிருககு மெலலாவிட ஙகளிலும அநியதாககியாதியே யென்று வியவஸ்தை பணணபபடடிருககினறது அல்லது பிரதியோகியோடு கூடியவிடததில அதன அபாவப்பிராநதி யுணடாகினறது. அதறகு (பிராந்திககு) விஷயமான அபாவம அநிர்வசநீயமாக வே யிருககட்டும. ஆனாலும அதற்கு (அபாவததிறகு) உபா தானம் மாயைதான. உபாதான உபாதேயஙகடகு (முதற்

---

(க) ஓரிடததிலிருககினற பதாாததம வேறோரிடததிறதோற் றுவது அந்நியதாக்கியாதியாம அது ஸதிரீயின் கையிலிருககினற வெள்ளி எதிரிலிருக்கும கிளிஞசிலிறதோறறுவதுபோலாம.

காரணகாரியங்கட்கு)நெருங்கிய சாதிருசியம் (ஒப்புமை) வேண்டியதின்று, நூலுக்கும் ஆடைக்கும் நூற்றன்மையினாலேயும் ஆடைத்தன்மையினாலேயும்பேதமிருக்கின்றமையின். (மிருந்த சாதிருசியமில்லாவிடினும்) மாயைக்கும் அநிர்வசநீயமான கடத்திற்கும் மித்தியாத்துவமான கிஞ்சித் சாதிருசியமிருக்கின்றது இங்ஙனம் அங்கீகரிக்காவிட்டது வியாவகாரிகமான கடாதிகளின் அபாவத்தைக்குறித்து எங்ஙனம் மாயை உபாதானமாகக் கூடுமென றேன்சங்கிக்கவில்லை?

(ஆ). (பரஸ்பர) விஜாதியமான வஸ்துக்களுக்கு உபாதான உபாதேயத்தன்மையை அங்கீகரிக்கின பிரஹ்மமே ஜகத்திறகு உபாதானமாகும் (மாயைவேண்டுவதின்று). 61.

103. (ச). பிரபஞ்சபிராந்திக்கு அதிஷ்டானமாயிருப்பதினாலேயே பிரஹ்மமே ஜகத்திற்கு உபாதான காரணமெனப், திஷ்டாந்தன பரிணாமித்துவமாகிய உபாதானத்தன்மை நிரவயவமான பிரஹ்மத்திற்குப் பொருந்தாது. ஆகவே, பிரபஞ்சத்திற்குப் பரிணாமி உபாதானம் மாயை; பிரஹ்மமன்று. இங்ஙனம் சித்தாந்தம். அதிகமாய்க் கூறுவதேற்றிற்கு?

அபாவம்.

104 அபாவம்: பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், அந்நியோந்நியாபாவமென நான்குவகைத்தாம். அவற்றுள்,

I. பிராகபாவம்.

மிருத்(மண்)முதலிய காரணத்தில கடமுதலிய காரியங்கள் உற்பத்திக்குப்பிராக(முன்னர்)இல்லை. இதுதான பிராகபாவம்.

## II பிரத்துவம்சாபாவம்.

இந்தப்பிராகபாவம் கடம் உண்டாகப்போகின்றதென்னும் ஞானத்திற்கு விஷயமாயிருக்கின்றது. ஆண்டே கடத்தைத் தண்ட முதலியவற்றாலடித்த பிறகு உண்டாகின்ற அபாவம் எதுவோ அதுதான் பிரத்துவம்சாபாவம்.

அந்தத்துவம்சத்திற்கும் தனக்கதிகரணமான கபாலத்திற்கு நாசம் வரும்போது நாசமுண்டாகின்றது.

(ஆ) இங்ஙனங்கூறின் (கடத்துவம்சத்திற்குத் துவம்சம் ஒப்புக்கொள்ளின்) கடமுண்டென்றேற்படும் 62.

105 (ச) கடத்துவம்சத்தின் துவம்சமும் கடத்தையேபிரதியோகியாக வுடைத்தாயிருப்பதால் (நீ கூறிய தோஷம் வர மாட்டாது)

இங்ஙனம் ஒப்புக்கொள்ளாவிட்டதுப் பிராகபாவத்தின் துவம்சமாகியகடம் நாசத்தையடையும்போது பிராகபாவமுண்டாதல்வேண்டும்

(ஆ) இங்ஙனமாயினும் யாண்டுத்துவம்சத்திற் கதிகரணம் நித்தியமோ ஆண்டு எங்ஙனம் துவம்சத்திற்கு நாசமுண்டாகும்? 63.

106 (ச) அப்படிப்பட்ட அதிகரணம் சைதன்னியத்தினும் வேறு? II. சைதன்னியமேயா?

1. சைதன்னியத்தினும் வேறாயின அப்போது அது (அதிகரணம்) நித்தியமாகாது, என்னெனின் பிரஹ்மபின்னமெல்லாம் பிரஹ்மஞானத்தினால் நிவிர்த்தியடைகின்றனவென்று சொல்லப்போகின்றமையின.

ii. துவம்சாதிகரணம் சைதன்யமென்று கூறின் அப்போது சைதன்னியத்தினும் துவம்சம் வேறென்று சித்திக்கவில்லை. ஆரோபிதத்தைப பிரதியோகியாகவுடைய துவம்சம் அதிஷ்டானத்திற் றேனறுவதால அதிஷ்டான மாத்திரமாயிருககின்றது கற்பிககபபட்ட வஸ்துவினநாசம அதிஷ்டான சொரூபமா யிருககினறதென்று சொல்லபபட்டிருககின்றது. இங்ஙனமே சுகதிருப்பிய (கிளிஞ்சிலிற்றோன்றிய வெள்ளி) நாசமும அதிஷ்டானமாகிய இதமவச்சின்ன சைதன்னியமே

## III. அத்தியந்தாபாவம்.

107. எந்த அதிகரணத்தில் எதன அபாவம மூககாலத்திலுமிருககின்றதோ அஃது அத்தியந்தாபாவம் எஙஙனம ?

வாயுவினகண ரூபஅத்தியந்தாபாவ மிருககின்றது அதுவும் கடாதிகளைபபோன்று துவம்சப்பிரதியோகி (அநித்தியந்)தான.

## IV அந்நியோந்நியாபாவம்

108. இது இதுவன்று என்னும ஞானத்திற்கு விஷயமாயிருககினற அபாவம அந்நியோன்னியா பாவமாம இந்த அபாவந்தான,விபாகமென்றும,பேதமென்றும, பிரதகத்துவமென்றும வியவகரிககபபடுகினறது.

பேதத்தினும் வேறாக விபாகாதிகளுண்டென்பதிற் பிரமாணமிலலை

இந்த அந்நியோந்நியாபாவம் அதிகரணம சாதியாயிருந்தால் அது சாதி (உறபத்தியுடையது) எஙஙனம ?

(அ-கை) அச்சமாதியில நிலேத்தவனுககு லக்ஷணம யாதெனறு ஆசஙகிததுக கூறுகினறூா —

त्रिशून्यं यो विजानीयात् स तु मुच्येत बन्धनात् ॥१३॥

முசசூநியத்தையும எவனறிகின்றூனே அவன் அபபொழுதே பாததகதினின்றும விடுபடுகினறூன. (கங)

இதனூல ஜாக்கிரமுதலிய மூனறவஸதைகளின சூநியத்தனமையும காடடபபட்டது.

(அ-கை) இவ்வாறூன ஜீவன்முகதனுககுத் தேசமுதலியவறறில அபிநிவேச மிலலேயெனக கூறுகினறூா.—

स्वयमुच्चालिते देहे देही न्यस्तसमाधिना ।
निश्चलं तं विजानीयात् समाधिस्थस्य लक्षणम् ॥१४॥

தானே (அநாதி பிராரபதகாமவாசனே வசததால) சஞசரிககும தேகததில தேகியா (ஜீவனு)னவன பொருநதிய சமாதியினூல நிசசலமான அநதாகூவரனே யறிகினறூன. இது சமாதியிலிருபபவனது லக்ஷணம (கச)

(அ-கை) ஞேயததிலும ஆத்மலக்ஷணததைதக கூறுகினறூா —

अमात्रं शब्दरहितं स्वरव्यञ्जनवार्जितम् ।
बिन्दुनादकलातीतं यस्तं वेद स वेदवित् ॥१५॥

மாத்திரை (குறில் நெடில் அளபெடை) யினறியதும், சப்தமினறியதும், உயிர்மெய்களினறியதும், பிந்து (அநுஸ்வார) நாத (தொண்டையைச் சுருக்கியபோது உண்டாகும் மணியின் ஓசையைப்போன்ற அநுகரண ஒலி) கலை (நாதத்தின் ஏகதேசம்) களுக்கப்பாற்பட்டதுமாகிய அதனை அறிந்தவன் எவனோ அவன் வேதமுணர்ந்தவனாவன். (௧௫)

(அ-கை) இவ்வாறு அடைந்த ஆத்மதத்துவஞானமுடையவனுக்கு அசம்பாவனை விபரீதபாவனை முதலியவை நீங்கிய போது செய்யத்தக்கது ஒன்றுமில்லை யென்று கூறுகின்றார்.--

प्राप्ते ज्ञानेन विज्ञाने ज्ञेयं च हृदि संस्थिते ।
लब्धशान्तिपदे देहे न योगो नैव धारणा ॥ १६ ॥

(சாஸ்திராசாரிய வுபதேசத்திலுண்டாகும்) ஞானத்தினால் பிரஹ்மஞான மடைந்தகாலத்தும், ஞேயம் இதயத்தில் பிரத்தியக்ஷமாகுங்காலத்தும், தேகோபாதியுள்ளவனும் ஜீவன் சாந்திபதத்தை யடைந்தகாலத்தும் யோகமில்லை; தாரணையுமில்லை. (௧௬)

(அ-கை) இவ்வாறு ஆத்மதத்துவ அபரோக்ஷஞானி முக்தனாய் ஈசுவரனேயாகின்றான் என்று அவனுடைய சொரூபத்தைக் கூறுகின்றார்:—

यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।
तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः ॥ १७ ॥

எந்த ஸ்வரம் வேதத்தின் முதலிற சொல்லப்பட்டிருக்கின்றதோ, எது வேதத்தின முடிவிலும பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கின்றதோ, பிரகிருதியின லயமாகிய அதற்கு (பிரணவத்திற்கு) எது மேலானதாயிருக்கின்றதோ அது மகேசுவரனும். அந்த மகேசுவரனேயாவன் அவ்வாத்மதத்துவஞானி, வேறல்லன எனபது பொருள். (கஎ)

(அ-கை) ஆத்மதத்துவாபரோக்ஷ அநுபவமுணடாவதறகுமுன் எந்த எநதச் சாதனங்கள சாதிக்கத்தக்கனவோ, ஞானம கிடைத்தபின எநதச் சாதனங்கள் அவசியமன்றோ, அவை எலலாவறறையும திருஷ்டாநதவாயிலாகப பிரகடனஞ செயகின்றா —

नावार्थी हि भवेत्तावत् यावत्पारन्नगच्छाति ।
उत्तीर्णे तु सरित्पारे नौकायाः किम्प्रयोजनम् ॥ १८ ॥

எதுவரையில கரையைச் சேரவிலலையோ அதுவரையில கப்பலை விரும்பியவனுக்கு. கரையேறியபின கப்பலால என்ன பிரயோஜனம? ஒன்றுமிலலை எனபது பொருள.

அதுபோல இவருக்கும் ஆத்மாபரோக்ஷ முணடானபின சாஸ்திரமுதலிய சுமையால என்ன பிரயோஜனமெனபது தாற்பரியம. (கஅ)

(அ-கை) அதனையே வேறுவிதத்தால திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

ग्रन्थमभ्यस्य मेधावी ज्ञानविज्ञानतत्परः ।
पलालमिव धान्यार्थी त्यजेत् ग्रन्थमशेपतः ॥ १९ ॥

சாஸ்திரத்தை யப்பியசித்து மேதாவியான (சாமானிய) ஞான விஞ்ஞான(விசேஷ அநுபவ) முடையவன் தானிய விருப்புடையோன தாளை யெரிந்துவிடுவதுபோலச் சாஸ்திரங்க ளெல்லாவற்றையும விடவேண்டும். (௧௯)

(அ-கை) இதுவுமது:—

उल्काहस्तो यथा कश्चित् द्रव्यमालोक्य तांत्यजेत् ।
ज्ञानेनज्ञेयमालोक्यज्ञानम्पश्चात्परित्यजेत् ॥ २० ॥

கொள்ளிக்கட்டையைக் கையிலுடையவன அந்தகாரத்திலுள்ள ஒர பதார்த்தத்தைப் பார்த்துக்கொண்டு அதனை யெரிந்துவிடுவதுபோல ஞானத்தால ஞேயத்தையறிந்து பின ஞானத்தை விடவேண்டும. (௨௰)

(அ-கை) அபரோக்ஷ ஞானம உண்டாகவே பிரயோஜனமில்லாமையால் சாதனம் தள்ளத்தக்கதாமென்று மிதனை வேறு திருஷ்டாந்தத்தினாலும கூறுகின்றார்.—

यथामृतेन तृप्तस्य पयसा किम्प्रयोजनम् ।
एवन्तत्परमं ज्ञात्वा वेदै र्नास्ति प्रयोजनम् ॥ २१ ॥

அமுதத்தினல திருபதியடைநதவனுக்குப பாலினல் என்னபிரயோஜனம்? ஒனறுமிலலை அதுபோல அநத மேலான வஸதுவை யறிநதால அதன்பின வேததததினல பிரயோஜன மிலலை. (உக)

(அ-கை) தததுவ ஞானிகளுக்கு விதிநிஷேதாதி காததவவியஙகள சிறிதுமிலலை யெனறு ஸ்ரீ பகவான ஆாசசுன னுக்கு உபதேசஞ்செயகிருா:—

ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।
न चास्ति किञ्चित्कर्तव्यमास्तिचेन्न स तत्त्ववित् ॥२२॥

ஞானமிாதததால திருபதியடைநத கிருதகிருததியஞகிய யோகிக்குச சிறிதும காததவவியமிலலை. இருக்குமாயின அவன தததுவஞானியலலன. (எ-று). (உஉ)

(அ-கை) ஆததஞானமினறிக கேவலம வேதததைப படிததலமாத்திரததால் அறியபபடுநதனமையிலலை. ஆனல வேதததின தாறபரியத்தைக கோசரிககும பிரஹமஞானததினலேயே வேதவிததுததனமையாம எனறு கூறுகினருா —

तैलधारामिवाच्छिन्नं दीर्घघण्टानिनादवत् ।
अवाच्यं प्रणवस्यार्थं यस्तं वेद स वेदावित् ॥ २३ ॥

இடைவிடாத தைலதாரையைப போலும நீணட மணியோசையினைப போலும அவாசசியமான பிரணவத்தின அாததததை எவன அறிகிருனே அவனே வேதமுணாநதவன(உங)

(அ-கை) தத்துவஞானியின் சமாதிசாதனங்களைக் கூறுகின்றார்.—

आत्मानमरणिं कृत्वा प्रणवं चोत्तरारणिम् ।
ध्याननिर्मथनाभ्यासाद्देवंपश्येन्निगूढवत् ॥ २४ ॥

ஆத்மாவை அரணியாக்கிப் பிரணவத்தை மேலரணியாக்கித் தியானமாகிய கடைதலை அப்பியசித்தலால் மிக்க ரகசியமாயுள்ள தெய்வத்தைப் பார்க்கலாம். (உ௪)

(அ-கை) அபரோக்ஷாநுபவ பரியந்தம் சுயம்பிரகாச பிரஹ்மதாரணையைக் கூறுகின்றார்.—

तादृशं परमं रूपं स्मरेत्पार्थ ह्यनन्यधीः ।
विधूमाग्निनिभं देवं पश्येदत्यन्तनिर्मलम् ॥ २५ ॥

பார்த்தா! புகையின்றிய நெருப்பைப்போன்ற பிரகாசமுள்ளதும் அத்தியந்த நிர்மலமானதுமான தெய்வத்தைப் பார்க்குமவரையில் அத்தன்மைய பரமவடிவத்தை அந்நியமின்றிய புத்தியுள்ளவனாய்ச் சிந்திக்கவேண்டும். (உரு)

(அ-கை) பிரஹ்மசொரூபத்தைப் பிரகடனஞ்செய்யும் நிமித்தத்தால் பாவனைக் கிரமத்தினையே விரிக்கின்றது.—

दूरस्थोऽपि न दूरस्थः पिण्डस्थः पिण्डवर्जितः ।
विमलः सर्वतो देही सर्वव्यापी निरञ्जनः ॥ २६ ॥

தேகி தூரத்திலிருப்பவனுயிருந்தும (இந்திரியங்களுக்குப் பரோக்ஷம்போலிருக்கின்றவனுயினும) தூரத்திலிருப்பவனல்லன். (பரோக்ஷத்திலிருப்பவனுகான; என்றும் அபரோக்ஷனே,) பிண்டத்திலிருப்பவனுயினும (சரீர சம்பந்தாத்தியாசத்தால பரிச்சின்னன்போற் ருேற்றினும) பிண்டத்திலிருப்பவனல்லன. சரீரசம்பந்தாத்தியாசமின்றிய வனுகின்ருன. தேகியானவன எவ்வாற்ருனும நிர்மலனுயும சாவவியாபியாயும நிரஞ்சனனுயு மிருக்கின்ருன். (உகா)

(அ-கை) தேகாத்தியாசத்தினுல தோற்றும கர்த்திருத்துவ போகதிருத்துவமுதலியன ஆத்மாவிற கில்லையெனக் கூறுகின்ருா —

कायस्थोऽपि न कायस्थः कायस्थोऽपि न जायते ।
कायस्थोऽपि न भुञ्जानः कायस्थोपि न बध्यते ।
कायस्थोपि न लिप्तस्स्यात्कायस्थोपि न वध्यते ॥ २७ ॥

தேகி காயத்திலிருப்பவனுயினும காயத்திலிருப்பவனல்லன் (சரீரநிமித்தகமான பந்தமில்லாதவனுகின்ருன). காயத்திலிருப்பவனுயினும (ஜன்மாதிகளேயுடைய சரீரத்திலிருப்பவனுயினும) பிறப்பதில்லே. காயத்திலிருப்பவனுயினும (போகசாதனவடிவ சரீரத்திலிருப்பவனுயினும) புசிப்பதில்லே. (பந்தத்திற்கேதுவான) காயத்திலிருப்பவனுயினும கட்டப்படுகிறதில்லே. காயத்திலிருப்பவனுயினும் (சுகதுக்காதி ஏதுவான தேக சம்பந்தமுடையவனுயினும) பற்றுள்ளவனுதலில்லே (அச்

சம்பந்தமின்றியவனா யிருக்கின்றான்). காயத்துள்ளவனாயினும் (மரண தாமதத்தையுடைய தேகத்திலிருப்பவனாயினும்) வதிக்கப்படுவதில்லை (கொல்லப்படுகிறதில்லை). (௨எ)

(அ-கை) எதன் அப்பியாசத்தினால் ஆத்மயோகநிஷ்டா சமாசாரமுண்டாயிருக்கின்றதோ, அதன் அப்பியாசத்தால் அங்கேயே தேகமத்தியத்தை முதலியவற்றில் ஆத்மாவிருக்கத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

तिलमध्ये यथा तैलं क्षीरमध्ये यथा घृतम् ।
पुष्पमध्ये यथा गन्धः फलमध्ये यथा रसः ॥
काष्ठाग्निवत् प्रकाशेत आकाशे वायुवच्चरेत् ॥ २८ ॥

எள்ளினகண் எண்ணெயைப்போலும், பாலினுள் நெய் போலும், புஷ்பமத்தியில் வாசனைபோலும், பழத்தில் இரசம்போலும், கட்டையில் அக்கினிபோலும் பிரகாசிக்கின்றது. எள்ளைப் பிழிந்தபோது எண்ணெயும் பாலைக் கடைந்தபோது நெய்யும் புஷ்பம் மலர்ந்தபோது வாசனையும் கட்டையைக் கடைந்தபோது அக்கினியும் வெளிப்படுவதுபோல ஆத்மா அப்பியாசத்தால் வெளிப்படுகின்றது என்பது பொருள். ஆகாயத்தில் வாயுபோல் எங்கும் வியாபகமாயிருந்தும் சலிக்கின்றது. (௨அ)

(அ-கை) அதனையே தார்ஷ்டாந்தத்தில் செவ்வையாகப் பொருத்துகின்றார்:—

तथा सर्वगतो देही देहमध्ये व्यवस्थितः ।
मनःस्थो देहिनां देवो मनोमध्ये व्यवस्थितः ॥ २९ ॥

அப்படியே எல்லாவற்றினுமுள்ள தேகியாகிய ஜீவ்னுனவன் (நாநாவாகிய திரியக்குமுதலிய) தேகமத்தியி லிருக்கின்றான். (தேகபேதத்தால் வெவ்வேறான) தேகிகளது மனதிலுள்ள தேவன மனதினமத்தியில (சாக்ஷிவடிவமாக) நிலைத்திருக்கின்றான். (உக)

(அ-கை) அத்தன்மைய பிரஹ்மாபரோக்ஷத்தால விடுபடுகின்றாகள.—

मनःस्थं मनमध्यस्थं मध्यस्थं मनवर्जितम् ॥
मनसा मन आलोक्य स्वयं सिध्यन्ति योगिनः ॥ ३० ॥

மனதிலுள்ள(மனதில வளைபட்ட)தும, மனமத்தியிலுள்ளதும (மனதிற்குச் சாக்ஷிவடிவமாயுள்ளதும), மத்தியிலுள்ளதும (சாவசாக்ஷிவடிவமும), (சங்கற்பவிகற்ப) மனமிளறியதுமான மனதை (ஞானவடிவ ஆத்மாவை) பரிசுத்த மனதால பார்த்து [அதனை விஷயிக்கும் அபரோக்ஷ சரம (கடைசி) விருத்தியை யடைந்து] யோகிசுவரா(ஞானி)கள் தாமே அநுபவசித்தியுடையவராகின்றனர். அவித்தையின் நீக்கத்தால முக்தாக ளாகின்றாகள் என்பது பொருள். (ங0)

(அ-கை) இபபோது முற்கூறப்பட்ட யோகிகளின் லக்ஷணத்தை வாணிக்கின்றா:—

आकाशं मानसं कृत्वा मनः कृत्वा निरास्पदम् ।
निश्चलन्तं विजानीयात् समाधिस्थस्य लक्षणम् ॥ ३१ ॥

மனதை ஆகாய(நிருவிகற்ப)மாக்கி, சங்கற்பவிகற்பவடிவமனதைப் பற்றி(சார்பி)லலாததாக்கி நிச்சலமான கிரியையினறிய ரசனாக அவனை யறியவேணடும். இதுவே சமாதியுடையவன இலக்கணம். (நூக)

(அ-கை) ஆரூடன் (சொரூபத்திலேறியவன்) லக்ஷணம் சொல்லப்பட்டது. இனி ஏறும விருப்புடையோனது (அப்பியாசியின) உபாயத்தைக் கூறுகினறார்:—

योगामृतरसं पीत्वा वायुभक्षः सदासुखी ।
यममभ्यसते नित्य समाधिर्मृत्युनाशकृत् ॥ ३२ ॥

யோகாமிருத ரசத்தைக் குடித்து வாயுவைப புசிக்கும சதாசுகியானவன நித்தியமும மனோநிக்கிரகத்தை யப்பியசிக்கவேணடும். அது அமிர்தாகாரவடிவமான சமாதி யெனப்படும். (நூஉ)

(அ-கை) அத்தன்மைய சமாதியிலுள்ளவன லக்ஷணத்தைக் கூறுகினறார்:—

ऊर्द्ध्वशून्यमधःशून्यं मध्यशून्यं यदात्मकम् ।
सर्वशून्यं स आत्मेति समाधिस्थस्य लक्षणम् ॥ ३३ ॥

எதன் சொரூபம மேற்சூனியமும் (மேலிடப் பரிச்சேதமின்றியதும) கீழ்ச்சூனியமும (கீழிடப்பரிச்சேதமின்றியதும) நடுச்சூனியமும் (நடுவிடப்பரிச்சேதமின்றியதும) சர்வசூனியமு(தேசகாலாதி பரிச்சேதமின்றியது)மா யிருக்கினறதோ,

அது ஆத்மாவென் றிருத்தல சமாதியிலிருப்பவனது இலக்ஷணமாம். (கூகூ)

(அ-கை) இந்த ஏகாந்ததிருஷ்டியுடையவனது விதிநிஷேதங்கடந்ததன்மையைக் கூறுகின்றார்.—

शून्यभावितभावात्मा पुण्यपापैः प्रमुच्यते ॥ ३४ ॥

யாவும் சூனியமாய்ப் பாவிக்கப்படுவதெனும் கருத்துடைய ஆத்மா (ஞானி) புண்ணிய பாவங்களினின்றும் விடுபடுகின்றான். (கூச)

(அ-கை) இவ்வாறு பகவானால் உபதேசிக்கப்பட்ட சமாதியில் விரோதத்தையும் அசம்பவத்தையும் கூறுகின்றார்:—

अर्जुन उवाच, अदृश्ये भावना नास्ति दृश्यमेतद्विनश्यति ।
अवर्णमस्वरं ब्रह्म कथं ध्यायन्ति योगिनः ॥ ३५ ॥

அர்ச்சுனன் — அதிருசியத்தில் பாவனையி(தியானமி)ல்லை; இத்திருசியமோ நசிக்கின்றது எனின், வர்ணரூபமின்றியதும் ஸ்வர (சப்த) மின்றியதுமான பிரஹ்மத்தை யோகிகள் எங்ஙனம் தியானிக்கின்றார்கள்? (கூரு)

(அ-கை) உன்னாற்சொல்லப்பட்டது எதனாற் பொருந்துகின்றதோ அத்தன்மைய சாவயவ மூர்த்திமுதலியவற்றையுடைய தியான் மன்று யாம் கூறியது; ஆனால் நிர்விசேஷப பிரஹ்மத்தில் நிர்மலம் நிஷ்களம் என்னும் இவைமுதலியவற்றால் வேதாந்தஜன்ய விருத்திக்குக் கோசரமாந்தன்மை

யால் அது சம்பவிக்கிறதென்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

श्रीभगवानुवाच, ऊर्ध्वपूर्णमधःपूर्णं मध्यपूर्णं यदात्मकम् ।
सर्वपूर्णं स आत्मेति समाधिस्थस्य लक्षणम् ॥ ३६ ॥

ஸ்ரீ பகவான்:— எதன் சொரூபம் மேலும் பூரணம், கீழும் பூரணம், நடுவும் பூரணம், எல்லாம் பூரணமா யிருக்கின்றதோ அதுவே ஆத்மாவென்றிருத்தல் சமாதியிலிருப்பவனது லக்ஷணம். (௩௬)

(அ-கை) அங்ஙனமாயின் இந்த சாலம்பன யோகமா? நிராலம்பன யோகமா? என்று இருவகை விகற்பமுண்டாகின்றதென்று தோஷத்தை ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

अर्जुनः :—सालम्बस्याप्यनित्यत्वं निरालम्बस्य शून्यता ।
उभयोरपि दोपत्वात् कथन्ध्यायन्ति योगिनः ॥ ३७ ॥

அர்ச்சுனன் — சாலம்பத்தி(மூர்த்தியுடையத)ற்கு அநித்தியத்துவமும் நிராலம்பத்தி(மூர்த்தியாகாரமின்றிய)ற்குச் சூனியத்துவமு(முயற்கொம்பு போன்மையு)ம் உளது. இரண்டும் தோஷமுடையதாயிருத்தலின் யோகிகள் எங்ஙனம் தியானிப்பார்கள்? (௩௭)

(அ-கை) யாகம் தானமுதலியவற்றால் சுத்தியடைந்த அந்தக்கரணமுடையவனுக்கு வேதாந்தஜன்ய நிர்விசேஷப்

பிரஹ்மகோசர விருத்தி சமபவித்தலால் சூநியத்தன்மை யிலலையென்னும் அபிப்பிராயததால கூறுகின்ருா:—

श्रीभगवानुवाच, हृदयं निर्मलं कृत्वा चिन्तयित्वा ह्यनामयम् ।
अहमेकमिदं सर्वमिति पश्येत्परं सुखी ॥ ३८ ॥

ஸ்ரீ பகவான்:— இதயத்தை நிாமலமா (ஞானவிரோதியான ராகாதிதோஷமினறியதா)ககி அநாமயததை(ாசுவரனை)ச சிநதிததுப பரமசுகியானவன் "இவ்வெலலாமுமயானே (எனககநியமொனறுமிலலை)" எனறு பாாககககடவன. (௩அ)

(அ-கை) ஆத்தவடிவமாயுளள ஜகத்து சபததால நிருபிககபபடுநதனமையினுலும, சபதம வாணவடிவமாகவும, வாணஙகள பிரணவவடிவமாகவும, பிரணவம பிநதுவடிவமாகவும பிநது நாதவடிவமாகவும, நாதம பிரஹமத்தியானஸதானவடிவமாகிய கலைவடிவமாகவும் பிரஹமததில சமனவயி (விவாததமாயச் சமபநதி) த்திருததலின, பிநதுநாதகலாதீதமாயவுளள பிரஹமத்தைதத தியானிககவேணடுமெனறு பகவானுற சொலலபபடடது. அதனை வேறுபிரிததறிய அாசசுனன் கேட்கினறுன:—

अर्जुन उवाच, अक्षराणि समात्राणि सर्वे बिन्दुसमाश्रिताः ।
नादेन भिद्यते बिन्दुः स नादः केन भिद्यते ॥ ३९ ॥

அர்ச்சுனன்:—மாத்திரைகளோடு கூடிய அகாராதி அக்ஷரங்கள் யாவும பிந்துவை ஆசிரயித்திருக்கின்றன. நாதத

தால் பிந்து பேதிக்கப்படுகின்றது. அந்தாதம் எதனால் பேதிக்கப்படுகின்றது? (ருக)

(அ-கை) இவ்வாறு வினவப்பட்டவராகிய பகவான் பிரஹ்மத்தில பொருந்துகின்றதென்று கூறுகின்றார்:—

श्रीभगवानुवाच, अनाहतस्य शब्दस्य तस्य शब्दस्य च ध्वनिः ।
ध्वनेरन्तर्गतञ्ज्योतिर्ज्योतिरन्तर्गतं मनः ॥
तन्मनो विलयं याति तद्विष्णोः परमं पदम् ॥ ४० ॥

ஸ்ரீ பகவான்.—எந்த அநாகத (பராவஸ்தையடைந்த பிரணவ) சப்தத்தின் தொனி (சப்தம்) கேட்கப்படுகின்றதோ அத்தொனியினுள் ஜோதி (கலை) யுளது. அந்த ஜோதியினுள் மனமுளது. அந்த ஜோதியில மனம ஒடுங்குகின்றது. அது (அவ்வொடுங்கிய இடம) விஷ்ணுவின (வியாபகமான ஆதமாவின்) பரமபத (மேலான சொரூப) மாம. (சுய)

(அ-கை) மீண்டும அதனையே கூறுகின்றார —

ओंकारध्वनिनादेन वायोः संहरणान्तिकम् ।
निरालम्बं समुद्दिश्य तत्र नादो लयङ्गतः ॥ ४१ ॥

ஓங்காரததொனிவடிவ நாதத்தோடு வாயுவடங்குமவடிவினதாகிய நிராலமப (நிர்விசேஷ)ப பிரஹ்மததை இலக்ஷியஞ்செய்ய ஆண்டு நாதம லயமடைகின்றது. (ஆண்டு உள்ளதனை மேலாகிய பிரஹ்மபத மெனபா.) (சுக)

(அ-கை) இவ்வாறு தியானப்பிரகாரத்தினால் சுத்தமாகிய அந்தக்கரணமுடைய ஆரூடனுக்குப் புண்ணியபாவங்களிரண்

டும் நீங்கப் பிரஹ்மசாயுஜ்யம் சொலலபபடவே முமுக்ஷு-வுக்குப பரிசுததமிலலாத அநதக்கரணததனமையால பிரஹ்ம சாயுஜயம சமபவியாததாகவே, தாமாதாமங்கள் நீங்குதல சம்பவியாமையால் அதனவாயிலாக ஜநமமரணாதிகள அவசியம வரத்தக்கனவாமென்று மனதில நிசசயிததுப புநராவிருததியின தன்மையை அரச்சுனன கேடகின்றான:—

अर्जुन उवाच, भिन्ने पञ्चात्मके देहे गते पञ्चसु पञ्चधा ।
प्राणैर्विमुक्तदेहे तु धर्माधर्मौ क्व गच्छतः ॥ ४२ ॥

அர்ச்சுனன்:— பஞ்சபூதவடிவமான ஸ்தூலதேகததில பஞ்சபூதஙகளும ஐநதுவகையாயப பிரிக்கப்பட்டு நிறகவே தேகம் பிராணவாயுவால விடுபடுஙகாலததில தாமாதாமஙகள் எங்கே போகின்றன? (சஉ)

(அ-கை) இவ்வாறு கேட்கபபட்டவராகிய ஸ்ரீ பகவான் லிங்கசரீரத்தைத தரிககுந்தன்மையால் நிறகின்றதென உததரங கூறுகின்றார்:—

श्रीभगवानुवाच, धर्माधर्मौ मनश्चैव पञ्चभूतानि यानि च ।
इन्द्रियाणि च पञ्चैव याश्चान्याः पञ्चदेवताः ॥ ४३ ॥
ताश्चैव मनसा सर्वे नित्यमेवाभिमानतः ।
जीवेन सह गच्छन्ति यावत्तत्त्वं न विन्दति ॥ ४४ ॥

ஸ்ரீபகவான்:—தர்மாதர்மங்களும் மனமும பஞசபூதங்களும் பஞ்சேந்திரியங்களும் அவற்றின அநநிய பஞ்சதேவதைக

ளும் மனதோடு யாவும் எப்போதும அபிமானிகளாயிருத்தலின் தததுவததையடையாத வனாயில ஜீவனேடு (ஜீவோபாதியாகிய லிங்கதேகததோடு) கூடவே செல்லுகின்றன. (சுந-சுசு)

(அ-கை) இவ்வாறு ஸ்தூலதேகலயததிலும் தர்மாதர்மங்கள் லிங்கசரீரததையாசிரயிதது நிற்குமெனக் கூறின லிங்கசரீரம் எபபோது பங்கமாமெனக கேட்கினறா.—

अर्जुन उवाच, स्थावरं जङ्गमञ्चैव यत्किञ्चित्सचराचरम् ।
जीवा जीवेन सिध्यन्ति स जीवः केन सिध्यति ॥ ४९ ॥

அர்ச்சுனன்:— ஸதாவர ஜங்கமமென்னும யாதொரு சராசரமாகிய ஜீவாகளுணடோ அவாகள ஜீவ(தைஜச)னல சித்திககினறாகள (விசுவாபிமானத்தை விடுகினறாகள). அநதச சீவண யாரால சிததிககினறன அதாவது எநத ஏதுவால தனது அபிமானததை விடுகினறான்? (சுரு)

(அ-கை) இவவாறு கேட்கவே பிராஞனுல் தைசதன் சிததிககின்றான், துரியனுல பிராஞனை சித்திக்கின்றான் என்று இமமுறையாகச சிததிக்கின்றானென் றுத்தாம கூறுகினறார்:—

श्रीभगवानुवाच, मुखनासिकयोर्मध्ये प्राणः सञ्चरते सदा ।
आकाशः पिबति प्राणं स जीवः केन जीवति ॥ ४६ ॥

ஸ்ரீபகவான்:— (காணப்படாத) எந்தப் பிராணன் வாயுக்கும் நாசிக்கும் மத்தியில் *எ. எப்போதும் சஞ்சரிக்கின்றதோ அந்தப் பிராணனை ஆகாசம் பருகுகின்றது. பின்னர் அச்சீவன் எதனால் சீவிக்கின்றான்?

ஜீவத்தன்மையை யுண்டுபண்ணும் அதிருஷ்ட நீக்கத்தால் நிரஞ்சனப் பிரஹ்மத்தன்மை யுண்டாகவே ஜீவத்தன்மையே இல்லை என்பது பொருள். (சசு)

(அ-கை) அங்ஙனமாயின் பிரஹ்மாண்ட முதலிய உபாதியோடுகூடிய பிரஹ்மத்திற்கு நிரஞ்சனத்துவம் எங்ஙனமுண்டாமென்று அர்ச்சுனன் கேட்கின்றான் —

अर्जुन उवाच, ब्रह्माण्डव्यापितं व्योम व्योम्ना चावेष्टितं जगत् ।
अन्तर्बहिश्च तद् व्योम कथं देवो निरञ्जनः ॥ ४७ ॥

அர்ச்சுனன்:— பிரஹ்மாண்டத்தினால் வியாபிக்கப்பட்டது ஆகாயம்; ஆகாயத்தினால் சூழப்பட்டது ஜகத்து, அத

* எ. அஜபாமந்திரவடிவமாக ஒவ்வொரு தினத்திற்கும் உகசு00 சுவாசம் செல்லுகிறது. இதனை அஜபாவடிவமாக "हकारेण बाह्यिति सकारेण विशेत्पुन. । हसहसेति मन्त्रो जीवो जपति सर्वदा॥ ஹகாரத்தினால் வெளியிற் செல்லுகின்றது. ஸகாரத்தினால் மீண்டும் உள்ளே நுழைகின்றது. ஹம்ஸஹம்ஸ என்னும் மந்திரத்தை ஜீவன் எப்போதும் ஜபிக்கிறான்" என்னும் சுருதி கூறுகின்றது.

ஞல உள்ளும் வெளியும் ஆகாயமே யுளது; இவ்வாருகவே தெய்வம எங்ஙனம நிரஞ்சனமா யுளது? (சுஎ)

(அ-கை) ஆகாசமுதலிய சர்வபபிரபஞ்சமும் கற்பிதமா யிருத்தலால் யாவும அசததிய மென்னும் அபிப்பிராயத்திஞற் கூறுகின்ருர்:—

श्रीभगवानुवाच, आकाशो ह्यवकाशश्च आकाशव्यापितञ्च यत् ।

ஸ்ரீபகவான .— ஆகாய(மகாகாய)மும அவகாச (பரிச சின்ஞகாய)மும ஆகாசத்திஞல் (ஆகாசதனமாததிைவடிவ மாகிய சப்ததததிஞல) வியாபிக்கபபடடதாம. (அதன் உபா தானத்தன்மையால அதனினும வேருகாது என்பதுபொருள்.)

(அ-கை) அங்ஙனமாயின் உபாதானமாகிய சப்தத்திற்கு வேறுபட்டதன்மை இருககின்றதெனக் கூறுகின்ருர்:—

आकाशस्य गुणः शब्दो निःशब्दं ब्रह्म उच्यते ॥ ४८ ॥

அவ்வாகாயததின் குணம சபதம. (மித்தியாவடிவ ஆகா யத்தின் பரிஞமிஉபாதானமா யிருத்தலானே தானும் மித்தை யாம.) பிரஹ்மம சபதமின்றியதாம (நிஷபிரபஞ்சமாம).

அங்ஙனமே சத்தியாக்ஷரப் பிரஹ்மத்திற்கு அசத்தியத் தோடு சமபநதம நிகழாமையால் நிரஞ்சனத்துவம பொருந்து கின்றது என்பது பொருள். (சஅ)

(அ-கை) இவ்வாறு பகவானாற் சொல்லப்பட்டதில் அக்ஷர சப்தத்திற்குப் பகவான் கருதிய பொருளையறியாது லோகப் பிரசித்தமான வர்ணவடிவ அக்ஷர புத்தியினால் வர்ணங்களுக்கு அக்ஷரத்துவம் சம்பவியாது என்னும் அபிப்பிராயத்தால் அர்ச்சுனன் கேட்கின்றான்:—

अर्जुन उवाच, दन्तोष्ठतालुजिह्वानामास्पदं यत्र दृश्यते ।
अक्षरत्वं कुतस्तेषां क्षरत्वं वर्तते सदा ॥ ४९ ॥

அர்ச்சுனன்:—பகவானே! எவ்வகாராதி அக்ஷரங்களில் பல், உதடு, அண்ணம், நாவென்பவற்றின் ஆச்ரயத்தன்மை காணப்படுகின்றதோ அதனால் அவற்றிற்கு அக்ஷரத்துவம் ஏது? உற்பத்தி நாசமுடையதற்கு நாசம் அவசியமிருத்தலால் எப்போதும் அவற்றிற்கு க்ஷரத்துவம் (நாசமுடைமை) உள்ளது. (சகூ)

(அ-கை) இவ்வாறு அபிப்பிராயம் அறியாத அர்ச்சுனனால் கேட்கப்பட்ட ஸ்ரீ பகவான் தன்னாற் கருதப்பட்ட அக்ஷர சப்தார்த்தத்தை விளக்கிக் கூறுகின்றார்:—

श्रीभगवानुवाच, अघोषमव्यञ्जनमक्षरञ्च अतालुकण्ठोष्ठमनासिकञ्च ।
अरेखजातं परमूष्मवर्जितं तदक्षरं न क्षरते कथञ्चित् ॥५०॥

ஸ்ரீபகவான்:—* அ. கோஷமல்லாததும் வியஞ்சனமல்லாததும் ஸ்வரமல்லாததும் எழுத்துக்களின் பிறப்பிடமாகிய அண்ணம் பல் உதடுகளினின்றுந்தோன்றுவனவல்லாததும் நாசியாற்றோன்றுவனவல்லாததும் வரிவடிவ எழுத்துக்களல்லாததும் ஊஷ்மங்களல்லாததுமாகிய பரம் எதுவோ அது அக்ஷரமாம். ஏனெனின் அது எப்போதும் க்ஷரி(நசி)ப்பதில்லை.

---

* அ. ஆரியமொழியின் உயிர்பதினொன்றும் ஐவருக்கத்தின் ஈற்றெழுத்துக்கள் மூன்றும், य, र, ल, व, ह என்னும் ஐந்தும் ஆகிய இம்முப்பத்தினொரு எழுத்துக்களும் கோஷ மெனப்படுகின்றன. மற்றவை அகோஷ மெனப்படும்.

மெய்யெழுத்துக்களை வியஞ்சனமென்றும் ஹல் என்றும் கூறுவர். உயிரெழுத்துக்களை ஸ்வரமென்றும் அச் சென்றும் கூறுவர்.

அண்ணத்தாற்றோன்றுவன इ, ई, च, छ, ज, झ, ञ, य, श என்பனவாம். இவை தாலவ்ய மெனப்படும்.

பல்லாற்றோன்றுவன ऌ, त, थ, द, ध, न, ल, स என்பனவாம். இவற்றைத் தந்திய மென்பர்.

உதட்டாற்றோன்றுவன उ, ऊ, प, फ, ब, भ, म, व என்பனவாம். அவற்றை ஓஷ்டிய மென்பர்.

अ, आ, क, ख, ग, घ, ङ, ह, ः என்பன கண்டியம் (கண்டத்தாற்றோன்றுவன) எனப்படும்.

ऋ, ॠ, ट, ठ, ड, ढ, ण, र, ष என்பன மூர்த்தன்யம் (சிரத்திற்றோன்றுவன) எனப்படும். ए, ऐ கண்டதாலவ்யம்.

ओ, औ கண்டோஷ்டியம். ङ, ञ, ण, म, न, ं இவை நாசியாற்றோன்றுவன. श, ष, स, ह ஊஷ்மம் (சுவாசத்தாற்றோன்றுவன) எனப்படும்.

உபலக்ஷணத்தால கண்டிய மூர்த்தன்யங்களும் கொள்ளப்படும். (௩௰)

(அ-கை) இததனமைய பிரஹ்மஞான உபாயத்தை அநுபவதாடடியததி (திடததனமையி)ன பொருடடு மீணடும ஆாசசுனன் கேட்கினறுன:—

अर्जुन उवाच, ज्ञात्वा सर्वगतं ब्रह्म सर्वभूताधिवासितं ।
इन्द्रियाणां निरोधेन कथं सिध्यन्ति योगिनः ॥ ९१ ॥

அர்ச்சுனன:—யோகிகள இநதிரிய நிரோததததால எலலாவற்றினகணணிருபபதும எலலாப பூதஙகளுக்கும அபபால வசிபபதுமாயுள்ள பிரஹமததை அறிநது எஙஙனம சிததிபெறுவாாகள? (௩௧)

(அ-கை) இவவாறு கேட்கப்பட்டவராகிய பகவான அநத ஞாேேேபாயததினையே மீணடும கூறுகினறூர்:—

श्रीभगवानुवाच, इन्द्रियाणां निरोधेन देहे पश्यन्ति मानवाः ।

ஸ்ரீபகவான்:—இநதிரியங்களின நிரோததததால மனிதர்கள தேகததில பிரஹ்மததை யறிகினறூாகள்.

ஆதலால தேகதிடததுவமும இநதிரிய திடத்துவமும் ஞானோபாய மெனபது தாறபரியம.

(அ-கை) அதனினமையில ஞானமே இலலையெனக் கூறுகினறூா:—

देहे नष्टे कुतो बुद्धिर्बुद्धिनाशे कुतोज्ञता ॥ ९२ ॥

தேகம் நஷ்டமாயின் புத்தியும நஷ்டமாகும். புத்தி நஷ்டமானால பிரஹமததையறியுந்தனமை ஏது? தததுவஞான மிலலாததாகவே அபரோக்ஷஞானி ஏது?

ஆதலால தேகேந்திரியமுதலியவற்றால் யாகம் தானம் சிரவணமுதலியனவே தததுவஞானத்திற் காரண மென்பது தாறபரியம. (௫௨)

(அ-கை) அதநன்மைய காரணமும் எதுபரியநதம அநுஷ்டிககததககதாமெனறு ஆசங்கிதது அவதியைக் கூறுகினறார் —

तावदेव निरोधः स्यात् यावत्तत्त्वन्न विन्दाति ।
विदिते तु परे तत्त्वे एकमेवानुपश्यति ॥ ५३ ॥

எதுவரையில தத்துவத்தை யடையவிலலையோ அதுவரையிறறன நிரோதமுடையவனாயிருத்தலவேணடும. பரதததுவததையுணாநதகாலதது ஒனறையே காணகின்றான.

அதன்பின சாதனஙகளை அநுஷடிக்கும பிரயாசையும் வேணடியதில்லை. (௫௩)

(அ-கை) ஆதலால அதுபரியந்தம் தத்துவஞான சாதனம அநுஷ்டிககததக்கதாம. அது இல்லையாயின் அது சித்திக்கிறதிலலையெனக் கூறுகின்றார்.—

नवच्छिद्रान्विता देहाः स्रवन्ति गलिका इव ।
नैवं ब्रह्म न शुद्धिः स्यात् पुमान् ब्रह्म न विन्दति ॥ ५४ ।

நவத்துவாரமுடைய தேகங்களாகிய பொள்ளற்குடங்கள் ஒழுகவிடுகின்றன. (விருத்தியை விஷயங்களிற்றள்ளிவிடுகின்றன). இவ்வாறாகவே பிரஹ்மம் சுத்தமாயிருப்பதால் தோற்றுகிறதில்லை. அதனால் புருஷன் பிரஹ்மத்தையடைகிறதில்லை. (௫௪)

(அ-கை) தத்துவஞானமுண்டாயின் விதிநிஷேதங்கடந்த தன்மையால் ஒரு முயற்சியும் செய்யவேண்டியதில்லை யென்னும் அபிப்பிராயமுடையவராய்க் கூறுகின்றார்:—

अत्यन्तमलिनो देहो देहीत्वत्यन्तनिर्मल: ।
उभयोरन्तरं ज्ञात्वा कस्य शौचं विधीयते ॥ ५५ ॥

தேகம் அத்தியந்தம் மலினமானது. தேகி அத்தியந்தம் நிர்மலன். இவ்விரண்டிற்குமுள்ள பேதத்தையறிந்தபின் எதற்குச் சௌசம் விதிக்கப்படுகின்றது? தேகத்திற்கெனின் மலினமாயுள்ள தேகம் சுத்தியடையாது. தேகிக்கெனின் இயல்பாகவே சுத்தமாயுள்ளதற்குச் சுத்திவேண்டியதில்லை யென்பது பொருள்.

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாம் அத்தியாயம்.

---

ஆரூடன் (ஆத்மபதத்தில் ஏறியவன்) ஆருருக்ஷு (ஏற விருப்புடையோன்—அப்பியாசி) என்னும் இருவர் சொரூபங்களும் சொல்லப்படுகின்றன.

(அ-கை) அதில் ஆரூடனுக்குப பிம்பஐக்கியம் எங்ஙனம உண்டாமென்று அர்ச்சுனன் கேட்கின்றான்:—

॥ अर्जुन उवाच ॥

ज्ञात्वा सर्वगतं ब्रह्म सर्वज्ञं परमेश्वरम् ।
अहं ब्रह्मेति निर्देष्टुं प्रमाणं तत्र किं भवेत् ॥ १ ॥

அர்ச்சுனன்:— பகவானே! எல்லாவற்றிலுமுள்ளதும் பிரஹ்ம (வியாபக) மும் முற்றறிவுடையதுமான (பிமபவடிவ) பரமேசுவரனை "யான் பிரஹ்ம" மென்று நிச்சயிக்க அங்குப பிரமாணம யாது? (க)

(அ-கை) இவ்வாறு கேட்கப்பட்டவராகிய பகவான பால ஜலமுதலிய அநேக திருஷ்டாந்தங்களால உபாதியின் நீக்கத்தில ஐக்கியம சமபவிக்கிறதென்று கூறுகின்றார்:—

॥ श्रीभगवानुवाच ॥

यथा जलं जले क्षिप्तं क्षीरे क्षीरं घृते घृतम् ।
अविशेषो भवेत्तद्वज्जीवात्मपरमात्मनोः ॥ २ ॥

ஸ்ரீ பகவான்:—எபபடி ஜலத்தில ஜலத்தையும பாலிற பாலையும நெய்யில நெய்யையும ஊற்றினால அவிசேஷமா (பேதமில்லாததா) கின்றதோ, அதுபோல ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு அபேதமுண்டாகின்றது. (உபாதிபேதத்தால பேதமிருக்கினும் அவ்வுபாதிநீக்கத்தில் அபேதமுண்டாகிற தெனபது கருத்து.) (உ)

(அ-கை) இவ்வாற்றால் ஐக்கியஞானம் குருமுகமாக வே அடையப்பட்டதாயின் அவித்தையை நிவிருத்திக்கும்; சுவதந்திரவிசாரத்தால் அடையப்பட்டதாயின் நிவிருத்தி செய்யாது என்று கூறிய தத்துவஞானத்தின் பொருட்டு, அவன் குருவையே அடையவேண்டுமென்பதனால் குருவை யுபாசிக்கும் ஜீவனிடத்து விளைவில தாதாத்மியத்தைக் கூறு கின்றார்:—

जीवे परेण तादात्म्यं सर्वगं ज्योतिरीश्वरं ।
प्रमाणलक्षणैर्ज्ञेयं स्वयमेकाग्रवेदिना ॥ ३ ॥

ஜீவனிடத்துப் பிரஹ்மத்தோடு தாதாத்மியமானதும் எல்லாவற்றினுள்ளுமுள்ளதும் ஜோதியுமான ஈசுவரன், ஏகாக்கிர வுணர்ச்சியுள்ளவராகிய பிரஹ்மநிஷ்ட குருவினால் உபதேசிக் கப்பட்ட பிரமாணலக்ஷணங்களால் அறியத்தக்கதாம். (௩)

(அ-கை) இவ்வாறு குருவுபதேசத்திற்குப்பின் உண் டாகிய ஞானத்தினாலேயே பொருந்துவதாயிருக்கக் காம யோகத்தினாலுண்டாவதென்னை? என்று அர்ச்சுனன் கேட் கின்றான்.

॥ अर्जुन उवाच ॥

ज्ञानेनैव भवेद् ज्ञेयं विदित्वा तत्क्षणेन तु ।
ज्ञानमात्रेण मुच्येत किं पुनर्योगधारणम् ॥ ४ ॥

அர்ச்சுனன்:—பகவானே! ஞானத்தினாலேயே வஸ்து ஞேயமா (அறியத்தக்கதா)கின்றது. அறிந்து அந்தக்ஷணத்

திலேயே ஞானமாத்திரத்தினால் முக்தனாகின்றானெனின், மீண்டும் யோகதாரணமேன?

(அ-கை) இவ்வாறு கர்மயோகம் வியர்த்தமாதலைச் சங்கித்துத் தத்துவஞானமுண்டாகுமளவும் அந்தக்கரணசுத்தியின்பொருட்டு அது அநுஷ்டிக்கத்தக்கதாம்; காமசித்தியும ஞானமுமுண்டாகியபின் காமாநுஷ்டானம் வேண்டியதில்லையென்று பகவான் கூறுகின்றார்:—

॥ श्रीभगवानुवाच ॥

ज्ञानेन दीपिते देहे बुद्धिर्ब्रह्मसमन्विता ।
ब्रह्मज्ञानाग्निना विद्वान्निर्दहेत्कर्मबन्धनम् ॥ ५ ॥

ஸ்ரீ பகவான்:—ஞானத்தினால் விளக்கப்பட்ட தேகத்திலுள்ள புத்தி பிரஹ்மத்தோடு கூடியதாகின்றது. பிரஹ்மஞானாக்கினியினால் வித்வான் கர்மபந்தத்தைத் தகிக்கின்றான்.

அது "ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुतेऽर्जुन — அர்ச்சுனா! ஞானாக்கினி சர்வகர்மங்களையும் நாசஞ்செய்கின்றது." என்று பகவத்கீதையிற் சொல்லப்பட்டிருக்கிறது. (௫)

(அ-கை) இவ்வாறு தத்துவஐக்கியமுணர்ந்தவனுக்கு அதன்பின் செய்யத்தக்கதொன்றுமில்லையெனக் கூறுகின்றார்:—

ततः पवित्रं परमेश्वराख्यमद्वैतरूपं विमलाम्बराभम् ।
यथोदके तोयमनुप्रविष्टं तथात्मरूपो निरूपाधिसंस्थितः ॥ ६ ॥

அதன் (தத்துவஞானத்தின்)பின் பெருநீரில் ஐக்கியமடைந்த கண்டமான நீரைப்போல சுத்தமாகிய பரமேசுவரனென்னும் பெயருடையதாயினும் நிர்மலாகாசம்போன்ற (சங்கமில்லாத)தும் அத்வைதவடிவமும் (சஜாதீயவிஜாதீயாதிபேதமின்றியது)மான பிரஹ்மத்தில் ஆத்மரூபமானது உபாதியின்றி அபேதமாய் நிலைத்திருக்கின்றது. (௬)

(அ-கை) இவ்வாறு கூறியவண்ணம் கர்மாநுஷ்டானவாயிலாக உண்டாவதே தத்துவஞானமாம். அதற்குமுன் பரமாத்மதத்துவம் அறியக்கூடியதன்றெனக் கூறுகின்றார்:—

आकाशवत्सूक्ष्मशरीर आत्मा न दृश्यते वायुवदन्तरात्मा ।
सबाह्यमभ्यन्तरनिश्चलात्मा ज्ञानोल्कया पश्यति चान्तरात्मा ॥ ७ ॥

ஆத்மா ஆகாயத்தைப்போலச் சூக்ஷ்மவடிவினதாய் அந்தராத்மாவாய் வாயுவைப்போலக் காணப்படுகிறதில்லை. ()

(அ-கை) அங்ஙனமாயின் அத்தத்துவங்களின் அபரோக்ஷஞானம் உண்டாகாதெனக் கூறுகின்றார்.—

அது உள்ளும் வெளியும் நிச்சலவடிவமாம். அந்தராத்மாவாய் (அந்தர்முகசித்தனாய்)த் தத்துவங்களின் ஐக்கியத்தைப் பார்க்கின்றான். (௭)

(அ-கை) இங்குச் சிலநூல் ஆசிரியர்மார்க்கத்தால் வேறுலோகத்தையடைய முக்தியுண்டாகின்றதென்பதனை மறுக்க, இங்குப் பிரஹ்மத்தை யடைகின்றான் என்றல் முத

சில சுருதியினால் முற்கூறிய ஞானிகளின் முக்திசொரூபத்தைக் கூறுகின்றார்.—

यत्र यत्र मृतो ज्ञानी येन वा केन मृत्युना ।
यथा सर्वगतं व्योम तत्र तत्र लयं गतः ॥ ८ ॥

எல்லாவற்றினுமுள்ள (எல்லாவஸ்துக்களாலும் அவச்சின்ன) ஆகாயமும் அவச்சேதகவஸ்து நாசமாகுங்கால் ஆங்காங்கே மகாகாயத்தில் லயமடைகிறதுபோல எல்லாவற்றினுள்ளுமுள்ளவனாகிய ஞானி (எங்கும் பரிபூரணமான பிரஹ்மத்திற்கு அபின்னனாய்ச் சரீரமுதலிய உபாதிகளால் பின்னமாக வியவகரிக்கப்படுகின்ற பிரஹ்மாபரோக்ஷஞானி) எவ்விதமான மரணத்தினாலாவது எந்தெந்த இடத்தில் தேகத்தை விடுகின்றானோ அந்தந்த இடத்திலேயே பிரஹ்மத்தில் ஐக்கியத்தையடைகின்றான். (அ)

(அ-கை) ஜீவன் ஒன்றாயினும் தேகமுதலிய அவச்சேதகபேதத்தால் நாநாத்துவம் ஜீவனுக்கு அணுத்தன்மையைச் சொல்லும்பக்ஷத்தில் சம்பவியாதென்று ஆசங்கித்து ஜீவனுக்கு வியாபகத்தன்மையைச் சாதிக்கின்றார்:—

शरीरव्यापितं व्योम भुवनानि चतुर्दश ।
निश्चलो निर्मलो देही सर्वव्यापी निरञ्जनः ॥ ९ ॥

சரீரத்தில் வியாபித்துள்ள ஆகாயம் பதினான்குபுவனங்களையும் வியாபித்திருப்பதுபோல நிச்சலமும் (கிரியையின்றி

யதும்) நிாமலமும (பரிசுததமும) நிரஞசனமு (சுயமபிரகாசமு)மான தேகி சாவவியாபி (ஜகததுமுழுவதும வியாபிததுளளவன) ஆகினறுன. (௯)

(அ-கை) இவ்வாறு தத்துவஞானியின் முகதிசொருபததைக கூறி இனி தத்துவஞானசாதனுநுஷ்டானம செயபவனுககு அதுவே சகலப பிராயசசிததமுமாமெனக் கூறுகினறுா;—

॥ योगप्रकरणप्रारम्भः ॥

मुहूर्तमपि यो गच्छेन्नासाग्रे मनसासह ।
सर्वं तरति पाप्मानं तस्य जन्मशतार्जितम् ॥ १० ॥

எவன ஒரு முகூாததமாயினும நாசிநுனியில மனதோடு செல்லுகினறுனே (ததுவஞானததினபொருட்டு நிசசலமாகிய பாாவையை வைககினறுனே) அவன (அததன்மைய அமசமுததிாயில நிலைபபவன) நூறு ஜனமஙகளில் ஆாஜிக்கபபட்ட சகல பாபஙகளையும கடககினறுன.

அது, "यद्ब्रह्मविचारणे क्षणमपि प्राप्त मनस्थैर्यतां ॥ कुल पवित्र जननी कृतार्थी विश्वभरा पुण्यवती च तेन பிரஹ்ம விசாரததில கணநேரமாயினும மனதின ஸதிரததனமை அடையபபடுமாயின் அதனுல அவனகுலம பவிததிரமாம. அவனைபபெற்றவள கிருதாாததமடைவாள. பிறநத பூமியும புணணியமுடையதாம." எனறல முதலியவறறுல சொலலபபட்டிருககினறது. (௧௦)

(அ-கை) முக்தி இருவகையாம்:—(க) சத்யோமுக்தி (உ) கிரமமுக்தி. அவற்றுள், சத்யோமுக்தியானது என்றல் முதலியவற்றாலும், यत्र यत्र मृतो என்றல் முதலியவற்றாலும் "अत्र ब्रह्मसमश्नुते இங்குப் பிரஹ்மத்தை அடைகிறான்" என்னும் சுருதியினாலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

दक्षिणे पिङ्गला नाडी वह्निमण्डलगोचरा ।
देवयानमिति ज्ञेया पुण्यकर्मानुसारिणी ॥ ११ ॥

"ब्रह्मणासह ते सर्वे संप्राप्ते प्रतिसंक्षये । अजस्यांते कृतात्मानः प्रविशन्ति परं पद பிரஹ்மாவின் முடிவில் பிரளயமுண்டாகும்போது ஆத்மநிஷ்டர்களான அவ்வெல்லோரும் பிரஹ்மாவோடுகூடவே பரமபதத்தை யடைகின்றார்கள்" என்றல் முதலிய சுருதிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றது என்பன முதலியவற்றாற் சொல்லப்படுகின்ற கிரமமுக்தியை நிரூபித்தற்கு அர்ச்சிராதிமார்க்கத்திற் சென்றவர்களுக்குப் புநராவிருத்தி (மீண்டுந்திரும்புதல்) இல்லாமையையும் தூமாதிமார்க்கத்திற் சென்றவர்கட்குப் புநராவிருத்தியையும் நிரூபித்தற்கு யோகதாரணையால் அவ்விரண்டு மார்க்கத்தின் சொரூபத்தையும் கூறுவாராய் முன்னர் அர்ச்சிராதிமார்க்கத்தைக் கூறுகின்றார்:—

வன்னிமண்டலத்தைக் கோசரிப்பதும் புண்ணியகர்மாநுசாரியுமாய்த் தேகத்தின் வலதுபாகத்தி (மூலாதாரமுதல சகஸ்ராரமவரையி)லுள்ள பிங்கலையென்னும் நாடி தேவயானம (மீண்டும் திரும்புதலின்றிய அர்ச்சிராதிமார்க்கம்) என்றறியத்தக்கது. (கக)

(அ-கை) தாமமார்க்கத்தின் சொரூபத்தைக் கூறுகின்றார்:—

इडा च वामनिःश्वासा सोममण्डलगोचरा ।
पितृयानमिति ज्ञेयं वाममाश्रित्य तिष्ठति ॥ १२ ॥

இடது நிசுவாசத்தையுடையதும் சோமமண்டலத்தைக் கோசரிப்பதுமான இடையெனனும் நாடி பிதுர்யானமென்றறியத்தக்கது. அது வாமத்தையாசிரயித்து (மூலாதார முதல சகஸ்ராரம்வரையிற்பொருந்தி) நிற்கின்றது. (௧௨)

(அ-கை) இவ்வாறு இடை பிங்கலை நாடிகளின் ஸ்தானத்தையும சொரூபத்தையும சொல்லி சுழுமுனைநாடியின் சொரூபத்தை நிரூபிக்க அதன் சமபந்தியாகிய பிரஹ்மதண்டத்தின சொரூபத்தைக் கூறுகின்றார்:—

गुदस्य पृष्ठभागेऽस्मिन् वीणादण्डस्य देहभृत् ।
दीर्घास्थिमूर्ध्नपर्यंतं ब्रह्मदण्डीति कथ्यते ॥ १३ ॥

இத்தேகத்தில குதத்தின பின்பாகத்தில் சிரசுபரியந்தம் வீணாதண்டமபோலத் தேகத்தைத் தாங்குவதாகிய நீண்ட எலும்பானது பிரஹ்மதண்டமென்று சொல்லப்படுகிறது. ()

(அ-கை) இனி சுழுமுனை நாடியின் சொரூபத்தைக் கூறுகின்றார்:—

तस्यान्ते सुषिरं सूक्ष्मं ब्रह्मनाडीति सूरिभिः ॥ १४ ॥

அதனுள் (பிரஹ்மதண்டத்தினுள்) ளிருக்கும் சூக்ஷ்மமான துவாரம் பிரஹ்மநாடியென்று விவேகிகளாற் சொல்லப் படுகின்றது. (௧௪)

(அ-கை) அந்நாடியினையே நிரூபிக்கின்றார்:—

इडापिंगलयोर्मध्ये सुषुम्ना सूक्ष्मरूपिणी ।
सर्वं प्रतिष्ठितं यस्मिन् सर्वगं सर्वतोमुखम् ॥ १५ ॥

இடைபிங்கலைகளின் மத்தியில் சூக்ஷ்மவடிவமான சுழுமுனையிருக்கின்றது. அதில் எல்லாமும் எல்லாவற்றினகளுள்ளதும் எங்குமுகமுள்ளதுமான வஸ்து பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கின்றது. (௧௫)

(அ-கை) சுழுமுனைவழியிற் சென்றவனுக்குப் பிரஹ்மப் பிராப்தியை நிரூபித்தற்கு அக்குண்டலியின் சகல ஜகத்வடிவத்தன்மையையும் சகல ஜகத்திற்கும் ஆதாரமாயிருக்குந்தன்மையையும் சகல தேவவடிவத்தன்மையையும் சகல [illegible]தாக்களுக்கும் ஆதாரமுடைமையையும் கூறுகின்றார்:—

तस्य मध्यगतास्सूर्य सोमाग्निपरमेश्वराः ।
भूतलोका दिशः क्षेत्रं समुद्राः पर्वतास्शिलाः ॥ १६ ॥

द्वीपाश्च निम्नगा वेदाः शास्त्रविद्याकलाक्षरा' ।
स्वरमंत्रपुराणानि गुणाश्चैते च सर्वशः ॥ १७ ॥

बीजं बीजात्मकस्तेषां क्षेत्रज्ञः प्राणवायवः ।
सुषुम्नान्तर्गतं विश्वं तस्मिन्सर्वं प्रतिष्ठितम् ॥ १८ ॥

அதன மததியில சூரியன சந்திரன அககினி பரமேசுவரனெனனும தேவதைகளும, பஞசபூதஙகளும, பதினாலு லோகஙகளும, பததுததிக்குகளும, வாரணாசியாதி க்ஷேததிரங்களும, லவணாதிசமுததிரஙகளும, மகாமேருவாதிபாவதங்களும, யஞஞசிலைசிததிரசிலைமுதலிய சிலைகளும, ஜமபுவாதிதீபங்களும, கங்கைமுதலிய ஆறுகளும, இருக்குமுதலிய வேதஙகளும, மீமாமஸைமுதலிய சாஸதிரஙகளும, ௧௪-விததைகளும, ௬௪-கலைஞானஙகளும, ககாரமுதலிய [illegible]-எழுததுககளும, அகாரமுதலிய பதினாறு உயிாகளும, காயததிரியாதிமநதிரஙகளும, பதினெணபுராணஙகளும, சததுவாதி குணஙகளும, பீஜ (பிரதான) மும, பீஜசொரூபமாயுளள மகதாதிகளும, க்ஷேததிரஞஞனும, பிராணாதிவாயுககளும யாவும இருககினறன. ஆதலால அசசுழுமுனைநாடியில சகல ஜகததும நிலைததிருககினறன. "तस्याते सुषिर सूक्ष्म तस्मिन्सर्व प्रतिष्ठितम् -அதனுள துவாரம சூக்ஷமமாயிருககினறது. அதில சகலமும பிரதிஷடிககபபட்டிருககினறன" எனனும சுருதியினால. (௧௯-௧௭-௧௮)

(அ-கை) அது சகல ஜகததின உறபததிககும காரணமாதலைக கூறுகினறார.

नाना नाडीप्रसवगं सर्वभूतान्तरात्मनि ।
ऊर्ध्वमूलमधश्शाखं वायुमार्गेण सर्वगम् ॥ १९ ॥

பலவிதமான நாடிகளுக்கு உற்பத்திஸ்தானமாயும் சர்வ பூதங்களின் அந்தராத்மாவினிடத்திலுள்ள மேல் (பிரஹ்ம மாகிய) வேரும் (ஹிரணியகர்ப்ப முதலிய சிருஷ்டி பரம்பரை யாகிய) கீழ்க்கிளைகளுமுள்ளதாயும வாயுமார்க்கத்தால் எல் லாவற்றிலுமிருப்பதாயுமிருந்துகொண்டு ஜகத்திற்கு உபாதா னமாக நிற்கின்றது. (௧௯)

(அ-கை) பிரஹ்மோபாசனைக்கு இடமாயிருத்தலால் மற்றைய நாடிகளினும் இஃததிகமாதலைக் கூறுகின்றார்:—

द्विसप्ततिसहस्राणि नाड्यस्स्युर्वायुगोचराः ।
सर्वमार्गेण सुषिरास्तिर्यञ्चसुषिरात्मिकाः ॥ २० ॥

अधश्चोर्ध्वगतास्तासु नवद्वाराणि रोधयन् ।
वायुनासह जीवोर्ध्वज्ञानी मोक्षमवाप्नुयात् ॥ २१ ॥

வாயுகோசர (வாயுசஞ்சாரத்திற்கு அனுகூல) நாடிகள் எழுபததீராயிரமாம். சர்வமார்க்கத்தாலும (மீண்டுவருதலை யடைவிப்பனவாகிய) குறுக்கான துவாரவடிவ நாடிகளிருக் கின்றன. கீழுமேலும செல்லவனவாகிய அவற்றுள் சுழுமுனை நாடியால் ஒன்பது துவாரங்களையும் தடுத்துச சுழுமுனையினு ள்ளிருக்கும் வாயுவோடு ஜீவனை மேற்செலுத்திப் பிரஹ்மத தையறிபவன் மோக்ஷத்தையடைகிறான். तयोर्ध्वमायन्नमृतत्वमेति "அதனமேற்சென்று அமுதத்தன்மையையடைகின்றான" என்னும சுருதியால். (௨௦-௨௧)

(அ-கை) சகல ஜகத்திற்கும் ஆதாரத்தன்மையாகவும் சகல ஜகத்துவடிவத்தன்மையாகவும் இக்குண்டலியின் யோகோபாசனையைச் செய்தற்கு இதன்கண்ணேயே சகல இந்திராதிபுரங்களையும் கற்பிக்கின்றார்:—

अमरावतीन्द्रलोकेस्मिन्नासाग्रे पूर्वतो दिशि ।
अग्निलोको ह्यथ ज्ञेयश्चक्षुस्तेजोवती पुरा ‖ २२ ‖

இந்தச் சுழுமுனைநாடியின் கீழ்த்திசையில் நாசியின் நுனிப்பாகத்தில் அமராவதியென்னும் இந்திரபட்டணமும் பின்னர் வலதுகண்ணில் அக்கினியின் லோகமாகிய தேஜோவதியென்னும் பட்டணமுமுள. (௨௨)

(அ-கை) இதுவுமது:—

याम्यां संयमी श्रोत्रे यमलोकः प्रतिष्ठितः ।
नैर्ऋतो ह्यथ तत्पार्श्वे नैर्ऋतो लोक आश्रितः ‖ २३ ‖

வலதுகாதில் யமலோகமாகிய சம்யமநியென்னும் பட்டணமிருக்கிறது. அதன்பக்கத்தில் நிருதியின் பட்டணமாகிய நைருதமிருக்கின்றது, (௨௩)

(அ-கை] இதுவுமது:—

विभावरी प्रतीच्या तत्पृष्ठ वारुणिका पुरी ।
वायोर्गंधवती कर्णपार्श्वे लोकः प्रतिष्ठितः ॥ २४ ॥

மேற்குத்திசையாகிய பின்புறத்தில் விபாவதியென்னும் வர்ணனுடைய பட்டணமிருக்கின்றது. இடது காதின பக்கத்தில கநதவதியென்னும் வாயுவின் பட்டணமிருககின்றது. ()

(அ-கை) இதுவுமது:—

सौम्या पुष्पवती सौम्ये सोमलोकस्तु कंठतः ।
वामकर्णंतु विज्ञेयो देहमाश्रित्य तिष्ठति ॥ २९ ॥ ௨௦

வடதிசையில் கழுததினின்றும இடது காதுபரியந்தம் தேகததை ஆசிரயிதது புஷ்பவதியென்னும் சோமலோகமாகிய குபேரபட்டணமிருககின்றது. (உ௫)

(அ-கை) இதுவுமது:—

वामे चक्षुषि चेशानी शिवलोकं मनोन्मनी ।
मूर्ध्नि ब्रह्मपुरी ज्ञेया ब्रह्माण्डं देहमाश्रितम् ‖ २६ ‖

இடதுகண்ணில் ஈசானசமபந்தியாகிய மனோனமணியென்னும சிவலோகமிருககின்றது. சிரசில் பிரஹமபுரியென னும பிரஹ்மலோகமிருக்கினறது. இவவாறு பிரஹமாணடம தேகததை ஆசிரயிததிருககின்றது. (உ௬)

(அ-கை) இதுவுமது:—

पादादधः शिवोनंतः कालाग्निः प्रलयात्मकः ।
अनामयमधश्चोर्ध्वं मध्यमं तु बहिश्शिवः ॥ २७ ॥

பாதத்தின்கீழ் அநந்தரும பிரளயவடிவமான காலாக்கினி ரூபருமாகிய சிவனிருக்கின்றார். மேல கீழ நடு உள் வெளி எங்கும் அநாமயமும மங்கலவடிவமுமாகிய பிரஹமமேயிருக்கின்றது. (உஎ)

(அ-கை) தேகத்திலேயே லோகமுதலியவற்றின் கற்பனையைக கூறுகின்றார்:—

अधःपदोतलं विद्यात् पादं च वितलं विदुः ।
नितलं पादसंधिं च सुतलं जंघमुच्यते ॥ २८ ॥

பாதத்தின்கீழ் அதலமென்றும். பாதத்தை விதலமென்றும். பாதத்தின் சந்தியை நிதலமென்றும கணைக்காலைச சுதலமென்றும கூறுவர். (உஅ)

(அ-கை) இதுவுமது:—

महातलंतु जानुस्स्यादुरुदेशो रसातलं ।
कटिस्तलातलं प्रोक्तं सप्तपातालसंज्ञया ॥ २९ ॥

முழந்தாளை மகாதலமென்றும தொடையை இரசாதலமென்றும இடையைத் தலாதலமென்றும ஏழு பாதாளங்களாகச சொல்லுவர். (உகூ)

(அ-கை) இதுவுமது:

कालाग्निनरकं घोरं महापाताल संज्ञया ।
पातालं नाभ्यधोभागः भोगीन्द्रफाणिमण्डलम् ॥
वेष्टितस्सर्वतोऽनन्तः सबिभ्रज्जीव संज्ञकः ॥ ३० ॥

காலாக்கினியைபபோன்ற கோரமான நரகமும் போகீந்திரனாகிய ஆதிசேஷனுக்கும மற்றைப் பாமபுகளுக்கும் இடமாகிய பாதாளம நாபியின கீழ்ப்பாகத்தில மகாபாதாளமென்னும் பெயரால சொலலபபடும். ஜீவனென்னும் பெயரையுடைய அநாதன் குணடலவடிவமாகச் சரீரமுழுவதையும சுற்றிக்கொண்டிருக்கின்றான். (௩0)

(அ-கை) இதுவுமது:—

भूर्लोको नाभिदेशं तु भुवर्लोकंतु कुक्षितः ।
हृदयं स्वर्गलोकं तु सूर्यादिग्रहतारकाः ॥ ३१ ॥

நாபிதேசத்தில பூலோகமும் வயிறறில் புவர்லோகமும இருதயததில் சுவர்க்கலோகமும் சூரியன்முதலிய கிரகங்களும நக்ஷத்திரங்களும இருக்கின்றன. (௩க)

(அ-கை) இதுவுமது:—

सूर्यसोमसनक्षत्रं बुधशुक्रकुजांगिराः ।
मंदश्च सप्तमो ज्ञेयः ध्रुवोंतः स्वर्गलोकतः ॥ ३२ ॥

சூரியன் சந்திரன் செவ்வாய் புதன் குரு வெள்ளி சனி என்னும் ஏழு கிரகங்களின் லோகங்களையும் துருவலோகத்தையும இருதயத்தில் யோகி கற்பிக்கின்றான். அதில் சகல சுகத்தையும் அடைகிறான். (௩உ)

हृदये कल्पयन् योगी तस्मिन्सर्वसुखं लभेत् ‖ ३२ ‖

இது முன் ஙஉ-வது சுலோகத்தோடு சேர்ந்தது

(அ-கை) இதுவுமது:—

हृदयेच महर्लोकं जनलोकं तु कण्ठतः ।
तपोलोकं भुवोर्मध्ये मूर्ध्नि सत्यं प्रतिष्ठितम् ॥ ३३ ॥ 88

இவனுடைய இருதயத்தின்மேல் மகாலோகமும் கண்டத்தில் ஜனலோகமும் புருவநடுவில் தபோலோகமும் சிரசில் சத்தியலோகமு மிருக்கின்றன. (ஙங)

(அ-கை) இவ்வாறு தேகத்திலேயே சர்வலோக சுரூபனையும் கூறி அவற்றின் லயக்கிரமத்தையும் கூறுகின்றார்.—

ब्रह्माण्डरूपिणी पृथ्वी तोयमध्ये विलीयते ।
अग्निना पच्यते तोयं वायुना ग्रस्यतेऽनलः ॥ ३४ ॥
आकाशस्तु पिबेद्वायुं मन आकाशमेव च ।
बुद्ध्यहंकारचित्तं च क्षेत्रज्ञे परमात्मनि ॥ ३५ ॥

பிரஹ்மாண்ட வடிவமான பிருதிவி ஜலமத்தியில் ஒடுங்குகிறது. ஜலம் அக்கினியினால் பாகமாகின்றது. அக்கினி வாயுவினால் விழுங்கப்படுகிறது. ஆகாயம் வாயுவைப் பருகுகின்றது. ஆகாயத்தை மனம் விழுங்குகின்றது. மனது புத்தி அகங்காரம் சித்தம் என்பவை க்ஷேத்திரஞ்ஞனாகிய பரமாத்மாவினிடத்தில் லயமாகின்றன. (ஙச-ஙரு)

(அ-கை) இத்தன்மைய யோகாப்பியாசத்தினுல பிரஹ்ம ஐக்கியாநுசந்தானமுள்ளவனுக்குச் சகல பாபங்களும நீங்குமெனக் கூறுகின்றார்:—

अहं ब्रह्मेति मां ध्यायेदेकाग्रमनसा सकृत् ।
सर्वं तरति पाप्मानं कल्पकोटिशतैःकृतम् ॥ ३६ ॥

இவ்வாறு ஒடுக்கி நான் பிரஹ்மமென்று என்னை ஏகாக்கிரமனதால எவன் ஒருமுறை தியானிக்கிருனே, அவன நூறுகோடி கற்பங்களில செய்த சகல பாபங்களையும கடக்கிருன. (௩௬)

(அ-கை) ஜீவனுடைய முக்திஸ்வரூபத்தைக் கூறுகின்ருர்:—

घटसंवृतमाकाशं लीयमाने यथा घटे ।
लीयतेच महाकाशे तद्वज्जीव. परात्मनि ॥ ३७ ॥

கடாவச்சின்ன ஆகாசம எப்படிக் கடம் நஷ்டமானல் மகாகாசத்தில ஒடுங்குகிறதோ அப்படியே ஜீவன பரமாத்மாவில லயமாகின்ருன. (௩௭)

(அ-கை) இதுவுமது.—

घटाकाशमिवात्मान विलयं वेत्ति तत्त्वतः ।
स गच्छति निरालंब ज्ञानालोकं न संशयः ॥ ३८ ॥

கடாகாசத்தைப்போல எவன யதார்த்தமாகப பரமாத்மாவில் ஜீவாத்மாவின விலயத்தை யறிகின்ருனே அவன

ஞானவடிவப்பிரகாசமும் நிராலம்பமுமான பதத்தையடை கிறான். இதிற் சம்சயமில்லை. (ரு௮)

(அ-கை) இவ்வாற்றால் இந்த ஞானயோகத்திற்கு எதுவும் சமமாகாதென்று கூறுகின்றார்:—

तपेद्वर्षसहस्राणि एकपादस्थितो नरः ।
एकस्य ध्यानयोगस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ३९ ॥

நரன் ஒருகாலில் நின்றுகொண்டு அநேகமாயிர வருஷங்கள் தவஞ்செய்யினும் அது தியானயோகமொன்றன் பதினாறில் ஒரு அம்சத்திற்கு இணையாகாது. (ருகூ)

(அ-கை) இந்த ஞானயோகம் சர்வபாபங்களையும் நாசஞ் செய்யுமெனக் கூறுகின்றார்.—

ब्रह्महत्यासहस्राणि भ्रूणहत्याशतानि च ।
एको हि ध्यानयोगश्च दहत्यग्निरिवेन्धनम् ॥ ४० ॥

பிரஹ்மஹத்தி ஆயிரங்களாயினும் புருண (சிசு)ஹத்தி நூறுகளாயினும் அவற்றை விறகினைத் தீ எரிப்பதுபோல ஒரு தியானயோகமே தகித்துவிடுகின்றது. (சo)

(அ-கை) இவ்வாற்றால் இந்த ஞானயோகத்திற்கு எதுவும் சமானமாகாதென்று கூறுகின்றார் —

अधीत्य चतुरो वेदान्धर्मशास्त्राणि मानवः ।
यो वै ब्रह्म न जानाति दर्वी पाकरसं यथा ॥ ४१ ॥

यथा खरश्चन्दनभारवाही भारस्य वेत्ता न तु चन्दनस्य ।
तथैव शास्त्राणि बहून्यधीत्य सारं न जानन्खरवद्वहेत्सः ॥ ४२ ॥

अनन्तकर्मशौचं च तपोयज्ञस्तथैव च ।
तीर्थयात्रानुगमनं यावत्तत्त्वं न विन्दति ॥ ४३ ॥

நான்குவேதங்களையும் தர்மசாஸ்திரங்களையும் எப்போதும் விசாரித்து எவன் நான் பிரஹ்மமென்று அறியவில்லையோ, அவன் பாகரசத்தையறியாத அகப்பையைப்போன்றவனாவன். சந்தனத்தைச் சுமக்கும் கழுதை பாரத்தையறிகிறது; சந்தனத்தையறிகிறதில்லை. அதுபோலவே வெகு சாஸ்திரங்களைப் படித்தும் சாரத்தையறியாதவன் கழுதையைப்போலச் சுமப்பவனாகின்றான். அநந்தகர்மமும் சௌசமும் ஜபமும் யாகமும் அப்படியே தீர்த்தயாத்திரை முதலியவற்றிற்குச் செல்லுதலுமாகிய யாவும் தத்துவத்தையடையுமவனாயிற்றான். (௪௧-௪௨)

(அ-கை) தேகம் பிரிக்கப்பட்டபோதும் ஆத்ம ஐக்கியத்தைத் திருஷ்டாந்தத்தினால் கூறுகின்றார்:—

गवामनेकवर्णानां क्षीरं स्यादेकवर्णतः ।
क्षीरवद्भाति विज्ञानं देहीनां च गवां यथा ॥ ४४ ॥

பசுக்கள் அநேகவர்ணங்களாயிருக்கினும் பால் ஒருவர்ணமாகவேயிருக்கும், பசுக்களிடத்துப் பாலைப் பார்ப்பதுபோ

லத் தேகிகள் வேறு வேறாயினும் ஞானமாகிய பிரஹ்மம் ஒன்றென விவேகி காண்கின்றான். (௪௪)

(அ-கை) அகங்காரநீக்கத்தைக் கூறுகின்றார்:—

अहं ब्रह्मेति नियतं मोक्षहेतुर्महात्मनाम् ॥ ४५ ॥
द्वे पदे बन्धमोक्षाय न ममेति ममेति च ।
ममेति बध्यते जन्तुर्न ममेति विमुच्यते ॥ ४६ ॥
मनसो ह्युन्मनीभावाद् द्वैतं नैवोपलभ्यते ।
यदा यात्युन्मनीभावं तदा तत्परमं पदम् ॥ ४७ ॥

யான் பிரஹ்மமென்பது நியதமாய் மகாத்மாக்களுக்கு மோக்ஷ ஏதுவாம். பந்தமோக்ஷங்களின்பொருட்டு என்னுடையதென்றும் என்னுடையதன்றென்றும் இரண்டுபதங்களுண்டு. என்னுடையதென்று சீவன் கட்டுப்படுகின்றான். என்னுடையதன்றென்று சீவன் விடுபடுகின்றான். மனதின் உன்மனித்தன்மையால் (மனது ஆத்மாவில் நிருவிகற்பத்தை யடையுங்காலத்து) துவைதம் காணப்படுகிறதில்லை. எப்போது உன்மனித்தன்மையை யடைகின்றதோ அப்போது அது பரமபதமாகிய மோக்ஷமெனப்படுகின்றது. (௪௫-௪௬-௪௭)

(அ-கை) பிரஹ்மவிசாரம் செய்யாதவனுக்கு எல்லாம் வியர்த்தமெனக் கூறுகின்றார்:—

हन्यान्मुष्टिभिराकाशं क्षुधार्तः खण्डयेत्तुषम् ।
नाहं ब्रह्मेति जानाति तस्य मुक्तिर्न जायते ॥ ४८ ॥

எவன் வேதசாஸ்திரங்களை ஓதியும் கேட்டும் யான் பிரஹ்மமென்று அறியவில்லையோ அவனுக்குச் சகல சாஸ்திரங்களும் பிரயாசமாத்திரபயனுள்ளனவாம். அஃதெங்ஙனமெனின், பசியுள்ளவன் கைகளால் ஆகாயத்தைக் குத்துவானாயின் கைவலியுண்டாதலேயன்றி வேறு பயனில்லை. அல்லது அப்பசியுள்ளவன் உமியைக் குத்துவானாயின் குத்துதற் பிரயாசையேயன்றி பயன் வேறில்லை. அதுபோல இவனுக்கும் முக்தியுண்டாகிறதில்லை என்பது பொருள்.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றும் அத்தியாயம்.

---

(அ-கை) யோகி வீணதொழில்களையும் வார்த்தைகளையும் விடுதலால் சாந்தபுத்தியுடையவனாய் ஹம்ஸியினையை சாரமடைவனென்று மூன்றாவதிற் கூறுகின்றார்:—

॥ श्रीभगवानुवाच ॥

अनन्तशास्त्रं बहु वेदितव्यमल्पश्च कालो बहवश्च विघ्नाः ।
यत्सारभूतं तदुपासितव्यं हंसो यथा क्षीरमिवाम्बुमिश्रम् ॥ १ ॥

அறியத்தக்க சாஸ்திரங்கள் அநேகமுள. அவற்றினும் அறியத்தக்கவிஷயங்கள் அநேகமுள. அவற்றையறிதற்குக் காலம் அற்பமாம். அதினிலும் விக்கினங்கள் வெகுவாம்.

ஆதலால் விவேகியாகிய யோகியினல் நீர்கலந்த பாலை அன்னம பிரிப்பதுபோல இவற்றினின்றும சாரவடிவமானது எதுவோ அது பிரித்து உபாசிக்கத்தக்கதாம். (க)

(அ-கை) ஆதலால் பாண்டித்தியத்தையறிந்து என்றல் முதலிய சுருதியினல் பாண்டித்தியப் பிரகடனத்திற்குப் பிரஹ்மோபாசனையைப் பிரதிபந்திக்குந்தன்மை யிருத்தலால் சகலபாண்டித்தியமும தள்ளத்தக்கதாமென்று கூறுகின்ருர்:-

पुराणं भारतं वेदाः शास्त्राणि विविधानि च ।
पुत्रदारादिसंसारो योगाभ्यासस्य विघ्नकृत् ॥ २ ॥

புராணம பாரதம் நாநாவிதமான வேதசாஸ்திரங்கள் புத்திரதாரமுதலிய சமஸாரம என்பவை ஆத்மஜ்ஞகியமான யோகாப்பியாசத்திற்கு விக்கினத்தைச செய்பவைவாம (உ)

(அ-கை) அன்றியும் ஆதமவிசாரமின்றிய பிற விசாரிக்கத்தக்கனவாகா, முடிவில்லாதனவாயிருத்தலின என்று கூறுகின்ருர்:—

इदं ज्ञानमिदं ज्ञेयं यस्सर्वं ज्ञातुमिच्छति ।
अपिवर्पसहस्राणि शास्त्रान्तं नाधिगच्छति ॥ ३ ॥

இது ஞானம இது ஞேயம் என்று எவன எல்லாவற்றையும் அறிய இச்சிக்கிருனே அவன் ஆயிரம வருஷம ஆயுளுடையவனுயினும சாஸதிரத்தின முடிவையடையான. (௩)

( அப்படியானவை செய்யத்தக்கது யாதெனக் கூறுகின்றார் —

विज्ञेयोऽक्षरतन्मात्रो जीवितं चापि चञ्चलम् ।
विहाय शास्त्रजालानि यत्सत्यं तदुपास्यताम् ॥ ४

நாசமின்றிய சத்தாமாத்திரமாகிய ஆத்மா அறியத்தக்கதாம். வாழ்வும் சஞ்சலம் (நாசமுடையது) என்று அறியத்தக்கதாம். ஆதலால் சாஸ்திரக்கூட்டங்களைத் தள்ளி எது சத்தியமோ அதையே உபாசிக்கவேண்டும். (௪)

(அ-கை) இந்திரியம் ஜயிக்கப்படின் வைராக்கியம் தானே உண்டாகுமெனக் கூறுகின்றார்.—

पृथिव्यां यानि भूतानि जिह्वोपस्थनिमित्तकम् ।
जिह्वोपस्थपरित्यागे पृथिव्या किं प्रयोजनम् ॥ ५ ॥

பிருதிவியின்கண் எவை உண்டாயிருக்கின்றனவோ அவை நாவின்பொருட்டும் உபஸ்தத்தின் பொருட்டுமாம். நாவையும் உபஸ்தத்தையும் கைவிடின் பிருதிவியினால் பிரயோஜனம் யாதுளது. ஒன்றுமில்லையென்றபடி. (ரு)

(அ-கை) இவ்வாறு ஆத்மசமாதியில் நிலைத்தவனுக்கு எங்கும் பிரஹ்மதரிசனமேயன்றி வேறு தரிசனமில்லை யெனக் கூறுகின்றார்.—

तीर्थानि तोयरूपाणि देवाः पाषाणमृन्मयाः ।
योगिनो न प्रपद्यन्त आत्मध्यानपरायणाः ॥ ६ ॥

ஆத்மத்தியானபராயணர்களாகிய யோகிகள் ஜலவடிவமான தீர்த்தங்களையும் கல்மணவடிவமான தெய்வங்களையும் அடைகிறதில்லை. (௬)

(அ-கை) யோகிகளுக்கு எங்கும் பிரஹ்மதரிசனமேயென்னுமிதனை அதிகாரிபேதத்தால் காட்டுகின்றார்.—

अग्निर्देवो द्विजातीनां मुनीनां हृदि दैवतम् ।
प्रतिमास्वल्पबुद्धीनां सर्वत्र समदर्शिनाम् ॥ ७ ॥

காமகாண்டத்திற் பொருந்தியவர்களாகிய துவிஜர்களுக்கு அக்கினியே தெய்வம் முனி (மனனசீலராகியயோகி)களுக்கு இருதயகமலமத்தியிலுள்ள பரிச்சின்ன மூர்த்தியே தெய்வம். சொற்பபுத்தியுடைய பிராகிருதர்களுக்கு மண் கல் முதலிய பிரதிமையே தெய்வம். சமதரிசனமுடைய ஞானிகளுக்கு இவை யாவும் நிச்சயமாகப் பிரஹ்மமேயென்னும் சுருதியினால் எங்கும் (எல்லாம்) தெய்வமாம். (எ)

(அ-கை) ஆதலால் ஞானத்தினாலேயே அறியத்தக்கதாம், ஞானமின்றியபோது பிரஹ்மம் அறியப்படுகிறதில்லையென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

सर्वत्रावस्थितं शान्तं न प्रपश्येज्जनार्दनम् ।
ज्ञानचक्षुर्विहीनत्वादन्धः सूर्य्यमिवोदितम् ॥ ८ ॥

எங்கும் நிலைத்துள்ள சாந்தமாகிய ஜோதிஸ்ஸனைந் அஞ்ஞன் ஞானநேத்திரமின்மையால் அறிகிறதில்லை. அது சூரிய னுதித்ததும் குருடனறியாததுபோலாம். (அ)

(அ-கை) "நிச்சயமாக இவ்வெல்லாம் பிரஹ்ம"மென்னும் இதனைச் சமபாதிக்கின்றார்:—

यत्र यत्र मनो याति तत्र तत्र परं पदम् ।
तत्र तत्र परं ब्रह्म सर्वत्र समवस्थितम् ॥ ९ ॥

எங்கெங்கு மனது செல்லுகின்றதோ அங்கங்குப் பரம (அடையத்தக்க மேலான) பதமாம். எங்கும் நிறைந்துள்ள பரப்பிரஹ்மமே அங்கங்கு முளது. (௯)

(அ-கை) இத்தன்மைய யோகிக்கு யாவும் பிரத்தியக்ஷமாய் விளங்குகின்றன என்று கூறுகின்றார்:—

दृश्यन्ते दृशि रूपाणि गगनं भाति निर्मलम् ।
अहमित्यक्षरं ब्रह्म परमं विष्णुमव्ययम् ॥ १० ॥

பரமமும் (எல்லாவற்றினு மேலானதும்) அக்ஷரமும் (நாசமின்றியதும்) அவ்வியயமும் (குறைதலின்றியதும்) விஷ்ணுவு (வியாபகமு)மாகிய பரமாத்மாவை யானே என்று எவனா அபேதமாக அறிகின்றானோ அவனுக்கு ஞானத்தில் ரூபங்கள் காணப்படுகின்றன. (நாமரூபங்களாகிய ஜகத்து காணப்படுகின்றது என்பது பொருள்) ஆகாயமும் நிர்மலமாகத் தோற்றுகின்றது. (அப்படியே எல்லாவற்றையும் பிரத்தியக்ஷமாய் அறிகின்றான் என்பது பொருள்.) (௧0)

(அ-கை) உட்சென்றவர்களுக்கும் அணிமாதி யோக சித்தியை அபேக்ஷியாது பிரஹ்ம நிஷ்டையே உண்டாக வேண்டுமென்று கூறுகின்றார் :—

दृश्यते चेत्खगाकारं खगाकारं विचिन्तयेत्
सकलं निष्कलं सूक्ष्मं मोक्षद्वारेण निर्गतम् ॥ ११ ॥
अपवर्गस्य निर्वाणं परमं विष्णुमव्ययम् ।
सर्वात्मज्योतिराकाशं सर्वभूताधिवासितम् ॥ १२ ॥

ஆகாய (*ஹம்ஸ) வடிவம் காணப்படின், சகளமும் (தேஜோமயமும்) நிஷ்களமும் (கலாதீதமும்) சூக்ஷ்மமும் (வேறு பிரமாணங்களால் அறியப்படாததும்) மோக்ஷத்துவார (மார்க்க)த்தால் அடையப்படுவதும் மோக்ஷசுகவடிவினதும் மேலாகியதும் வியாபகமானதும் அழிவற்றதும் சர்வ பூதங்களுக்கும் அதிஷ்டானமும் சுயம்பிரகாசமும் சிதாகாயவடிவினதுமாகிய பரப்பிரஹ்மத்தைப் பாவிக்கவேண்டும். (௧௧-௧௨)

(அ-கை) ஏகமாகிய வஸ்துவைப் பற்றுகின்றவனுக்குக் கருமப்பற்றில்லையென்று கூறுகின்றார் :—

अहं ब्रह्मेति यः सर्वं विजानाति नरः सदा ।
हन्यात्स्वयमिमान्कामान्सर्वाशी सर्वविक्रयी ॥ १३ ॥

---

* ஈண்டு (ஹம்ஸம்) அம்சமென்றது பரப்பிரஹ்மம், "हसो विधि. शंकरएव हसो हसश्च विष्णुर्गुरुरेव हसः— பிரஹ்மா ஹம்ஸம் விஷ்ணு ஹம்ஸம் சங்கரன் ஹம்சம் குருவே ஹம்ஸம் என்றல் முதலிய சுருதியிலும்,

எப்போதும் யான பிரஹ்மமென்று எவன் எல்லாவற்றையும் ... கின்ருனே அவன் சகல நிஷித்தங்களையும் புசிக்கின ... எல்லா நிஷித்த த்திரவியங்களையும் விறகின்றவனுமாயிருந்து ... இப்படியாகவே இவ்வெல்லாக்காமங்களையும் நாசஞ்செய்கின்ருன். அதனுற் பாபமற்றவனுகின்ருன். (கங)

(அ-கை) க்ஷணமாத்திரமாயினும் பிரஹ்மத்தியானத்தில் இரம்பப்பவனுக்கு வேறு சுகம் சிந்திக்கவேண்டியதில்லை எனக் கூறுகின்ருர் :—

निमिषं निमिषार्धं वा शीताशीतनिवारणम् ।

अचला केशवे भक्तिर्विभवैः किं प्रयोजनम् ॥ १४ ॥

சீத உஷ்ணங்களைச் சகித்தலோடு ஒரு நிமிஷமாவது அரை நிமிஷமாவது கேசவனிடத்து அசைவின்றிய பக்தி இருக்குமாயின் அந்த யோகிக்கு மற்ற விபவ (விஷயசுக)ங்களால் என்ன பிரயோஜனம்? (கச)

(அ-கை) இத்தன்மைய யோகி மோக்ஷத்தை அபேக்ஷிப்பானுயின் வேறு விஷயத்தைச் சிந்தியானென்று கூறுகின்ருர் :—

भिक्षान्नं देहरक्षार्थं वस्त्रं शीतनिवारणम् ।

अश्मानं च हिरण्यं च शाकं शाल्योदनं तथा ॥ १५ ॥

समानं चिन्तयेद्योगी यदि चिन्तामपेक्षते ।

भूतवस्तुन्यशोचित्वे पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

யோகி சிந்திக்கத்தக்க மோக்ஷத்தை அபேக்ஷிப்பானுயின் தேகரக்ஷணையின பொருட்டு பிக்ஷான்னத்தைச் சிந்திக்கக் கடவன். (நாக்குருசியின்பொருட்டுச் சிந்திக்கலாகாது என்பது பொருள.) வஸ்திரத்தையும் குளிரைத் தடுத்தற்பொருட்டுச்சிந்திக்கவேண்டும. (அலங்காரத்தின பொருட்டுச் சிந்திக்கலாகாதென்பது பொருள்.) ஓடும பொன்னும் சாகமும சாலியன்னமும சமானமாய் (கொள்ளத்தக்கது தள்ளத்தக்கதெனனும வேற்றுமையிலலாத தன்மையாய்)ச சிந்திக்கவேண்டும். சென்ற வஸ்துக்களில சோகபபடாதிருத்தலின புநர்ஜனமமிராது. (கரு-கசா)

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று

உத்தரகீதை முற்றிற்று.



## விற்பனைக்குத் தயாராயுள்ள புஸ்தகங்கள்.

| | |
|---|---|
| ஸ்ரீ விருத்திபபிரபாகரம் | 4—0—0 |
| ஸ்ரீ விசாரசந்திரோதயம் | 1—0—0 |
| ஸ்ரீ பாலபோதம் (வேதாந்தம்) | 1—0—0 |
| ஸ்ரீ விருத்திரத்நாவலி (ஷை) | 0-12—0 |
| அபரோக்ஷாநுபூதி | 0—2—0 |
| போதாரிமை யெனனும் சுவாதமநிரூபணம் | 0—3—0 |
| தததுவபோதம் | 0—1—0 |
| கீதைக்கொதநின முதற்புத்தகம் (உததரகீதை) | 0—6—0 |
| தததுவமஸிமகாவாககியம் | 0—2—0 |
| தாக்கெளமுதி | 0—4—0 |
| ஹடயோகபபிரதீபிகை | 1—8—0 |

மேறகணட புஸ்தகங்களோடு மற்றும் அநேக புஸ்தகஙகள எங்கள் கமபேனியில கிடைக்கும்.

### தொடர்ச்சியாய் அச்சிடப்பட்டுவரும் புஸ்தகங்கள்.

### (க) சாஸ்திரகதம்பம்.

இச்சாஸ்திரகதமபததில வைதீகசாஸ்திரஙகளாகிய நியாயம், வைசேஷிகம், உததரமீமாம்ஸை, பூாவமீமாமஸை, சாஙகியம, யோகம எனனும் ஆறும, அவறறின வழிநூல சாாபுநூலகளும, தத தம் மூலசூததிரசுலோகஙகளுடன பல ஆரியாசாரியாகளாற் செயயப் பட்டுள்ள பாஷிய வியாக்கியானங்களை அநுசரிததுத தமிழில தகக பணடிதாகளாற் செயயபபடும் உரை முதலியவறறோடு வெளிபபடுத தபபடும். அதில் முதற்புத்தகம் ஸ்ரீ வியாஸபகவானால அருளிச் செயயபபட்ட உத்தரமீமாம்ஸை என்னும பிரஹ்மசூத்திரம். இது தேவநாகரி எழுததுக்களால மூலசூத்திரமும், அதற்கு விஷயவாக் கியங்களும, அதற்குத் தமிழில செயயப்பட்ட சூததிரவுரை விஷய வாக்கிய உரைகளும், விசேட உரையும் சேரதது அசசிடப்பட்டு வருகின்றது. இம்முதற்புத்தகம் சுமார் 40 பாரம் ஆகும். நலல காகி

ததில் மிகவும் சுத்தமாய்ப் பதிப்பித்து வெளிப்படுத்தப்படும். இச்சாஸ்திரகத்தமபமூலமாய வெளிபபடும புஸ்தகஙகள் ஒவவொன றும முடிநதவுடன தனிததனி அதன விலையுடன வெளிவரும்.

## (உ) கீதைக்கொத்து.

இககொத்தில் உத்தரகீதை, ராமகீதை, பகவற்கீதை, குரு கீதை முதலிய அநேக கீதைகள் தக்க பண்டிதாகளால் தமிழில மொழிபெயாககப்பட்டு மூல சுலோகஙகளுடன மிக நேர்ததியான கடிதததில ராயல 16 பகக அளவில சுததமாய அச்சிடப்பட்டு வரு கினறன. இககொததில் இபபோது முதறபுததகமாக மகாபாரதத் திலுளள உததரகீதை நடந்தேறியது. இக்கொத்துவடிவமாய வெளிபபடும கீதைகள ஒவவொனறும முடிந்தவுடன தனிததனி யாய அதன விலையுடன வெளிவரும. உததரகீதையின விலை அணா 6. கையொபபக்காரருககு அணா 4.

மேறகணட சாஸதிரகததமபததையும் இக்கொத்துவடிவாய வெளியாகும கீதைகளையும் வாஙக விருமபுவோா தஙகள பெயா விலாசம முதலியவறறை முனனரே எழுதியனுபபினால் அதனை ரிஜி ஸடரில பதிவுசெயது வைததுககொணடு புஸதகம முடிநதவுடன V P மூலமாய அனுபபுவோம. V. P. தபாறசெலவு வேறு. இச சாஸதிரகதம்பததையும கொததையும் வாஙகுவதாக முன கை யொப்பம் அனுபபுவோருக்கு ஒவவொரு புஸ்தகமும முக்கால விலை ககுக கொடுககபபடும் இசசாஸ்திரகதமபததிறகும கொததிறகு மாக கையொப்பம அனுபப விருமபுவோா 1903-ஞு மாாசசுமீ 1உ முதல 3 மாதஙகளுககுள அனுபபவேணடும. அதன பின அனுபபுவோருககு அதுவரையில முடிந்த புஸ்தகஙகளுககு முழுவி லையும அதறகுமேல வெளிபபடும புஸதகஙகளுககு ¾ விலையும போடப்படும். பததுப புஸ்தகங்களுககுக கையொபபம் அனுபபு வோருககு ஒரு புஸதகம் இனாமாய்க்கொடுக்கபபடும்.

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்,
"ஸ்ரீ வித்தியாவிநோதினி பிரஸ்"
தஞ்சாவூர்.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁॥

𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃॥

## 𑌵𑌿𑌵𑍇𑌕𑌚𑍂𑌡𑌾𑌮𑌣𑌿𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃



𑌣𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑍇𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌫𑍁𑌟𑌂 𑌯𑌤𑌃 ॥ ௭ ॥ 𑌅𑌤𑍋 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑍈 𑌪𑍍𑌰𑌯𑌤𑍇𑌤 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍁𑌖𑌸𑍍𑌪𑍃𑌹𑌸𑍍𑌸𑌨𑍍 । 𑌸𑌨𑍍𑌤𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 𑌸𑌮𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 𑌤𑍇𑌨𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 ॥ ௮ ॥ 𑌉𑌦𑍍𑌧𑌰𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌗𑍍𑌨𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌾𑌰𑌿𑌧𑍌 । 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌤𑍍𑌵𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑌾 ॥ ௯ ॥ 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌵𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌯𑍇 । 𑌯𑌤𑍍𑌯𑌤𑌾𑌂 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑍈𑌰𑍍𑌧𑍀𑌰𑍈𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌸 𑌉𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑍈𑌃 ॥ ௰ ॥ 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍁 𑌵𑌸𑍍𑌤𑍂𑌪𑌲𑌬𑍍𑌧𑌯𑍇 । 𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌵𑌿𑌚𑌾𑌰𑍇𑌣 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍋𑌟𑌿𑌭𑌿𑌃 ॥ ௧௧ ॥ 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑌿𑌚𑌾𑌰𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾 𑌰𑌜𑍍𑌜𑍁𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌵𑌧𑌾𑌰𑌣𑌾 । 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌦𑌿𑌤𑌮𑌹𑌾𑌸𑌰𑍍𑌪𑌭𑌯𑌦𑍁𑌃𑌖𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑍀 ॥ ௧௨ ॥ 𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌵𑌿𑌚𑌾𑌰𑍇𑌣 𑌹𑌿𑌤𑍋𑌕𑍍𑌤𑌿𑌤𑌃 । 𑌨 𑌸𑍍𑌨𑌾𑌨𑍇𑌨 𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌶𑌤𑍇𑌨 𑌵𑌾 ॥ ௧௩ ॥ 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑌮𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍇 𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 । 𑌉𑌪𑌾𑌯𑌾 𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌹𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 ॥ ௧௪ ॥ 𑌅𑌤𑍋 𑌵𑌿𑌚𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍋𑌰𑌾𑌤𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 । 𑌸𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌦𑌯𑌾𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌂 𑌗𑍁𑌰𑍁𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥ ௧௫ ॥ 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍂𑌹𑌾𑌪𑍋𑌹𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃 । 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌮𑍁𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 ॥ ௧௬ ॥ 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑍋 𑌵𑌿𑌰𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌶𑌮𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌶𑌾𑌲𑌿𑌨𑌃 । 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌰𑍇𑌵 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾 𑌮𑌤𑌾 ॥ ௧௭ ॥ 𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿 𑌕𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌮𑌨𑍀𑌷𑌿𑌭𑌿𑌃 । 𑌯𑍇𑌷𑍁 𑌸𑌤𑍍𑌸𑍍𑌵𑍇𑌵 𑌸𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑌦𑌭𑌾𑌵𑍇 𑌨 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ॥ ௧௮ ॥ 𑌆𑌦𑍌 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑌸𑍍𑌤𑍁

𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 𑌪𑌰𑌿𑌗𑌣𑍍𑌯𑌤𑍇। 𑌇𑌹𑌾𑌮𑍁𑌤𑍍𑌰𑌫𑌲𑌭𑍋𑌗𑌵𑌿𑌰𑌾𑌗
𑌸𑍍𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍॥ ௧௯॥ 𑌶𑌮𑌾𑌦𑌿𑌷𑌟𑍍𑌕𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌵𑌮𑌿
𑌤𑌿 𑌸𑍍𑌫𑍁𑌟𑌮𑍍। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑌗𑌨𑍍𑌮𑌿𑌥𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌰𑍂𑌪𑍋 𑌵𑌿𑌨𑌿
𑌶𑍍𑌚𑌯𑌃॥ ௨௰॥ 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌵𑍇𑌕𑌸𑍍𑌸𑌮𑍁𑌦𑌾
𑌹𑍃𑌤𑌃। 𑌤𑌦𑍍𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌜𑌿𑌹𑌾𑌸𑌾 𑌯𑌾 𑌦𑌰𑍍𑌶𑌨𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌦𑌿
𑌭𑌿𑌃॥ ௨௧॥ 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑍇 𑌭𑍋𑌗𑌵
𑌸𑍍𑌤𑍁𑌨𑌿। 𑌵𑌿𑌰𑌜𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑌵𑍍𑌰𑌾𑌤𑌾𑌦𑍍𑌦𑍋𑌷𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌮𑍁𑌹𑍁
𑌰𑍍𑌮𑍁𑌹𑍁𑌃॥ ௨௨॥ 𑌸𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌨𑌿𑌯𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌮𑌨𑌸𑌶𑍍𑌶𑌮 𑌉𑌚𑍍𑌯
𑌤𑍇। 𑌵𑌿𑌷𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑍍𑌯 𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌂 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌗𑍋𑌲𑌕𑍇॥
𑌉𑌭𑌯𑍇𑌷𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑌦𑌮𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃। 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾
𑌨𑌾𑌲𑌂𑌬𑌨𑌂 𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌰𑍇𑌷𑍋𑌪𑌰𑌤𑌿𑌰𑍁𑌤𑍍𑌤𑌮𑌾॥ ௨௪॥ 𑌸𑌹𑌨𑌂
𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍। 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌵𑌿𑌲𑌾𑌪
𑌰𑌹𑌿𑌤𑌂 𑌸𑌾 𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑌾 𑌨𑌿𑌗𑌦𑍍𑌯𑌤𑍇॥ ௨௫॥ 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌗𑍁𑌰𑍁
𑌵𑌾𑌕𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌣𑌮𑍍। 𑌸𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌕𑌥𑌿𑌤𑌾
𑌸𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌯𑌯𑌾 𑌵𑌸𑍍𑌤𑍂𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇॥ ௨௬॥ 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌂
𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾। 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑍁
𑌕𑍍𑌤𑌂 𑌨 𑌤𑍁 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌲𑌾𑌲𑌨𑌮𑍍॥ ௨௭॥ 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌾𑌨𑍍
𑌤𑌾𑌨𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌾𑌨𑍍। 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌬𑍋𑌧𑍇
𑌨 𑌮𑍋𑌕𑍍𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌤𑌾॥ ௨௮॥ 𑌮𑌨𑍍𑌦𑌮𑌧𑍍𑌯𑌮𑌰𑍂𑌪𑌾𑌪𑌿
𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌶𑌮𑌾𑌦𑌿𑌨𑌾। 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨 𑌗𑍁𑌰𑍋𑌃 𑌸𑍇𑌯𑌂
𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌫𑌲𑌮𑍍॥ ௨௯॥ 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌚 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁
𑌤𑍍𑌵𑌂 𑌤𑍀𑌵𑍍𑌰𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵𑌾𑌰𑍍𑌥𑌵𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃
𑌫𑌲𑌵𑌨𑍍𑌤𑌶𑍍𑌶𑌮𑌾𑌦𑌯𑌃॥ ௩௰॥ 𑌏𑌤𑌯𑍋𑌰𑍍𑌮𑌨𑍍𑌦𑌤𑌾 𑌯𑌤𑍍𑌰 𑌵𑌿𑌰𑌕𑍍𑌤

